ஓம்

# அன்பானந்தன்

அல்லது

## அருஞ்செல்வன் விளைந்த பெருஞ்செல்வம்

ஒரு தமிழ் நாவல்

'ஞானகாந்தி' 'காதலி?'
'சந்திரசேகரி' முதலிய நூற்களியற்றிய

செ. இராஜு செட்டியார் அவர்கள், எம். பி. பி. ஐ.,

இயற்றியது.



சென்னை:
1917

TO

SREEMAN

S. Rm. M. Ct. Pethachi Chettiar Avl.,

M. R. A. S.

ZAMINDAR OF ANDIPATTI

*VICE-PRESIDENT OF*

*THE MADURA TAMIL SANGAM*

AND

*CHAIRMAN OF THE MUNICIPAL COUNCIL, KARUR*

THIS BOOK IS APPROPRIATELY

DEDICATED

WITH KIND PERMISSION

AS A TOKEN OF LOVE AND FRIENDSHIP

BY HIS FRIEND

THE AUTHOR



## உரிமையுரை

---

'முத்தாந்த வீதி முளரிதோறும்' அன்பா! என்
சித்தாந்தம் எல்லாம் தெரிவாய் நீ—பேத்தாச்சி!
நந்தம் இடைவளரும் நட்பிற்கோர் நற்குறியாய்
இந்நூல் நிற்களித்தேன் இன்று.

இன்று முதலென்றும் இந்நூலும் நந்நட்பும்
ஒன்றாய் விளங்கி ஒளிகாட்டி—நின்று
நிலவு மெனத்துணிந்தே நின்பேரோ டித்தை
உலவிவர விட்டேன் உவந்து.

C. M. R.

# முகவுரை

---

அன்பானந்தன் என்னும் இந்நூலை இயற்றிவந்த பொழுதும், இதனை அச்சிட்டு வந்தபொழுதும், இவ்வுருவில் இதனைத் தமிழுலகத்திற்கனுப்பும் இப்பொழுதும் எனது மனோபாவக உணர்ச்சி, பொறாமை, வஞ்சகம் முதலிய இழிகுண வசப்பட்டு இன்பமயமாயிருக்கவேண்டிய இவ்வுலகம் துன்பமயமாயிருப்பதை நினைவிற்குக் கொண்டுவந்து மனத்தைவருத்தியது வருத்துகிறது. காக்கை, எறும்பு முதலியஅற்ப ஜீவஜந்துக்களும் தம்முள் ஒற்றுமையுற்று ஒன்றுகலந்து இன்பமாய் வாழ்கின்றன. ஆனால், மனிதர்களாய்ப் பிறந்த நாம் ஒருவரையொருவர் பகைத்தும் வெறுத்தும் வருகின்றோம். இது தானா நம்முடைய உயர்வு? இது தானா நாகரீக விருத்தி ?

என் சகோதர சகோதரிகளே! நாம் கடவுளுடைய கருணைக்குப் பாத்திரராகவேண்டுமானால்—எல்லாப் பிறவியிலும் மேலானது மனிதப்பிறவி யென்பது உண்மையானால்—நாம் எல்லோரும் ஒருதாய் வயிற்றிற் பிறந்த சகோதர சகோதரிகள்போல உண்மையன்பும் நேசமும் உடையவர்களாயிருத்தல் வேண்டும். அன்பே பிரதானம்! அன்பே பேரின்பம்!

‘ அன்பின் வழிய துயிர்நிலை. அஃதிலார்க்<br>
கென்புதோல் போர்த்த உடம்பு ’

என்றார் ஆசிரியர் திருவள்ளுவர். ஆதலால், அந்த அன்பின் உயர்வை எடுத்துக் காட்டவே இந்நூல் எழுதப்பட்டது.

இந்நூலின் கதாநாயகன் பெயரே இந்நூற்கும் பெயராய் அமைந்தது. அன்பானந்தன் என்னும் பெயரால் இரண்டு உண்மைகள் அறிய

லாகும் : அன்பு, ஆனந்தத்தில் முடிந்து அதனோடு ஒன்றாகி விளங்கும் என்பதொன்று; மற்றொன்று இந்நூல் எந்தப் பாஷையில் எழுதப் பட்டுள்ளதோ, எந்தப் பாஷை நமக்குத் தாய்ப் பாஷையாக வுள்ளதோ, அந்தப் பாஷையின் பெருமை இப்படிப் பட்டதென்பது. தமிழ் என்னும் சொல்லே இனிமை என்று பொருள்படும். அன்பைவிட இனிமையுள்ளது வேறில்லை. இவ்வன்பும் அவ்வினிமையும் கலந்தால் ஆனந்தம் பிறக்கத் தடையென்ன ? இந்த ஆனந்தம் தமிழ்ப்பாஷை முழுவதும் நிரம்பியிருக்கிறது என்பதைக் குறிப்பிக்கவே, தமிழ் எழுத்துக்களின் முதலெழுத்தாகிய ' அ ' என்பதும், இறுதியெழுத்தாகிய ' ன் ' என்பதும் இந்நூற்பெயர்க்கு முதலும் இறுதியுமாக அமைந்தன.

ஞானகாந்தி, காதலி, குசாவதி முதலிய நாவல்களை ஆதரித்த என் சகோதர சகோதரிகள் இதையும் ஆதரித்து, எந்த அன்பால் இந்நூல் எழுதப்பட்டதோ அந்த அன்பால் என் முயற்சி பலன்பெறச் செய்வார்களென்று நம்புகிறேன்.

' குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன். '

' ஸ்ரீராஜேந்திர விலாஸ் '
சென்னை.
1—5—17.

சே. இராஜு.

---

# பொருளடக்கம்.

## BY THE SAME AUTHOR.

Gnanakanthi (*2nd edition.*)
Lover ?
Kuchavathi.
Chandrasehari.

***In the Press***

Gunàvathi *or the barbarity of Civilisation.*
Baskharan *or young age and ripe wisdom.*

---

## இந்நூலாசிரியர் இயற்றிய நாவல்கள்

ஞானகாந்தி. (இரண்டாம் பதிப்பு)
காதலி ?
குசாவதி.
சந்திரகேசரி.

அச்சில் உள்ளவை.

குணவதி *அல்லது நாகரீகத்தின் அநாகரீகம்.*
பாஸ்கரன், *அல்லது சிற்றுருவும் பேரறிவும்.*

ஓம்

# அஸ்பானந்தன்

அல்லது

# அருஞ்செல்வன் விழைந்த பெருஞ்செல்வம்

## I

"நல்லாரைக் காண்பதுவு நன்றே"

அமைதி! ஆற்றில் எறியப்பட்ட துரும்பைப் போல மேலாக மிதந்து செல்லும் மனத்தையும், அவ்வாற்றிலேயே எறியப்பட்ட ஒரு கல்லைப்போல, ஒரு நிலையிற் படிந்து நிற்கச் செய்யவல்ல அற்புதப் பேராற்றல்வாய்ந்த அந்த அமைதி சிறந்து விளங்குங் காலம், இருள் நிறைந்த நடுநிசியேயன்றோ? ஒருதிறப்படாது பல திறப்பட்டு விளங்கும் இவ்வுலக இயற்கை, நினைத்தாலும் மனங்குழம்பும் அவ்வளவு விரிவுடையதாயினும், அவ்விரிந்த வேறுபாட்டினிடையே ஓர் ஒருமைப்பாடும், அதன் பெருங்குழப்பத்தினூடே ஓர் ஒழுங்கும் கண்டு, உலகமுதற்காரணனான ஒரு பெருங் கடவுளின் அற்புதப்பேராற்றலை அறிவுடையோன் ஒருவன் நினைந்து நினைந்து, வியந்து வியந்து, உள்ளம் உவந்து, தன்னை மறந்து, ஆனந்த வாரிதியில் ஆழ்வதற்கேற்ற காலம் அந்நடுநிசியே! 'தொழுதூண்சுவையின் உழுதூண்சுவை இனிதே' எனினும் "உழுதூண் சுவையின் எழுதூண்சுவையினிது" எனக்கண்ட நூலாசிரியன் ஒருவன், தனது "மனோபாவக உணர்ச்சி" (Imagination) என்னும் நிறைநீர் ஏரி, இறைவன் அருண்மாரியால் நிறைவுற்றுப் பெருக்கெடுத்துக் கரைகடந்து வழிய, அதனைப் பயன்படுத்தல் வேண்டி—மக்கள் மனமாகிய விளைபுலத்தில் அது பாய்ந்து, அறிவு, ஒழுக்கம் முதலிய பயிர்களை வளர்த்தல் வேண்டி—மண்வெட்டியால் வாய்க்கால் வகுப்பது போன்று, எழுதுகோலால் நூல்வகுக்குங்

காலமும் அந்நடுநிசியே! கள்ளர், கொலைஞர், காமுகர், முதலிய கீழ்மக்கள், தம் புன்செயல்களைக் குறித்து வெளிப்புறப்படுங்கால மும் அந்நடுநிசியே! காதலன் ஒருவன் தன்னருகிலில்லாத தனது அருமைக் காதலியை நினைத்து, அவள் கருங்குழற் கற்றையையும், அம் பிற் பிறழும் வரிநெடுங்கண்களையும், இங்கித மொழிதரு செங்குமுத வாயினையும், கொஞ்சிக் குலாவி முத்தம்தா அழைக்கும் கோவையொத்த இதழ்களையும், முத்தைநகைக்கும் ஒத்தமைந்த பற்களையும், இன்னும் நினைக்குந்தோறும் வளரும், அவளது எல்லையற்ற வேறுபல நலங்களை யும் எண்ணியெண்ணி மகிழுங் காலமும் அந்நடுநிசியே! தான் காத லித்த காதலன் கைக்கெட்டப் பெறாத காதலியொருத்தி, தன் உள்ளத் துள்ள துயரைத் தள்ளவும் மாட்டாமல், வாய்விட்டொருவரிடம் விள் ளவும்மாட்டாமல், படுக்கையிற் புரண்டு புரண்டு பெருமூச்செறிந்து வருந்துங்காலமும் அந்நடுநிசியே! நெறிதிறம்பா நன்மக்கள் அயர்ந்த நித்திரையில் ஆழ்ந்து இளைப்பாறுங் காலமும் அந்நடுநிசியே! நமது சுவை பொருந்திய கதை தொடங்குங் காலமும் அந்நடுநிசியே!!

எங்கும் அமைதி நிறைந்திருந்தது; இருள் பரவி யிருந்தது; நீல வர்ணப் பட்டாடையில் அமைத்த, சரிகைப் புள்ளிகள்போன்று, நெடு வானத்திடை இங்குமங்குமாய், சில நட்சத்திரங்கள் பிரகாசித்துக் கொண்டிருந்தன. அப்போது, மேனாட்டு நாகரீகம் என்னும் பேராறு, தடுப்பதற்கு முடியாத வேகத்துடன் பெருக்கெடுத்து வர, அப்பெரு வெள்ளத்திற் கஞ்சாது, அதில் மூழ்கி, அடித்துக்கொண்டுவரும் உய ர்ந்தகுணங்களாகிய ஆணிமுத்து, கொடிப்பவளம் போன்ற உயர்பொரு ட்களைக் கைப்பற்றிக்கொண்டு நீந்திக் கரைசேர அறியாது, அதன் மேல் மிதந்துவரும் இழிந்த குணங்களாகிய செத்தை, குப்பை முதலிய அற்பபொருட்களைக் கைக்ககப்பட்ட மட்டில் வாரிக்கொண்டு அவ் வெள்ளத்தால் ஈர்க்கப்பட்டு, அதனூடேசென்று கரைகாணாது தத் தளிக்கும் சென்னைமாநகரின் தென்பகுதியில், செல்வர்களே மிகுதி யாக வசிக்கும் ஓரிடத்தில், "செல்வம்" என்பதை எல்லோரும் அறி ந்துகொள்ளும்படி பெரிய எழுத்துக்களால் எழுதினாற்போல, மிக விசாலமும் அழகிய தோற்றமும் வாய்ந்ததாய், கண்ணைக்கவரும் சிற்ப வேலைப்பாடுகளோடு கட்டப்பட்ட மூன்றடுக்கு மாளிகையொன்றின், இரண்டாவது மாடியின் இடைமுற்றத்தில், இருவர் இருநாற்காலி

களில்—பஞ்சணையிட்ட இருநாற்காலிகளில்—சிறிது சாய்ந்தவண்ண மாய் உட்கார்ந்திருந்தார்கள். வெளிப்பார்வைக்கு அவர்கள் இருவர் நிலைமையிலும் கவனிக்கத்தக்க ஒரு விசேடமும் காணப்படவில்லை. அவ்விருவருள் ஒருவர் வயோதிகர்; மற்றவர் வாலிபப் பருவங்கடந்த வர். இருவரும் அமைதியாய்ச் சுருட்டுப் பிடித்துக்கொண்டிருந் தார்கள். அவ்வாறு அவர்கள் சுருட்டுப் பிடித்துக்கொண்டிருந்தது, அதில் ஏதேனும் இன்பம் இருப்பதாக எண்ணியல்ல, அதைவிட மேலான காரியம் அப்போது ஒன்றும் செய்வதற்குத் தோற்றுமையி னாலேயே என்பது உண்மை. இருவரும் ஏதோ சிந்தனையில் ஆழ்ந் திருந்தார்கள். சற்றுமுன் அவர்கள் உரையாடிக்கொண்டிருந்தனராயி னும், இப்போது அச்சம்பாஷணை நின்று போயிருந்தது. இருவரில் எவரும் அம்மௌனநிலையைக் கலைக்க விருப்பமுடையவராகத் தோற்ற வில்லை.

காற்று விர்ரென்று வீசியது. மாளிகையின் அருகிருந்த மரங்கள் அலைப்புண்டன. மேகத்தால் மறைப்புண்டிருந்த நட்சத்திரமொன்று, மேகம் நீங்க, திடீரென்று ஆகாயத்தில் கொளுத்தப்பட்ட ஒரு விளக்குப் போன்று பிரகாசித்தது. மாடியில் உட்கார்ந்திருந்த இருவரில் பெரிய வர், தமது கண்களை எறிட்டு அந்நட்சத்திரத்தை நோக்கினார். பிறகு, அவர் சிறிது நிமிர்ந்து உட்கார்ந்து, சற்றுமுன் இடையில் நின்று போன சம்பாஷணையைத் தொடர்ந்து, அதன் முடிவுவரை செல்லத் தீர்மானித்தவர் போலப் பேச ஆரம்பித்தார்.

"என் அந்தரங்க எண்ணங்கள் அனைத்தையும் சிறிதும் ஒளியா மல் தங்களிடம் அறிவித்து விட்டேன். என் அறிவு பிறழ்ந்து போயிருக்கிறதென்றும், நானொரு பயித்தியக்காரனென்றும் தாங்கள் நினைக்கிறீர்கள். நல்லது; பயித்தியக்காரனாக இருப்பதில் எனக்குத் திருப்திதான். எப்படியிருந்தபோதிலும் நான் கூறியது உண்மை யென்பதை உங்களாலும் மற்றெவராலும் மறுக்க முடியாது" என்றார் வயோதிகர்.

"உண்மைதான், அதில் சிறிதும் தவறில்லை" என்று கூறி, மற் றவர் சற்று நிமிர்ந்து உட்கார்ந்து, பாதி எறிந்துபோன தமது சுருட்

டைத் தூர எறிந்துவிட்டுத் தம் உரையைத் தொடர்ந்து, "ஆயினும், மனதிற்குச் சங்கடத்தைத் தரும் உண்மைகளில் ஒன்றாகிய இதை அடிக்கடி நினையாமலும், நினைந்து வருந்தாமலும் இருப்பது நலம். நாம் அனைவரும், நினைத்தால் துன்பத்தை விளைக்கும், கிழத்தன்மையை அடைதல் நிச்சயம். இன்னும் அதிகத் துன்பந்தருவதும், நினைக்கும் போதெல்லாம் நெஞ்சை நடுங்கச் செய்வதுமான "சாவு" என்னும் கொடிய நிலையை நாமெல்லாம் ஏதோ ஒரு காலத்தில் அடையவேண்டு மென்பதும் நிச்சயம். ஆனால், இக்கொடிய விஷயங்களை, அவைகள் தோன்றுவதற்கு முன்னே, நாம் எண்ணி யெண்ணி ஏன் மனத்தைப் புண்படுத்திக் கொள்ளவேண்டும் ?" என்று வினவினார்.

வயோதிகர், "வேண்டுவதில்லை. அவ்வாறிருந்தும், மரணசாஸனம் (will) எழுதுவதைப்பற்றித்தானே தங்களுக்கு அதிகக் கவலையாய் இருக்கிறது" என்று பரிகாசக் குறிப்புடன் கூறினார்.

"அதற்கென்ன! அது அவசியம் செய்யவேண்டிய வேலைதான். இளம்பிராயத்தினிற் கூட, திரண்ட செல்வமுடையவரானால், மரணசாஸனம் எழுதிவைத்திருக்கவேண்டும். இல்லாவிடில், தமக்குப் பிற்காலம் தமது சொத்துக்களுக்காக, 'நெருங்கிய சுற்றத்தார்கள்' தமக்குள் வாதாடி, வழக்காடி, பொருளையெல்லாம் கோர்ட்டில் தொலைத்துத் திண்டாடித் தெருவில் நிற்பார்கள். என் அநுபவத்தில், எனக்குத் தெரிந்தமட்டில், 'நெருங்கிய பந்துக்கள்' என்று சொல்லப்படுகிறார்களே, இவர்களெல்லாம் வேட்டைநாய் போன்றவர்கள். கொஞ்சம் பாத்தியமிருக்கிறதாகக் காட்டி விட்டால் போதும்; இரத்த வாசனை கண்ட நாய்போல வாலைக்குழைப்பார்கள்; முகத்தை நெளிப்பார்கள். இவ்வளவிலும் பயன் படாவிடில் உறுமுவார்கள்; வாசனை வரும் வழியெல்லாம் நாக்கிலிருந்து நீர் ஊறிச் சொட்டச் சொட்ட ஓடித்திரிவார்கள்; பட்டினிகிடந்த நாய்போலப் படாதபாடும் படுவார்கள். இத்தனை வருஷங்களாக நானும் வக்கில் (Vakil) உத்தியோகஞ் செய்து வருகிறேன். என் அநுபவத்தில், சொத்து வைத்துவிட்டு இறந்துபோன பந்துவைப்பற்றி உள்ளமையில் விசனப்பட்ட ஒரு வார்சுதாரரைக் கூட நான் பார்த்ததில்லை" என்றார் வக்கீல் சிவஞானம்.

அப்போது வயோதிகர் வக்கீலை நோக்கி, "சிவஞானம்! அப்படி வாருங்கள். அதைத்தான் நான் சொல்லவந்தேன். வயோதிகம் வந்து

விட்டதே என்று நான் வருத்தப்படவில்லை. எல்லார்க்கும் இயல்பாக ஒரு காலத்தில் வரவேண்டிய மரணம் விரைவில் நமக்கு வந்துவிடுமே என்றும் நான் வருந்தவில்லை. நான் இறந்த பிறகு, என் இருப்பிடத்தில் வந்து அமருபவர் யார்? என் வாழ்நாளில் நான் வருந்திச் சம்பாதித்த பொருளெல்லாம் என்னவாகும்?—எதற்காகும்?—என்ற எண்ணங்களே என் மனத்தை அலைக்கின்றன" என்றார்.

இதைக்கேட்ட சிவஞானம் சிறிது நேரம் முதியவரைப் புன்னகையோடு உற்று நோக்கிய பின்னர், மிகவும் அமர்ந்த குரலில், "அப்படிப்பட்ட எண்ணங்களெல்லாம் எண்ணித் தாங்கள் கவலைப்படுவதற்குக் காரணம் யாதென எனக்கு விளங்கவில்லை. அங்ஙனம் கவலைப்படுவதால் பயனென்ன? வயதில் முதியவராய் இருப்பினும் உங்களுடைய சரீரதிடம் கொஞ்சமேனும் குறைவுபடவில்லை. மரணகாலம் சமீபித்துவிட்டதாகத் தாங்கள் நினைப்பதற்கு நியாயமில்லை. அனாவசியமாகக் கவலைகொண்டு தங்களைத் தாங்களே துன்பப்படுத்திக் கொள்ளுகிறீர்கள். இதுவரையில் தாங்கள் எவ்வகையிலும் கவலையற்று இருக்கிறீர்களென்றே நான் கருதியிருந்தேன். தங்களுக்கு எதில் கவலையிருக்கக் கூடும்? அன்பரே!—அரசர்களும் கண்டு பொருமைப் படத்தக்க அவ்வளவு திரண்ட செல்வமுடைய தங்களுக்கு 'கவலை' என்பது எங்கிருந்து வரும்?"' என்றார்.

அன்பானந்தர் புன்னகை புரிந்தார்; எனினும் அவர் சிரிப்பில் சிறிது விசனக்குறி தோற்றியது. "அரசர்களுக்கும் திரண்ட செல்வர்களுக்கும் மட்டும் பூரண இன்பம் என்று விதித்திருக்கிறதா? இல்லையே. உலகானுபவம் அறிந்த தங்களுக்கு இந்த உண்மை அவசியம் தெரிந்திருக்கவேண்டும். என்னைப் பொறுத்த மட்டில் சொல்கிறேன். வாலிபப்பருவங் கடந்தது முதல் எனக்கு இன்பமென்பது சிறிதுமில்லை. இது தங்களுக்கு ஆச்சரியமாகத் தோற்றலாம். ஆனால் இது முற்றும் உண்மை" என்றார் அன்பானந்தர்.

"நல்லது, தாங்கள் இன்பமென்று கருதியிருந்ததெல்லாம் இளமையைப்பற்றியது தானே?" என்று வக்கீல் இடை மறித்துக் கேட்டார்.

இம்முறையும் அன்பானந்தர் நகைத்து, "இப்படிச் சொல்வீர்களென்று நினைத்தேன். யாரும் இப்படித்தான் சொல்வார்கள். ஆனால், பெரும்பாலும் வயோதிகரைப் பார்க்கிலும் இளைஞர் மனக்குறையுடையவர்களா யிருக்கிறார்கள். வாலிபத்தில் எனக்கிருந்த இன்பத்திற்கு அப்பருவமே ஒருவகையில் காரணமாயிருந்த தென்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அதுவே முழுக்காரண மென்பது தவறு. அது ஒருநாளும் இன்பத்திற்கு முழுக்காரணமாக மாட்டாது. அதைவிட முக்கியமான காரணம் ஒன்றிருந்தது. அக்காரணம் நீங்கியது. அதோடு என் இன்ப வாழ்க்கையும் ஒழிந்தது." என்று மொழிந்து, முன்போலவே நாற்காலியில் சாய்ந்து கொண்டு, ஆகாயத்தில் மேகநீக்கத்தால் வெளிப்பட்டுப் பிரகாசித்துக்கொண்டிருந்த நட்சத்திரத்தைக் கூர்ந்து நோக்கினார். சில விநாடிகள் சொல்லவும், அவர் திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவர்போல சிவஞானத்தை நோக்கி, "நண்பரே! என்னுடைய மனக்குறை இன்னதென்பதை விவரமாகச் சொல்லுகிறேன், கேட்பீரா? 'ஊருடன் ஒத்துவாழ்' என்று பள்ளிக்கூடத்துப் பாடம் எனக்கு போதிப்பதென்றால் நான் ஒன்றும் சொல்லவில்லை" என்றார்.

சென்னையிலுள்ள நூற்றுக்கணக்கான வக்கில்களுள் பிரக்யாதி வாய்ந்த சிவஞானம் அன்பானந்தரை நோக்கி நகைத்து, "சொல்லுங்கள் சொல்லுங்கள்; கேட்கிறேன். ஆனால் உங்களுடைய போலிவிசாரங்களுக்கு அனுதாபமுற்று ஆறுதல் கூறுவேனென்று எதிர் பார்க்க வேண்டாம்." என்றார்.

"அனுதாபமா! நான் ஒரு சிறிதும் அதைத்தங்களிடத்தினின்று எதிர்பார்க்கவில்லை. தங்களிடத்து மட்டுமல்ல; தற்போது மட்டுமல்ல; என்வாழ்நாள் முற்றிலும், எவரிடத்திருந்தும், எக்காலத்திலும், நான் 'அனுதாபம்' என்ற அந்த ஒன்றைச் சற்றும் எதிர்பார்த்ததில்லை. ஏனெனில் மிகவும் நெருங்கிய உரிமையுடையவர்களிடமிருந்து கூட உண்மை அனுதாபம் பெறமுடியாதென்பது எனக்கு நன்றாய்த் தெரியும். அனுதாபம்! உண்மையில் அதைப்பெறுபவன் இவ்வுலகத்தில் எவனுமில்லை—வாழ்க்கைத்துணை யென்று தான் கைப்பிடித்த தன் மனைவியிடமிருந்து கூட உண்மை அனுதாபத்தை ஒருவன் பெறுவதரிது. மேலும் ஆண்மை என்பது ஒரு சிறிதேனும் உடைய எவனும் அதைப்

பெற வேண்டான். அது ஒரு புற மிருக்கட்டும்; நான் சொல்லவிரும்பியதைச் சொல்கிறேன். நான் சிறுவனுயிருந்தபோது மிகவும் இன்பமாகக்காலங்கழித்தேன். அதற்கு முக்கிய காரணம், எனக்கு நல்ல விஷயங்கள் எல்லாவற்றிலு மிருந்த நம்பிக்கை. இனிமையும் நன்மையுமுடைய வென்று கூறப்படும் உண்மைகள் எவற்றிலும் எனக்குச் சந்தேகம் உண்டானதில்லே. கடவுளின் பேருட் பெருமையிலும், உலகத்து உயிர்கள் யாவும் அடைதற்கு அவர் குறித்துவைத்துள்ள பேரின்ப நிலையிலும், எனக்கு முழுநம்பிக்கை யிருந்தது. செந்தமிழ்—இப்போதுள்ள சமஸ்கிருதச் செந்தமிழல்ல; திருவள்ளுவர், நக்கீரர் முதலிய பெரும்புலவர் போற்றிய சுத்தச் செந்தமிழ்—இருந்து வளர்ந்த மதுரைமாநகரில் நானும் பிறந்து வளர்ந்தேன். அங்கு வசித்திருப்பது ஓர் இன்பமாயிருந்தது. மா, கொய்யா, பலா முதலிய மரங்களின் வாசனையை வாரி வீசும் குளிர்ந்த சுத்தக்காற்றும், குழந்தைகள் விளையாடுவதுபோல ஓடிவரும் வைகைநதியின் இனிய தெள்ளிய நீரும், அந்நதியை யடுத்துள்ள தோப்பு முதலியவைகளும்—ஆகிய இயற்கை அழகுகளெல்லாம் என்மனத்தைக் கவர்ந்தன; என் உள்ளத்தில் ஒருவகையான ஆவலேத் தூண்டின. பிறகு, அந்த ஆவல் அடங்கவேயில்லே. இன்னும்—என் வாழ்நாளிற் பெரும் பகுதியைக் கழித்துவிட்டேனுயினும்—இன்னும் அப்பொழுதெழுந்த ஆவல் அடங்கவில்லே. மனிதர்கள், வாழ்க்கையில் எவ்வளவு திருப்தியை அடையக்கூடுமோ அவ்வளவையும் அடைவதற்கு எவ்வளவு காரியங்கள் செய்வார்களோ, அவ்வளவையும் செய்து விட்டேன். எனினும், இன்னும் நான் திருப்தியடையவில்லே" என்று அன்பானந்தர் கூறிவரும்போது சிவஞானம், "தாங்கள் ஒருநாளும் திருப்தி யடையப் போகிறதில்லே. சிலருக்கு மோக்ஷமே இப்பிறப்பில் கிடைக்கட்டும், அப்போது கூடத் திருப்தியென்பது இராது" என்ருர்.

"உண்மைதான், சில கற்றறிமூடர் சொல்வதுபோல, மோக்ஷமென்பது பாலாறும், தேனுறும் பாயுமோர் இடமாயிருந்தால், அப்படிப்பட்ட மோக்ஷத்தை அடைய மனிதன் என்று பிறந்த எவனும் விரும்பான். இந்த ஒரு பிறவியிலேயே உள்ள துன்பத்துக்கு அளவில்லே. அவ்வாருக, எண்ணிறந்த பிறவிகளிற் பிறந்து, எல்லேயற்ற துன்பத்துக் காளாகிப் படாத பாடெல்லாம் பட்டுக் கடைத்தேறினுல்

அந்தக் கஷ்டத்திற்கெல்லாம் பலன் ஓயாமல் தேனும் பாலும் குடித்துக்கொண்டிருப்பது தானா?" என்றார் அன்பானந்தர்.

சிவஞானம், "அவையெல்லாம் உருவகமாகச் சொல்லப்பட்டவை; அவற்றை யோசித்துப்பார்த்தால், ஆழ்ந்த கருத்துக்கள் அடங்கியிருக்கின்றன" என்று பரிகாசமாகச் சொல்லி, தொடர்ந்தும் "முன்னிருந்த பிராமண சிரேஷ்டர்கள் தாம் எழுதிவைத்த சாஸ்திரபுராணங்களில், அந்தக் கருத்துக்களையெல்லாம் புதைத்துவைத்திருந்தார்கள். இப்போதுள்ள பிராமணசிரோமணிகள் அந்தக் கருத்துக்களை தோண்டித் தோண்டி யெடுத்துப் புகட்டுகிறார்கள். விந்தை! புதைப்பானேன், பிறகு தோண்டுவானேன்? புல்பிடுங்கத் தென்னைமரத்தில் ஏறியவன் கதைபோலிருக்கிறது!" என்றார்.

அன்பானந்தர் புன்னகை புரிந்து இரண்டுநிமிஷம் மௌனமாயிருந்தார். பிறகு, "நாம் விஷயத்தை விடுத்துச் செல்கிறோம். வைதிக சாஸ்திரிகளின் விஷயமாக நான் அறிந்த மட்டில், அவர்களை எவ்விஷயத்தைப் பற்றியாவது ஆலோசனை கேட்பதும், அவர்களின் முன்னோர்கள் எழுதிய புராணக் குப்பைகளை நம்பி ஒருகாரியஞ் செய்வதும் மிக்க மதியீனமாகும். நான் ஒருமுறை ஒரு பஞ்சாங்கப்பிராமணரை, 'வாரிசில்லாத ஒரு செல்வந்தன் தன் செல்வத்தைத் தனக்குப் பிற்காலம் பிறருக்குப் பயன்படுத்த உத்தமமான வழியெது? என்று கேட்டேன். அதற்கவர், தாம்பூசைசெய்யும் கோயிலுக்குச் சொத்தையெல்லாம் எழுதிவைத்து, அதில் வரும் வருமானத்தைக்கொண்டு ஆதிவாரந்தோறும் பிராமண போஜனமும், தினந்தோறும் சுவாமிக்குச் சித்திரான்ன நிவேதனமும், சகஸ்ரநாம அர்ச்சனையும் நடக்கும்படி ஏற்பாடு செய்தால், போகிறகதி நற்கதியாகுமென்று, அதற்கு ஆதாரமாகச் சில சமஸ்கிருத ஸ்லோகங்களை அர்த்தத்துடன் வினயமாகச் சொன்னார். ஒரு செல்வந்தன் என்று குறியாமற் சொன்னது என்னைக் குறித்துத்தான் என்பதை ஐயர் அறிந்துகொண்டார். அவர் சொல்லுகிறபடி செய்தால், தினம் சித்திரான்னமும் சகஸ்ரநாம அர்ச்சனை தட்சணையும், அவருக்குப் பலிக்குமென்பதை நான் அறிந்துகொண்டேன். நான் அதுமுதல், பிரமாவின் சிரத்திலுதித்து வந்து இப்போது ஈஸ்வரனின் வயற்றில் வசிக்கும் இப்பிராமணோத்த

மர்களை யோசனை கேட்பதில்லை. அது நிற்கட்டும். என் மனோ விருப்பத்தை—மனத்துயரத்தைத்—தெரிவிக்கத் தொடங்கி ஏதேதோ பேச்சிற் புகுந்துவிட்டோம். தாங்களென்னை மரண சாஸனம் ஒன்று எழுதிவைத்துவிடும்படி வற்புறுத்துகிறீர்கள். தாங்கள் கூறவது நியாயமே யெனினும், நான் முன்னமேயே தங்களுக்குத் தெரிவித்திருப்பதுபோல,—எனக்கு எவ்விதத்திலாவது பாத்தியமுடையவர் ஒருவருமில்லை—நான் தேடிய பொருளுக்கு வார்சாகத் தெரிந்தெடுப்பதற்கும், என் மனத்துக்குப் பிடித்தவர்கள் ஒருவருமில்லை. நான் விவாகம் செய்துகொண்டதும், அது பயனற்றுப் போனதும் தங்களுக்குத் தெரியும். எனக்கோ வயது அறுபதாகிட்டது. இந்த வயதில் நான் தன்னந்தனியாக—எனக்காகக் கவலைப்படுவார் ஒருவரின்றி—இருக்கின்றேன். அது என் குற்றமல்ல; விதி இப்படியிருக்கிறது. அதற்கு நானென்செய்வது? இவ்வாறான நிலையில் மரணசாஸனம் எழுதுவதென்றால் எப்படிக்கூடும்?" என்றார் அன்பானந்தர்.

அதற்கு வக்கீல் சிவஞானம் "நான் சொன்னபடி மரணசாஸனம் ஒன்றும் எழுதிவையாவிட்டால் சொத்து கவர்ன்மெண்டைச் (சர்க்காரை) சேர்ந்துவிடும்" என்று நவின்றார்.

"தெரியும், கவர்ன்மெண்டை விட வார்சு கெடுதலாயிருக்கக் கூடுமே! நமதுபணத்தை நாம் விரும்பிய வழியில் செலவழிக்காவிடினும், கெடுவழியில் செலவழிக்காது என்ற மட்டிலாவது கவர்ன்மெண்ட் விஷயத்தில் நம்பலாம். ஒருவன் பெற்றபிள்ளைகள், அல்லது வேறு வார்சுகள் விஷயத்தில் அவ்வளவு கூட நிச்சயமாகச் சொல்வதற்கில்லையே. முடிவாகப்பார்த்தால் பொருளால் மனத்திற்குத் துன்பமே உண்டாகிறது.

"ஈட்டலும் துன்பம்; மற்(று) ஈட்டிய ஒண்பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுந்துன்பம்;—காத்த
குறைபடில் துன்பம்; கெடில்துன்பம்; துன்பக்(கு)
உறைபதி மற்றைப் பொருள்."

என்ற வாக்கு உண்மையாகவே இருக்கிறது" என்றார் அன்பானந்தர்.

"தாங்கள் கூறுவது தவறு. செல்வர்கள் தாம், படைத்த செல்வத்தாற் செருக்கி, கடவுளை மறந்து, தீயவழிகளிற் சென்று தமக்கும் பிறர்க்கும் கெடுதலை விளைவிக்கக்கூடும் என்பதைக் கருதியும், செல்வரல்லாத வறிஞர், செல்வரைக்கண்டு மனம் புழுங்கிப் பொருமை கொள்ளாதிருக்கவேண்டியும், செல்வத்தின் நிலையாமையையும், அதனுல் விளையும் தீமைகளையும் எடுத்துக் காட்டினார்களே யன்றி வேறல்ல. நன்மையும் தீமையும் கலவாதது எது? இப்பிறவியே இன்பமும் துன்பமும் கலந்ததாகத் தானே இருக்கிறது. துன்பம் கலந்திருக்கிறதேயென்று பிறவியை விட்டவர் எத்தனைபேர்? அவ்வாருகத் தீமை கலந்திருக்கிறதேயென்று செல்வத்தை இகழலாமோ? 'திரைகடலோடியுந் திரவியந்தேடு' 'பொருள்தனைப் போற்றிவாழ்' என்ற ஆன்ருேர் வாக்குகளை மறந்தீர்கள் போலும். மேலும், நமக்குப் பல சௌகரியங்களையும் அளிக்க வல்லது பொருளொன்றுதானே? அதைத்தேடி அடைதல் வீணென்று கூறுவது கண்மூடித்தனமேயாகும்" என்று வக்கீல் மொழிந்தார்.

அன்பானந்தர் அவரை நோக்கி "சௌகரியங்களைத் தரவல்லது பொருளொன்றுதான் என்று சொல்லுகிறீர்கள். செல்வர்களல்லார் பலரை நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் என்னைவிட எவ்வளவோ சௌகரியமாகவும் சந்தோஷமாகவும் வாழ்கிருர்கள். அவர்கள், ஒரு கடவுள் உண்டு என்பதிற் பூரண நம்பிக்கை யுடையவர்களாயும், ஒவ்வோர் உயிரின் நன்மைக்காக அவர் பிறப்பு இறப்புகளைக் கொடுக்கிருர் என்ற உணர்ச்சி யுடையவர்களாயு மிருக்கிருர்கள். அவ்விதமாகவே நானும் நம்பி, இன்பமாகக் காலங்கழித்தேன்,—எப்போது?—வாலிபனுய் மதுரையில் வளர்ந்தபோது. அந்தக்காலம் சென்றுவிட்டது. சிவஞானம்! நான் சென்னைக்கு வந்தபிறகு: என் சரித்திரத்தைத் தாங்கள் அறிவீர்கள். என் மனைவியின் புருஷத் துரோகம் தங்களால்தான் ஊரறியாமல் : அடக்கப்பட்டது. நற்காலத்தின் பயனுக அவளும் இறந்தொழிந்தாள். என்னுடைய குமாரர்களிருவரும், மிகவும் ஒழுங்கீனர்களாயிருக்கிருர்களே யென்று கவலையுற்றேன். 'தாயைப்போல பிள்ளை, நூலைப்போல சேலை' என்ற பழமொழியின் உண்மை அவர்களால் எனக்கு மெய்யாயிற்று. அவர்களும் பலவித துர்ச்செயல்களால் அகால மரணத்துக் குள்ளா

ஞர்கள். என் மனதிற் கொவ்வா மனைவி மக்களை நான் அப்போதே மறந்தேன். அவர்களைப் பற்றி நான் சிறிதும் விசனப்படுவதில்லை. எனக்கோ அந்தியகாலம் நெருங்கிவிட்டது. 'காடு வா வா என்கிறது, வீடு போ போ என்கிறது.' இந்நிலைமையில் இருந்து கொண்டு, கழிந்துபோன வாழ்நாட்களை நான் திரும்பிப் பார்க்கும்போது, எனக்குத் துரோகஞ் செய்தவர்கள், என்னை ஏமாற்றியவர்கள், எவரும் என் கண்ணுக்குத் தென்படவில்லை—அவர்கள் அனைவரும் இறந்து மண்ணோடு மண்ணாய்ப் போய்விட்டார்கள்; அவர்கள் உருவங்களும் முகங்களும் என் ஞாபகத்தைவிட்டு அறவே அழிந்துபோயின. இப்போது என் மனக்கண்ணுக்கு அடிக்கடி தோற்றுவது நான் மதுரையில் இன்பமாய்க் கழித்த இளம்பருவமே. இன்று நான் சம்பாஷிக்கத் தொடங்கியபோது, எனது இளம்பிராயத்தில் எனக்கு இன்பம் பயப்பதற்கு முக்கிய காரணமொன்றுண்டு என்று கூறினேனல்லவா? அந்த ஒன்று என்ன தெரியுமா?'' என்று தமது நீண்ட பேச்சை ஒரு கேள்வியிற் கொண்டுவந்து நிறுத்தினர்.

சிவஞானம் அவர் கேள்விக்கு விடையாகத் தமது தலையை அசைத்தார். அப்போது அன்பானந்தர், "சிவஞானம்! கிழவருக்கு இளமைப் பருவம் திரும்பி வந்துவிட்டதென்று நீங்கள் சிரிக்கக்கூடும். ஆயினும், என்னுடைய உண்மையான உணர்ச்சியைக் கூறுகிறேன். என் இளமையில் என்னுடனிருந்து என் வாழ்க்கையை இனிமைப்படுத்தியதும், அதன் பிறகு என்னைவிட்டு நீங்கி என் வாழ்க்கையில் திருப்தி இல்லாமற் செய்ததும் எதுவெனில்,--காதல்!'' என்று கூறி சிவஞானத்தின் முகத்தை நோக்கினர்.

சிவஞானம் ஆச்சரியத்தோடு தலைநிமிர்ந்து அவரை முகநோக்கி, "காதலா? என்ன ஆச்சரியம்! தங்களுக்கே காதல் கிட்டாவிட்டால், இவ்வுலகில் வேறு யாருக்குத்தான் கிட்டும்?'' என்றார்.

"ஆயின், மற்றவர்களுக்குக் கிடைப்பதை காட்டிலும், காதல், எனக்குச் சுலபமாகக் கிடைக்குமென்று கருதுகிறீர்கள். என்? நான் செல்வந்தனுயிருக்கிறேனே, அதனாலா? அங்குத் தாங்கள் தவறி விட்டீர்கள். ஏனெனில் செல்வர்களை, அவர்கள் பொருட்டு எவரும் காதலிப்பது அபூர்வம்—அவர்கள் செல்வத்தின் பொருட்டே எவரும்

அவர்களைக் காதலிப்பதாக நடிப்பார்களே யொழிய, உண்மையிற் காதலிப்போர்—உண்மையில் நேசிப்போர்—உண்மையில் அன்பு பாராட்டுவோர்—எவருமிருக்கமாட்டார்கள். நான் என் சிறுபோதிலிருந்தது போல ஏழையாகவே எந்நாளும் இருப்பேனானால், ஒரு நேயனால் உண்மையில் அன்பு பாராட்டப்பட்டிருப்பேன். அல்லது ஒரு பெண்ணால் உண்மையில் காதலிக்கப்பட்டிருப்பேன். ஆனால் விதி வழி வேறாக இருந்தது. வயது முப்பத்தைந்தாவதற்குள் நான் செல்வவந்தனாய் விட்டேன். பிறகு ஒரு மங்கையைக் கண்டு அவள் உருவத்தில் மயங்கி, அவள் என்னிடத்தில் பிரியமுள்ளவள்போல் நடித்த நடிப்பை மெய்யென்று நம்பி, அவளை விவாகம் செய்துகொண்டேன். உள்ளபடி அவள் என்னிடத்தில் மதிப்பும் அன்பும் வைத்திருந்ததாக எண்ணி மோசம்போனேன். அவள் மதித்ததெல்லாம் என்னிடமுள்ள செல்வத்தையே! அவள் காதலித்ததெல்லாம், தன் உடல் முழுதும் வேண்டுமானாலும் தங்கத்தாலும் வயிரத்தாலும் மறைத்துவிடக்கூடிய எனது திரண்ட செல்வத்தையே! ஆதலால் நான் உண்மையில் அடைந்த காதலெல்லாம்—அல்லது அன்பெல்லாம்—என் பெற்றோரிடத்திருந்து என்பது நான் சொல்லாமலே விளங்கும். நேயரே! என்ன? நான் சொல்வதொன்றுக்கும் வாய் திறவாதிருக்கிறீர்கள்? நான் ஏதோ பித்தம் பிடித்தவன்போல் உளறுகிறேனென்று நினைக்கிறீர்களா? இவ்வளவுதூரம் நான் பேச நேர்ந்ததெல்லாம், கடந்த ஆறுமாதங்களாக நீங்கள் 'மரணசாஸனம்' எழுதிவைக்கும்படி வற்புறுத்தி வருவதால்தான். என் குமாரர்களிருவரையும் வார்சாகக் குறித்து முன்னம் எழுதிய மரணசாஸனம், எனக்கு முன்னேயே அவர்கள் இறந்துபோய் விட்டதால் பயனற்றுப்போனது. ஆகவே—வெளிப்படையாகச் சொல்கிறேன்—வேறு யாரை எனக்கு வார்சாகவைத்து எழுதுவதென்று எனக்கு விளங்கவில்லை. ஏனெனில் எனக்குப் பிரியமானவர், அன்பானவர், இவ்வுலகில் ஒருவருமில்லை" என்று அன்பானந்தர் தம் உரையை முடித்தார்.

சிவஞானம் சிறிதுநேரம் சிந்தனையிலாழ்ந்திருந்து, பிறகு முதியவரை நோக்கி, "நான் முன்னொருமுறை தங்களுக்குக் கூறிய யோசனைப்படி ஏன் செய்யக்கூடாது?—அதாவது சுவீகாரம் எடுத்துக்கொள்ளுவது. நல்ல குடும்பத்திற் பிறந்த ஒரு யோக்கியமான சிறுவனை

சுவீகாரம் எடுத்து, அவனைத் தங்கள் விருப்பப்படி நன்றாய்க் கற்கச் செய்து, தாங்கள் செய்துவரும் வியாபாரத்தை தங்களுக்குப் பிற்காலந் தொடர்ந்து நடத்திவரும்படி, அவனை அதற்கேற்ற வகைகளில் பழக்கி வளர்க்கிறதுதானே?" என்றார். இதைக்கேட்ட அன்பானந்தர் தலையை யசைத்துக்கொண்டு, "சே! கூடவே கூடாது! தாம் பெற்ற பிள்ளைகளை, பிறர்க்கு—சுவீகாரம் என்ற கௌரவப் பெயரால்—விற்றுவிடச் சித்தமாயிருக்கும் பெற்றோர்களைப்பற்றித் தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்? நான் அப்படிப்பட்ட தாய் தந்தையர்களை கௌரவமுடையவர்கள் என்றாவது, அவர்கள்பெற்ற பிள்ளைகளை 'கௌரவ'முள்ள குடும்பத்திற் பிறந்த பிள்ளைகள் என்றாவது கூறத் துணியமாட்டேன். சுவீகாரம் செய்துகொள்ள நான் சிறிதும் ஒப்ப மாட்டேன். எனக்கு வர்சுதாரரே வேண்டாம். என்னுடைய செல்வத்துக்கும் அந்தஸ்துக்கு மல்லாமல்—சுயநலங் கருதாமல்—என்னிடம் உண்மை அன்புடைய யாராவது ஒருவர் எனக்கு இனிக் கிட்டுவாரானால், அவரையே எனக்கு வார்சாக நியமிக்கச் சம்மதிப்பேன்" என்றார்.

சிவஞானம் கொஞ்சநேரம் நீண்ட ஆலோசனையிலாழ்ந்து, பிறகு, சற்றுத் தயங்கித் தயங்கி, "சிறிது காலத்துக்கு முன்னால் செய்திருந்தால் நன்றாயிருக்கும். ஆயினும் என்ன? விருப்பமானால்—இப்போது கூட—ஒரு—பெண்ணை—விவாகஞ் செய்து கொள்ளலாம்" என்று புகன்றார்.

"விவாகமா! எனக்கா? பேஷ்! அறுபதாவது வயதில் விவாகமா? நன்றாயிருக்கிறது! சிவஞானம்! தாங்கள் என்னோடு நீண்ட காலமாகப் பழகி வருகிறீர்களாதலால், மற்றவர்கள் சொல்ல அஞ்சும் விஷயத்தையும், நீங்கள் என்னிடம் யோசனையின்றித் துணிந்து கூற உரிமை உடையவர். இரண்டாம் விவாகம் செய்து கொள்ள வேண்டுமென்ற விருப்பம் சிறிதேனும் எனக்கிருந்தால், என் மனைவி மரித்த இரண்டொரு வருஷங்களுக்குள்ளாகவே—ஒரு பெண்ணைத் தெரிந்தெடுத்து மணஞ்செய்துக்கொண்டிருப்பேன். இப்போது—இதுவரைக்கும்—வயது அறுபதாகும் வரைக்கும்—காத்திருக்கமாட்டேன். ஆனால், இந்த வயதில் கூட, எனக்குள்ள செல்வத்தையும் வருவாயையும் கருதி, என்

னை விவாகஞ் செய்து கொள்ள எத்தனையோ ஸ்திரீகள் சித்தமாயிருக்கி ருர்கள் என்பதை நானறிவேன். எனினும், அவர்களில் ஒருவரையா வது வரிக்க நானுடன்படுவேனென்று நினையாதீர்கள். அப்படி வரித் தால் அது ஒரு விவாகமாகுமா ? அறிவுடைய ஒரு மிருகம், மற்ருெரு மிருகத்தை விலைக்கு வாங்குவதான இந்த வியாபாரத்துக்கு 'விவாகம்' என்ற உயர்ந்த பெயர் தகுமா?" என்று உரைத்தார் உத்தமப் பெரியார்.

வக்கீல் கனைத்துக்கொண்டு, "கடைசியாக, இவ்வளவுதூரம் பேசி யும் நாம் யாதொரு முடிவுக்கும் வந்ததைக் காணேம்" என்ருர்.

"நான் முன் சொன்னபடி என் பிரயாணத்தை முடித்துக்கொ ண்டு சென்னைக்குத் திரும்பிவந்த பிறகு, இவ்விஷயத்தைப் பற்றி நாம் மறுபடியும் பேசுவோம்" என்று மொழிந்தார் முதியோர்.

"வெளிப்பிரயாணத்திலிருந்து ஒருவாரத்துக்குள் திரும்பிவந்து விடுவீர்களா ?"

"அநேகமாய் வந்துவிடுவேன்"

"நாளையதினம் தங்கள் வீட்டில் ஏதோ விசேஷம் போலிருக் கிறது ?"

"ஆம், மனேன்மணியின் பிறந்த நாள் கொண்டாட்டம்"

"யார் ? இரத்னவேலின் குமாரத்தி மனேன்மணியா ?"

"ஆமாம்".

"அந்தச் சிறுமியிடத்தில் தாங்கள் மிகவும் பிரியம் வைத்திருக் கிறீர்களே ! அதெற்கென்ன வயது இப்பொழுது ?"

"இன்ருேடு பதினறுகிறது. அந்தப் பெண்ணிடம் எனக்கு மிக்க பிரிய முண்டு என்பது உண்மைதான். ஆனல், அவள்பேரு க்கு என் என் சொத்துக்களை எழுதிவைக்கக்கூடாது என்று நீங்கள் கேட்கலாம். அதற்கு இரண்டு காரணங்களுண்டு : முதலாவது, அவள் பெண்பால் ; இரண்டாவது, எவனுவது ஒரு மூடன் அல்லது போக் கிரியை அவள் விவாகஞ் செய்து கொண்டால், என்சொத்துக்களெல்

லாம் வியர்த்தமாகும். அடுத்தத் தெருவில் வசிப்பதால் அடிக்கடி அப் பெண் இங்கே வரும். நான் அவளுக்கு விளையாட்டுக்கருவிகளும், தின்பண்டங்களும் கொடுப்பதுண்டு. இப்போது, அவைகள்தாம் அவள் வயதுக்கு ஏற்றவை. அதற்குமேல் ஏதும் செய்வதாக எனக்கு எண்ணமில்லை '' என்றார் அன்பானந்தர்.

"சரி, நான் போய்வருகிறேன். நாளையதினம் தங்களைக் கிளப்பில் பார்க்கிறேன். மணி ஒன்றடிக்கப் போகிறது!'' என்று கூறி சிவ ஞானம் எழுந்தார்.

உடனே அன்பானந்தரும் எழுந்து, "நல்லது, போய்வாருங்கள். திடீரென்று நான் சமீபகாலத்தில் இறந்தால், என் சொத்துக்கள் கவர்ன்மெண்டைச் சேரட்டும். இல்லையேல், கூடிய விரைவில் என் தீர்மானத்தைத் தங்களுக்குத் தெரிவிக்கிறேன்'' என்றார்-

---

## II

### ஆண்டுநிறைவின் அதிசயங்கள்.

மறுநாள் மாலை சூரியன் மறைந்து சுமார் ஒருமணி நேரத்திற்கு மேலிருக்கும். அன்பானந்தருக்குச் சொந்தமான 'ஆனந்தநிலையம்' என்னும் மூன்றடுக்கு மாளிகை உண்மையில் ஆனந்த நிலையமாகவே விளங்கிற்று. மாளிகையினுள் எங்கு நோக்கினும் மின்சார விளக்குகள் பிரகாசித்தன. மேளவாத்தியம் அப்பொழுதுதான் ஓய்ந்தது. இன்னும் சிறிது நேரத்திற்கெல்லாம் நடக்கப்போகும் விருந்தை எதிர்பார்த்துத் தங்கியிருந்த ஸ்திரீ புருஷர்கள், அந்நேரம் வரும் வரையில், வாய்க்கு வேறு வேலையில்லாமையால், சிற்சிறு கூட்டமாகக் கூடி மாளிகையைச் சுற்றியிருந்த தோட்டத்திலும், மாளிகையின் மேன்மாடியிலும் சென்று, தங்கள்தங்களுக்கு விருப்பமான விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண் டிருந்தார்கள்.

வீட்டுத்தலைவராகிய அன்பானந்தரோ, தனியாகக் கூடத்தைச் சார்ந்த ஓர் அறையின் வாயிலருகே நின்றுகொண்டு, தமக்குச் சற்றுத் தூரத்தே, தாழ்வாரத்தில் உயர்ந்த குடும்பத்து ஸ்திரீகள் சிலர் கூட்ட

மாய்க் கூடிப் பேசிக் குதூகலித்திருப்பதைக் கண்டு புன்னகை புரிந்தவண்ணமாய் நின்றுகொண்டிருந்தார். ஆனால் அவர் முகத்தில் ஒரு வகையான விசனக்குறி தோன்றியது. அதற்குக் காரணம் அவர் மனத்தில் அவரையும் அறியாமல் தோன்றிய சலிப்பும் வெறுப்புமே. யாதொரு காரணமுமின்றித் தோன்றும் இம்மனச்சலிப்புக்கு இடங் கொடுக்கக்கூடாது என்று அவர் தம் மனத்தைச் சந்தோஷமான வழிகளில் திருப்ப முயன்றும் பயன்படவில்லை. தம்முடைய சொந்த வீட்டிலிருந்து ஏதோ தமக்கு அறிமுகமில்லாத அயலார் ஒருவர் வீட்டில், தற்செயலாய் வந்து தன்னந்தனியராய் நிற்கும் ஓர் அன்னியர் போலத் தம்மை நினைத்துக்கொண்டார். நின்றவிடத்திலிருந்தே தம்வீட்டையும், அதில் அன்றைய விசேடத்தை முன்னிட்டுச் செய்யப்பட்டிருந்த பல வகை அலங்காரங்களையும், ஒருமுறை கண்ணோட்டு முற்றும் நோக்கினார். அப்பொழுது, 'இவ்வீடும் இதில் உள்ள விலையுயர்ந்த பொருட்கள் பலவும், 'இவைகட்கெல்லாம் காரணமாக நமது வாழ்க்கைப் பிரயாணத்தினிடையே, நாம் வருந்தித் தேடிய செல்வமும்—எல்லாம், இவை எல்லாம்—இன்னும் சொற்ப காலத்தில்—சில வருஷங்களில்—நம் சுவாதீனத்தினின்று நீங்கிவிடும்.அல்லவா? இச்செல்வத்திற்கு உரிமை பாராட்ட, அல்லது என்னால் சம்பாதிக்கப்பட்டனவென்று என் பொருட்டு எனது திரண்ட பொருட்களை அபிமானித்துப் போற்றிப் பாதுகாக்க, என்மீது உண்மை அன்புடைய ஒருவராவது எனக்குக் கிட்டவில்லையே! இன்னும் சில வருஷங்கள் மிக விரைவில் கழிந்துவிடும்! அதன் பிறகு—இருள் சூழ்ந்துவிடும்! பிராணன் என்னும் விளக்கு அணைந்து விடும்! சுவாசம் என்னும் இன்னிசை ஓய்ந்து விடும்! வாழ்க்கை என்னும் நாடகம் முடிந்துவிடும்! ஆ, நான் கனவுகண்டு கொண்டிருக்கும் காதற்காட்சியைக் காண்பது எப்பொழுது? காதல்—உள்ளன்பு—மெய்யன்பு—அருமையும் பெருமையும் உடையதாய், தெய்வீகசக்தி வாய்ந்ததாய், மரணத்தின் பின்னும் நிலைபேறுடைய மாட்சிமைவாய்க்கப் பெற்றதாய் விளங்கும் உண்மை அன்பை நான் காணுவது எங்கே?—எப்பொழுது?—' என்று இவ்வாறு சிந்தித்துவரும்போது அவர் மனம் நீர் கொண்டமிழும் மரக்கலம்போல உள்ளொடுங்கிற்று. அயர்வினால்அவர் ஒரு பெருமூச்சுவிட்டார். அச்சமயம்,

"என்னுங்க அண்ணு! ரொம்ப களைப்பாயிருக்கிறீர்களே! இலை போடும் வரையில் 'ரூமில் போய்' சற்று 'சோபா' வில் படுத்திருங்கள்! கொஞ்சம் 'காபி' யாவது, 'சோடா' வாவது சாப்பிடுகிறீர்களா? உங்களுக்கு இன்று ரொம்ப சிரமம்! ஆனுலும் நீங்கள் மனோன்மணிமீது இவ்வளவு ஆசை வைத்திருப்பீர்களென்று நான் நினைக்கவில்லை. அவளும் 'மாமா' 'மாமா' என்று உங்கள்மேல் உயிராயிருக்கிருள். அது கிடக்கட்டும்; நீங்கள் போய் சற்றுப் படுத்துக்கொள்ளுங்கள். உங்கள்உடம்பைக் கெடுத்துக்கொண்டு, இங்கே என்ன விசேஷம் வந்திருக்கிறது?" என்று கூறிக்கொண்டே, சுமார் ஐந்தடி உயரமும் மூன்றடி சுற்றளவும் உடைய ஒரு ஸ்திரீ, அன்பானந்தரை நோக்கிச் சென்ருள். அவளுக்குச் சுமார் நாற்பது வயதிருக்கும். சற்றேறக்குறைய நூற்றைம்பது ரூபா மதிப்புள்ள காசி சரிகைப்புடவை உடுத்தியிருந்தாள். அவள் அணிந்திருந்த சுமார் இரண்டு வீசை கனமுள்ள ஆபரணங்கள்—இரவலோ, சொந்தமோ, அல்லது போலியோ (imitation), எமக்கு நிச்சயமாய்த் தெரியாது. கழுத்திலணிந்திருந்த வைர(?) அட்டிகையும், இடுப்பிலணிந்திருந்த தங்க (?) ஒட்டியாணமும் இரவலல்ல என்பதுமட்டும் நிச்சயம். ஏனெனில், சாதாரண சிறுமிகளின் ஒட்டியாணத்தின் சுற்றளவுள்ள அட்டிகையும், அரிசிசலிக்கும் சல்லடையைவிடச் சற்று அதிகமான சுற்றளவுள்ள ஒட்டியாணமும் இரவலாய்க் கிடைப்பது அரிதல்லவா?

இவ்வம்மை கூறியதைக்கேட்ட அன்பானந்தர், "இராஜம், எனக்கென்ன களைப்பு வந்தது? என்ன பெருவேலை செய்துவிட்டேன்? அதெல்லாம் ஒன்றுமில்லை. நீ கவலைப்படவேண்டாம்" என்ருர்.

இராஜம்—மனோன்மணியின் தாய்—பல்லை இளித்துக்கொண்டு, "என்ன அண்ணு, அப்படிச் சொல்றீர்களே! என்னவிருந்தாலும் நாம் வயதானவர்கள். உடம்பைக் கொஞ்சம் ஜாக்கிரதையாகத்தான் பார்த்துக்கொள்ளவேண்டும். வாலிபர்கள் என்னசெய்தாலும், எப்படியிருந்தாலும், பாதகமில்லை. ஆனுல், நாம் நம்முடைய வயதுக்கு உடம்பைப்பற்றி அவ்வளவு அலட்சியமாயிருக்கலாமா?" என்ருள்.

அவள் இவ்வாறு கூறியதிலிருந்து, தான் அதிக வய்தாகாத ஒரு வாலிபப்பருவப் பெண்ணுக மதிக்கப் படவேண்டும்— கருதப்

பட வேண்டும்—கூறப்படவேண்டும்— என்று எதிர்பார்க்கிறளென் பதை நன்கு அறிந்துகொண்ட அன்பானந்தர் "அம்மா! நான் கிழவன் என்பது சரி. நீ இவ்வளவு சிறுவயதில் உன்னை வயதானவள் என்று சொல்லிக்கொள்ளலாமோ ?" என்றார்.

முதியவளாகிய இராஜம் முகமெல்லாம் பல்லாகிச் சற்று நாணின வள்போல் தலைகுனிந்து உடம்பை வளைத்து நெளித்துக்கொண்டு "நன்றாய்ச் சொன்னீர்கள்! என்னவிருந்தாலும் நான் கிழவி கிழவி தான்" என்றாள். இவ்வாறு அவள் கூறினளாயினும் அக்கூற்றின் தொனியால் "என்னவிருந்தாலும் நான் சிறுமி சிறுமிதான்" என்று அவள் கூறக் கருதியதுபோல் தோன்றியது.

"நீதான் அவ்வாறு நினைக்கின்றனையே யொழிய உன்னைக் கிழவியென்று குருடனும்சொல்லமாட்டான்" என்றார் அன்பானந்தர். தன்னை, இளமைப்பருவத்தினளாக நினைத்துக்கொண்டிருக்கும் இரா ஜம் நெளித்த உடம்பை நீட்டி நிமிர்த்தி ஒழுங்காய் நின்று, தனது யானைக்கண்ணால் அன்பானந்தரைச் சிறிது எறிட்டு நோக்கிவிட்டு மீண்டும் தலைகுனிந்து கொண்டாள். அவள் தனக்கு மிகவும் அந்தரங்கமான நண்பர்களுடன் இம்முதியாரைப் பற்றிப் பேச நேர்ந்தால், அவரைப் 'பணப்போதி' என்ற பரியாயப் பெயரால் சுட்டிப் பேசுவது வழக்கம். அவர் தன்னைப்பற்றிக் கூறுவன வெல் லாம் உபசாரமொழிகளேயன்றி உண்மையானவை யல்ல வென்ற சந் தேகம் அவளுக்கு எப்பொழுதும் உண்டு. ஆகவே, இப்பொழுது அவர் தன்னைக் 'கிழவி யென்று குருடனும் சொல்லமாட்டான்' என்று கூறியது 'குமரியென்று குருடனும் சொல்லமாட்டான்' என்று பொருள்படக் கூறியதாயிருக்குமென்று கருதினள். ஆயினும், அள வற்ற செல்வமுடைய ஒரு வயோதிகன் எதுவேண்டு மென்றாலும் சொல்லலாம்—செய்யலாம்; அதை அவ்வளவாகப் பாராட்டக் கூடாது என்ற கருத்துடையவளாதலால், அன்பானந்தர், தன்னை உண்மையில் ஏளனமாகப் பேசியபோதிலும் அதைத் தெரிந்து கொண்டதாகக்காட் டிக்கொள்ளக் கூடாதெனக் கருதி "எனக்குக் கலியாணமானபோது நான் மனோன்மணிக்கு இப்பொழுதாகும் வயதுக்கு ஒரு வயது குறைந்தவளாகவேயிருப்பேன். அப்பொழுதே நான் மிகவும் வய

தான பெண்ணென்று எனக்குள் நினைத்துக் கொள்வதுண்டு! இருபத்தொரு வயதுக்கெல்லாம் நான் ஒரு பிள்ளைக்குத் தாயானேனே!" என்றாள் சாகஸத்தில் வல்ல இராஜம்.

இந்த முக்கியமான செய்தியைச் சொல்லியதற்குத் தம் மொழியாக இன்னது கூறுவதென்று அன்பானந்தருக்குத் தோற்றவில்லை. மேலும், இராஜத்தின் வாயிலிருந்து அவள் விவாககாலத்தைப் பற்றியும், முதற் பிரசவகாலத்தைப் பற்றியும் போதுமானவிவரங்களை இதற்குமுன் எத்தனையோமுறை அவர் கேட்டிருக்கிறார். ஆதலால், அவர் அவைகளைப்பற்றி இப்பொழுது ஒன்றும் சொல்லக்கூடாமற்போகவே, பேச்சைமாற்றி "மனோன்மணி யாரிடத்தில் பேசிக்கொண்டிருக்கிறாள்?" என்று கேட்டார்.

"என்ன அண்ணா, மனோன்மணி யாரிடத்தில் பேசிக்கொண்டிருக்கிறாளென்று கேட்கிறீர்களே! அவள் யாரிடத்தில் பேசாமலில்லை? வந்திருக்கிற பெண்களெல்லாம் அவளைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு அவளைப் பிய்த்துப் பிடுங்கிவிடுகிறார்கள். அவள் யாரோடென்று பேசுவாள்? வாக்கர் கம்பெனி துபாஷ்,———பெண்சாதி 'நீ எப்பொழுதம்மா கலியாணம் செய்துகொள்ளப்போகிறாய்?' என்கிறாள். மதறாஸ் பாங்கி காஷ்கீப்பர்,———பெண்சாதி 'உனக்குப் படிச்ச மாப்பிள்ளை வேண்டுமோ?' என்கிறாள். அவளுக்கு இருபத்தைந்து வயதில் மன்மதன்போல ஒரு பிள்ளை யிருக்கிறான். ஆனால், அவன் இப்பொழுதே கூத்திக்கள்ளனாகத் திரிகிறானென்று சொல்லுகிறார்கள். அதைப் பற்றி நமக்கென்ன? கண்டிராக்டர் மாசிலாமணியின் மனைவி 'என்ன மருமகளே, மாமியாராச்சே என்று என்னிடம் பேசக் கூச்சப்படுகிறாயோ?' என்கிறாள். சாராயக்கடை சாரங்கபாணி — அவருக்குப் பத்துலக்ஷத்துக்கு இருக்கிறதாமே!——அவர் பெண்சாதி ——பாவம், அவள் பிள்ளைக்கு முப்பது வயதுதானாகிறது, இதற்குள் அந்தப் பிள்ளைக்குப் பாருங்கள், பாவம்,—— போன மாதந்தான்——சம்சாரம் தவறிப்போய்விட்டது —— பிரசவ வேதனையால் இறந்து போய்விட்டதாம்.;—இரண்டாந்தாரம் கலியாணம் செய்வதற்குப் பெண் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்——அது எப்படியாவது போகிறது——அவள் 'உனக்கு எங்கய்யா, மாப்பிள்ளை

பார்த்திருக்கிறார்கள் ?' என்கிறாள். இப்படியே ஒவ்வொருத்தரும் அவளைக் கேட்கிற கேள்விகளுக்குக் கணக்கேயில்லை! அவள் யாருக் கென்று பதில் சொல்லுவாள்? அந்தமட்டில் மனோன்மணி சமர்த்தி; நாலுக்குத் தெறித்தாற்போல் ஒவ்வொருத்தருக்கும் சாமர்த்தியமாய் பதில் சொல்லிவிடுகிறாள். நான், அவள் வயதில், என் தாயாரிடத்தில் கூட என் கலியாண விஷயமாய்ப் பேசுவதென்றால் எவ்வளவோ கூச்சப்படுவேன். இத்தனைநாள் பார்த்ததற்கு, மனோன்மணியை இன்றையதினம் பார்த்தால்—அந்தச் சரிகைக் கொட்டடிப் புடவைக்கும், வயிரக்கம்மலுக்கும், வயிரஅட்டிகைக்கும், கல்லிழைத்த மாங்காய்மாலைக்கும்—ஏதோ கந்தருவப் பெண்போலிருக்கிறது. நீங்கள்தான் பார்த்தீர்களே, உங்களுக்கு எப்படித் தோன்றுகிறாள்?'' என்று நிறுத்த இடமின்றி நெடுந்தூரம் கொண்டுவந்து காட்டிய தனது சம்பாஷணை சாரத்ய சாமர்த்தியத்தை, ஒரு வினாமுனையிற் கொண்டுவந்து நிறுத்தினாள் நம் இராஜம்.

அன்பானந்தர் கண்கள், விட்டு விட்டுப் பிரகாசிக்கும் இருநட்சத்திரங்கள் போலப் பிரகாசித்தன. அவர், இராஜத்தின் வினாவுக்கு விடையாக, "அம்மா! நான் ஒரு கந்தருவப் பெண்ணையாவது இதுவரை பார்த்ததில்லை. ஆதலால் மனோன்மணி கந்தருவப்பெண்போல் இருக்கிறாள் அல்லது இல்லை என்று சொல்வதற்கு என்னால் முடியாது. உன்மகள் இயற்கையாகவே நல்ல அழகுள்ளபெண்; இன்றையதினம் அவளுக்குச் செய்திருக்கிற அலங்காரங்களால் அவள் அழகு சற்று அதிகப்பட்டுக் காட்டுகிறதென்பதில் சந்தேகமில்லை. அவளுக்கு ஏற்ற புருஷன் ஒருவன் கிடைப்பான். அழகமைந்த பெண்களுக்குத் தக்க வான்கிடைப்பது அரிதல்ல, அதைப்பற்றிக் கவலை வேண்டாம்'' என்றார்.

" ஆ! அதைப்பற்றி எனக்கென்ன கவலை? அண்ணா, மனோன்மணிக்கு வரன் வாய்க்காவிட்டால் அப்புறம் என்ன இருக்கிறது! அவளுக்கென்ன அழகில் குறைவா? படிப்பில் குறைவா? வீணை எடுத்தாளானால் சரஸ்வதி தோற்று விடுவாள்! பிடில் தெரியும், ஹார்மோனியம் தெரியும், பின்னல்வேலைதெரியும், இங்கிலீஷ்பேச ஆரம்பித்தாளானால் 'பாஸ்' பண்ணி பட்டம் வாங்கினவனெல்லாம் தலை

குனியவேண்டும். நம்ம ஜாதியிலே இவள் படிப்புக்கேற்ற நாயகன் எங்கே இருக்கிறான்? ஆனால், என்னுடைய விருப்பமெல்லாம் அவள் மனதிற் கேற்றவனாகவும், அவள்மேல் உள்ளபடி அன்புடையவனாக வும், செல்வவந்தனாகவும் உள்ள ஒருவன் கிடைத்தால் போதுமென்பு தே" என்றாள் இராஜம்.

அன்பானந்தர் முகத்தில் திடீரென்று ஒருவகை மாறுதல் உண்டா யிற்று. அவர் கொண்டிருந்த புன்னகை வன்னகையானது. சிறிதுமுக த்தைச்சுளித்துக்கொண்டு அவர் அவளைக் கூர்ந்துநோக்கி "உள்ளபடி அன்புடையவனா! உள்ளன்பு என்பதொன்று மனிதர்களிடத்தில் இரு க்கிறதென்றா நினைக்கிறாய்? கற்றறிந்தபெரியோர் என்று பேர்படை த்த வேலையற்ற வீணர்கள் சிலர் அன்பு என்றும் காதல் என்றும், ஏதோ தமக்குத்தோற்றியதைப் பிதற்றிவிட்டுப்போனார்கள். 'புலவர்கள் பெரும் புளுகர்கள்' என்று புகல்வதுண்டு. ஆனால் அந்த அபிப்பிராயம் தவறு. தாம் கண்டதையும் தாம் உணர்ந்ததையும், உலகோர் அபிப் பிராயத்தைப் பொருட்படுத்தாமல், பிறர் இகழ்ச்சிக்கு அஞ்சாமல், உண்மையிற் சிறிதும் குறைவுபடாமல் வெளியிட்டுக் கூறுவோரே கற்றோர்; பண்டிதர், புலவர் என்ற பெயர்களுக்கு அருகராவார்கள். அவ்வாறல்லாதார் ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, விஸ்தாரகவி முத லிய பெரும் பெரும் பட்டங்களைக் குங்குமஞ்சுமந்த கழுதைபோல் சுமந்துகொண்டு திரிந்தாலும், அவர்களை மரத்துக்குமரம் தாவித் திரி யும் கவிக்கூட்டங்களில் ஒரு வகுப்பாகக் கொள்ளவேண்டியதேயன்றி உண்மைக் கவிஞர்களோடும் புலவர்களோடும் சேர்த்தல் கூடாது. அவர் கள் வயிற்றுப் பிழைப்புக்காகப் பாடவும், எழுதவும் கற்றுக்கொண்ட தொழிலாளிகளே யொழிய, கல்விமான்கள் அல்லர். இவர்கள் பிழைப்பு, பிச்சைக்காரர் பிழைப்பிலும், கேடுகெட்டதாகும். பிச்சைக் காரன் 'பசியால் வருந்துகிறேன், சோறு போடுங்கள்' என்று கேட்டு, கொடுத்தால் வாங்கி உண்டு கொடுத்தவரை வாழ்த்திவிட்டுப் போகி றான்; 'இல்லை' என்றால் அதற்குமேல் அவன் அவ்விடத்தில் நிற்கி றதுமில்லை. ஆனால், தமக்குச் சற்றும் அருகல்லாத 'புலவர்' பட்டத் தைச் சூடிய இந்தப் புல்லர்களோ எவ்வளவு ஒழுக்கவீனனா யிருந்தாலும் அவனிடத்தில் செல்வமிருந்துவிட்டால் அவனை அணுகி முப்பத்திரண்டு பற்களையும் பாக்கக் காட்டி, 'கற்பகத் தருவே, காம

தேனுவே, கருணு சொரூபியே' என்று வாய்க்குவந்தபடி யெல்லாம் புகழ்வதும், அச்செல்வன் இவர்கள் யோக்யதையை அறிய முடியாத மூடனுயிருந்து இவர்கள் புகழ்ச்சியால் மகிழ்ச்சியுற்று, இவர்கள் வேண்டிய பொருளைக் கொடுத்து விட்டால்,—பாட்டுக்குப் பஞ்சமா?—இன்னும் இரண்டு துதிகவிகளை உளறிவிட்டு வருவதும், ஒன்றும் கொடுக்காவிட்டால், 'நீ உடம்பழுகி சாவாய்' 'குடிக்கத் தண்ணீரற்றுத் தெருத்தெருவாய்த் திரிவாய்' என்று அவனைப்புறங் கூறியும், அதுவும் போதாதென்று 'அவனை அறம்பாடித் தொலைத்து விடுகிறேன்' என்று, சர்வவல்லமையுடைய சாட்சாத் சர்வேசுவரனுகத் தங்களைக் கருதிக் கண்டவாறு பிதற்றுவதும் வழக்கம். மிருகவர்க்கத்திலும் கடைப்பட்டு சோம்பேறிகளாய்த்திரியும் இப் போலிப் புலவர்களும், பொது விஷயங்களில் ஊக்கஞ்செலுத்தாது சுயநலப் பிரியராய்த் திரியும் சுகானுபவர்களும் நிறைந்து கிடக்கின்ற நம் தாய்நாட்டுக்குச் சுதந்தரமும் சுயாட்சியும் கேட்பது, பண்டைகாலம் போல் துக்கப்படுவதற்கோ அறியேன்" என்று ஆவேசங்கொண்டவர்போல் பேசிக்கொண்டு வந்தவர் சிறிது நின்று, 'இதென்ன, முழுமூடசொரூபியாகிய இவளிடத்தில் இதெல்லாம் சொல்லுகிறேமே! நாம் கூறிய விஷயங்களில் ஒன்றையாவது 'அறிந்து கொள்ள இவளுக்குச் சக்தி ஏது? நம் மனக் கொதிப்பால் நம்மை நாமே மறந்து விட்டோமே! என்ன மடமை!' என்று தமக்குள் சிந்தித்துக்கொண்டு, மீண்டும் இராஜத்தை நோக்கி, "அம்மணீ! நீ என்ன வேலையாய் வந்தாயோ, அறியேன், இங்கு நெடுநேரம் உன்னைக் காக்கவைத்து விட்டேன். நீ ஏதோ அன்பைப்பற்றிக் கூறியதால் நான் இவ்வளவு தூரம் பேசும்படியாயிற்று. 'அன்பு' என்பதொன்று இவ்வுலகத்தில் இல்லை என்பதே என்னுடைய அபிப்பிராயம். ஆனல், ஆய்ந்தறிந்த மேதாவிகளில் பலர் அந்த அன்பைப்பற்றித்தான் மிக உயர்வாய்ச் சொல்லியிருக்கிறார்கள். உயிருக்கே கேடு வருமானுலும் உண்மையைக்கூற அஞ்சாத உத்தமர்களுள் மேனுட்டு மேதாவிகளிற் பலரும் இவ்வன்பைப் பற்றி மிகச் சிலாகித்துச் சிறப்பிக்கிறார்கள். ஆயினும், இந்த ஒரு விஷயத்தில் மட்டும் அந்தப் பெரும்புலவர்களும் அறிவு மயங்கி விட்டார்களென்று நான் நினைக்கிறேன். எனக்கு வயது அறுபதாகிறது. இதுவரையில் என் அனுபவத்தில் உண்மை அன்பென்

பதை நான் கண்டறியேன்; காதல் என்பதைக் கேட்டுமறியேன். இனி நான் அன்பியல்பை அறிவதேது, காதற் காட்சியைக் காண்பதேது! உலகம் அன்பால் அசைகிறதென்பது பொய். பணத்தால் புரளுகிறதென்பதே மெய்.

'இல்லானை,
இல்லாளும் வேண்டாள் ஈன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்'

என்று கூறிய கிழவி மிக்க அநுபவமுடையவள்" என்றார்.

இராஜம் ஒன்றும் பதில்சொல்லத் தோன்றாதவளாய், சிறிது முகம்வாடித் திகைத்து நின்றாள். அன்பானந்தர் தாம் சிறிது நேரமாகக் கொண்டிருந்த குரலையும், முகக்குறியையும் மாற்றிக்கொண்டு, புன்னகையோடு அவளை நோக்கி, "வீண்பேச்சில் காலம்போய்விட்டது. இலைபோடும் நேரமாயிற்று. நின் கண்மணியாம் மனோன்மணியிடம் போ. அவள் களைத்திருப்பாள். புருஷர்கள் பந்தி ஆகிறபடி ஆகட்டும். நீ அவளுக்கு, முன்னதாக ஏதாவது ஆகாரங்கொடு. பாவம், அறியாப்பெண். புருஷர்கள் சாப்பிட்டு முடியும்வரை காத்திருக்க அவளால் முடியாது" என்றார்.

"ஆமாம், மற்றப்பெண்டுகளும் என்னைக் காணுமென்று தேடுவார்கள். நான்போகிறேன். உங்களுக்குக் கொஞ்சம் 'காபி' கொண்டு வரச் சொல்லட்டுமா?" என்றாள் இராஜம்.

"வேண்டாம், சாப்பிடும் நேரமாயிற்று, இப்பொழுது காபி எதற்கு?" என்று அன்பானந்தர் கூறிவிட்டுத் தாம் நின்றுகொண்டிருந்த அறைக்குட் செல்லத்திரும்பினார். "ஆனால் சரி" என்று சொல்லிக்கொண்டு இராஜம் தன்மகள் இருக்குமிடத்தை நோக்கி அசைந்தசைந்து சென்றாள்.

வன்மை நிறைந்தமனோன்மணி பத்துப்பன்னிரண்டு ஸ்திரீகளுக்கிடையில் உட்கார்ந்து மேனாட்டார் நாகரீகத்தைப்பற்றியும், அவர்கள் பாவனைகளைப்பற்றியும் பேசிக்கொண்டிருந்தாள். இயற்கையிலேயே அழகமைந்த அவள், இன்று—தன் பதினாறாவது ஆண்டு

நிறைவைமுன்னிட்டுச் செய்யப்படும் சிறப்புகளைக்கருதி மனம் மகிழ்ந்திருந்தமையாலும், இவ்விசேடங்காரணமாகத் தான் நன்ருய் அலங்கரிக்கப் பட்டிருந்தமையாலும் — மிகவும் அழகமைந்த வளாகவே தோற்றினாள். இராஜம் அவளைநோக்கி, "ஏண்டா, கண்ணு, உனக்குக் களைப்பாயிருக்கும், கொஞ்சம் சாப்பிட்டு வந்து விடேன். பந்தி ஆகிறபடி ஆகட்டும். அது வரையில் பசி பொறுத்திருக்க முடியுமா?" என்ருள்.

அதற்கு அந்த 'கண்ணு' தலையை அசைத்துக்கொண்டு, "எனக்குப் பசியுமில்லை, களைப்புமில்லை. எல்லாரும் சாப்பிடும் பொழுது சாப்பிடுகிறேன்" என்றது.

"அதென்னமோ அம்மா, உன்னை முன்னடி சாப்பிடும்படி, உன் மாமா சொன்னர். அதனல்தான் சொல்கிறேன். அப்புறம் உன் இஷ்டம்" என்ருள் இராஜம்.

உடனே அவள் கண்மணியாகிய மனேன்மணி குதித்தெழுந்து "மாமாவா சொன்னர்? சரி, ஆனல் சாதம்போடு, வா" என்று சொல்லிக்கொண்டு தன் தாயிடம் குதித்தோடினாள். இராஜம் அவளை அழைத்துக் கொண்டு சமையற்கட்டை நாடிச்சென்ருள்.

தாயும் மகளும் சென்றபின் நம் மணியைச் சுற்றி உட்கார்ந்திருந்த பெண்மணிகளுள் ஒருத்தி, தன் அருகிருந்தவளை நோக்கிக் கண் சமிக்கை செய்து, "வலை சரியாய் தான் வீசியிருக்கிருள்" என்று மெதுவாய்க் கூறி மனேன்மணியும் இராஜமும் செல்வதைக் கடைக்கண்ணல் பார்த்தாள்.

"என்னமோ, பார்த்துக்கொள்வோம். கிழவன் அவ்வளவு ஏமாந்தவனல்ல" என்ருள் மற்றவள்.

இவ்விருவரும் பேசுவதைக் கவனித்திருந்த வேருெருத்தி இவர்கள் காதில்விழும்படியாகவும், தனக்குத் தானே பேசிக்கொள்வது போலவும், "காலங்கெட்டுப்போச்சு. பெண், மாப்பிள்ளை என்று மணையில் உட்கார்ந்தால், இரண்டும் ஜோடியாயிருந்தால்தானே கண்ணுக்கு அழகாயிருக்கும்" என்ருள்.

அப்பொழுது முதற் பேசியவள் அவளை நோக்கி, "அது சரி தானம்மா, இந்தக் காலத்தில் ஜோடியாவது ஜாடியாவது! பணமிருந்தால் ஜோடி ஜாடியெல்லாம் மூடிபட்டுப் போகும்" என்றாள்.

இதைக் கேட்கவும், அதுவரையில் வேறெங்கேயோ கவனித்துக் கொண்டிருந்த மற்றொருத்தி, "யாருக்கும் யாருக்கும் ஜோடியில்லை என்கிறீர்கள்? அன்பானந்தருக்கும் நம்மவளுக்குமா?" என்று வினவினாள்.

உடனே அவளுக்கு அண்டையிலிருந்த ஒருத்தி, "ஆமாம், ஆமாம்! கொஞ்சம் மெதுவாகத்தானே பேசுங்கள். அக்கம்பக்கத்தில் யார் காதிலாவது விழுந்தால் வம்பு. இராஜத்தின் சமாச்சாரந்தான் தெரியுமே; வாயாடி. நம்மையெல்லாம் சந்திசிரிக்க ஞாயம்பேசுவாள். எவள் எபபடிப்போனால் நமக்கென்ன? அவள் பேராசைபிடித்துத் திரிகிறாள். அவள் பேச்சு நமக்கேன்? தாய்தான் அப்படியென்றால் மகள் அதற்குமேல் இருக்கிறாள். தாயும் பெண்ணும் ஒரு மனதாயிருக்கும்போது நாம் அதைப்பற்றிப் பேசுவானேன்? ஊரிலே, உலகத்திலே, உண்டு, ஒரு பத்து வயது பன்னிரண்டு வயது முன்னே பின்னே கலியாணம் பண்ணுவார்கள். ஆனாலும், கருமம்! அவரைப் பார்த்தால் இவளுக்கு முப்பாட்டனாட்ட மிருக்கிறது. அவரும் இவளும் மாப்பிள்ளையும் பெண்ணுமாக மணையில் உட்கார்ந்தால் வெகு அழகாயிருக்கும்! இந்த வெட்கங்கெட்ட நாய்கள் பேச்சைப் பேசுவதிலும் வேறு எதையாவது பேசலாம்" என்று விரலை முடக்கிக் கவுளடியில் வைத்துக்கொண்டு, "கிழவனை என்ன மயக்கு மயக்குகிறாள்! தேவடியாள் கெட்டாள்! அந்தக் குட்டி அதற்கு மேலிருக்கிறாள். இந்த மானங்கெட்ட நாரிகள் பேச்சைப் பேசுவதென்றாலும் நா கூசுகிறது. நேற்றையகுட்டி இவள்; இவளுக்கு அந்தக் கிழவன் மாமாவாம்! முறையைப்பாருங்கள்! கற்றார்களே வேசிகள்!————————" என்று இவ்வாறு இவ்வம்மை எல்லோர் பேச்சையும் அடக்கிவிட்டுத் தனக்கும் 'பேச நாக்கூசும்' ஒரு விஷயத்தைப்பற்றிப் பேசிக்கொண்டு வந்த வகையை நோக்கினால், அவள் நா, உள்ளபடி கூசுகிற நாவாயிருந்தாலும் இருக்கக் கூடும்; ஆனால் நாளெல்லாம் பேசினாலும் சலியாத நாவென்பது மட்டும் நிச்சயமென்று யாரும் தெரிந்துகொள்ளலாம். இப்

படிப்பட்ட நாவாட்டத்தை நிறுத்துவதெப்படி என்று அக்கூட்டத்துள்ளேயே ஒருத்தி, மிகவும் கவலையுடன் யோசித்துக்கொண்டிருக்கும்போது, அவள் கவலையை மாற்ற, சமையற் கட்டின் வாயிலில் தண்முகம் வாய்ந்த மனோன்மணி மகிழ்ச்சியுற்ற புன்சிரிப்போடு தோன்றினாள். அவளைக்கண்ட ஒருத்தி, மார்கழி மாதத்தில் காவேரியாற்றில் நீர் மொழுமொழுவென்று ஓடி வருவதுபோல் தட்டுத்தடங்க லின்றி வார்த்தைகளைப் பொழிந்துகொண்டிருந்த நாவரசியை நோக்கி, "அம்மா, உங்கள் பேச்சைக் கொஞ்சம் நிறுத்துங்கள். நவமணி வருகிறாள்" என்றாள்.

ஏதோ, நம்முடைய நல்ல காலம், இந்த வம்பர் மகாசபையின் பிரசங்கம் அதோடு முடிவுபெற்றது. நவமணியாகிய மனோன்மணியெனும் கண்மணி வந்து காட்சிகொடுக்காவிடில், இந்நூலின் அருமையான பக்கங்களில் இன்னும் எத்தனை பக்கங்களை மேற்படி சபா அங்கத்தினர்க்கு அர்ப்பணம் செய்ய நேர்ந்திருக்குமோ! நாவரசியின் நாவோட்டத்துக்குச் சரியாக ஓட, எமது எழுதுகோலுக்குப் போதுமான வன்மையிருந்திருக்குமோ என்பதே சந்தேகம்.

உணவருந்தச் சென்ற மனோன்மணி இவ்வளவு சீக்கிரத்தில் திரும்பிவந்ததற்குக் காரணமென்னவென்று வாசகர்களுக்குத் தெரியப்படுத்தவேண்டியது எமது கடமையாயினும், அதன் முழுக்காரணத்தையும் கூற எம்மால் இயலாதிருப்பது பற்றி வருந்துகிறோம். நாவரசி பேச்சோடு முடிவான மாதர்கள் சம்பாஷணையில் கவனம் செலுத்தி நில்லாமல், இராஜத்தையும் மனோன்மணியையும் தொடர்ந்து நாமும் சமையற் கட்டுக்குச் சென்று, அங்கே தாய்க்கும் மகளுக்கும் அவசியம் நடந்திருக்கவேண்டிய அந்தரங்கச் சம்பாஷணையில் சிறிது கவனம் செலுத்தியிருப்போமானால், மனோன்மணி திரும்பிவந்ததற்கு முழுக் காரணமும் நமக்கு விளங்கியிருக்கக்கூடும். அவ்வாறில்லாமையால், மனோன்மணி ஒரு வெள்ளிப்பாத்திரத்தில் காபி எடுத்துக்கொண்டு அன்பானந்தரிடம் செல்ல வருகிறாள், என்பதற்கு அதிகமாக எம்மால் ஒன்றும் சொல்லக் கூடவில்லை. எனினும் அம்மங்கையை இப்பொழுதேனும் பின்பற்றிச் சென்றால், இன்னும் விஷயங்கள் புலனாகக்கூடுமாதலால், அவளையே பின்பற்றிச் செல்வோம்.

## III

### மனோன்மணியின் மனோநிலை.

கையிற் கொண்டபாத்திரத்தோடு, மனோன்மணி அன்பானந்தர் இருக்கும் அறைக்குச்சென்றாள். அவர் அறையுள் ஒரு சோபாவின் மீது சாய்ந்து படுத்தவண்ணமாய் ஏதோயோசனையில் ஆழ்ந்திருந்தார். அறைவாயிலில் யாரோ வரும் அரவம் கேட்கவும், அவர் தம் யோசனையைவிட்டு, அறைவாயிலை எட்டிப்பார்த்தார்; மனோன்மணி வருவதைக் கண்டார்; உடனே நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு அவளை நோக்கி, "ஏனம்மா, மனோன்மணி, எங்கே வந்தாய்? சாப்பிட்டாயா?" என்று வினவினார்.

மனோன்மணி முல்லையரும்புபோன்ற தன் அழகிய பற்கள் தோன்ற நகைத்துக்கொண்டு அன்பானந்தர் அருகே சென்று, "நான் இன்னும் சாப்பிடவில்லை. மாமா! இந்தக் காப்பியை அம்மா உங்களிடத்தில் கொடுத்துவிட்டு வரச்சொன்னாள்." என்று கூறித் தன் கையிற் கொண்டுவந்த காப்பிப் பாத்திரத்தை அவரிடம் நீட்டினாள்.

அன்பானந்தர் அந்தப் பாத்திரத்தை வாங்காமல், "நான்தான் காப்பி இப்பொழுது எனக்கு வேண்டாமென்று உன் அம்மாளிடத்தில் சொன்னேனே" என்றார்.

"இல்லை, மாமா. நீங்கள் சொன்னது நிசந்தான். இருந்தாலும் நீங்கள் களைத்துப்போயிருக்கிறீர்களென்று இந்தக் காப்பியை என்னிடம் கொடுத்தனுப்பினாள். அவசியம் உங்களைக் குடிக்கச் சொன்னாள். காப்பி குடிப்பதால் என்ன கெடுதி? இதைக் குடித்துவிடுங்கள், மாமா" என்றாள் மனோன்மணி.

அன்பானந்தர் சிறிதுநேரம் ஒன்றும் பேசாமல், அப்பெண்மணியைநோக்கிக் கொண்டிருந்தார்; பிறகு, அவள் நீட்டியபாத்திரத்தை வாங்கிக் கையில் வைத்துக்கொண்டு, "மனோன்மணி, இப்படி உட்கார்" என்று தாம் அமர்ந்திருந்த சோபாவின் ஒருபுறத்தைச் சுட்டிக் கூறினார்.

மனோன்மணி அங்ஙனமே, சோபாவில் உட்கார்ந்தாள். உடனே அவர் அவள் கழுத்திலணிந்திருந்த கல்லிழைத்த 'மாங்காய்மாலை'யைச் சுட்டி ' இந்தமாலை உனக்கு விருப்பமாயிருக்கிறதா ?" என்று கேட்டார்.

"ஓ!" என்று கூறி மனோன்மணி சிறித் நாணியவள்போல் தலையைக் குனிந்து கொண்டு, "இந்த மாலை என் பதினாறுவது ஆண்டு நிறைவுக்காக நீங்கள் வாங்கிக் கொடுத்ததாமே, அம்மா சொன்னாள். அப்பொழுதுதான் எனக்குத் தெரியும்" என்றாள்.

"ஆம்; நீ நாலு வயது குழந்தையாயிருந்தபோது, உன் தாய் தந்தையரோடு, கடற்கரையில் விளையாடிக்கொண்டிருந்தாய்; அப்பொழுதுதான் நான் உன்னை முதன் முதற் கண்டேன். பால்வடியும் உன்னைப் பார்க்கப் பார்க்க எனக்கு ஆனந்த மாயிருந்தது. அப்போது நான் கையில் வைத்திருந்த ரோஜாப்பூ வொன்றை உனக்குக் கொடுத்தேன். அதை நீ வாங்கிக்கொண்டு, இப்பொழுது இந்த மாங்காய் மாலைக்காகச் சந்தோஷப்படுவதைவிட அதிகமாகச் சந்தோஷங் கொண்டு முகமலர்ந்து புன்னகை செய்தாய். கள்ளமறியா உன் முகப் பொலிவைக் காணவும், என்னையுமறியாமல் நான் உன்மீது ஆர்வமுற்று, உன்னைத் தூக்க என் இருகைகளையும் நீட்டினேன். உடனே நீ என்னிடம் ஆவலாய் வந்தாய். நான் உன்னை எடுத்து முத்தமிட்டேன். உன்னைக் கீழ்விடுவதற்கே எனக்கு மனமில்லையாயினும், நீ பிறர் பெண்ணானகையில், சற்று நேரம் வைத்திருந்து விட்டுப் பிறகு உன்னை உன் தந்தையிடம் கொடுத்துவிட்டேன். அதுமுதல் உன் தாய்தந்தையர் எனக்குச் சினேகிதர்களாயினர். நாளடைவில் உன் குடும்பத்தாருக்கும் எனக்கும் சினேகம் பலப்பட்டுவிட்டது. இதெல்லாம் உனக்கு ஞாபகமிருக்கிறதா ?" என்று வினவினார் முதியவர்.

"ஓ, நன்றாய் ஞாபகமிருக்கிறது! கடற்கரையில் என்னைத் தூக்கிய நீங்கள், திரும்பவும் என்னை ஏன் என் தந்தையிடத்தில் கொடுத்தீர்கள்? நீங்களே வைத்துக்கொள்ளகூடாதா ?" என்றாள் அப்பெண்மணி.

" அப்படிக் கேட்கிறாய்; நானே வைத்திருந்தால் என்னிடத்தில் நீதான் இருப்பாயா? உன் தாய்தந்தையர்தாம் உன்னை என்னிடம் விட்டுவிட்டிருப்பார்களா?" என்றார் அன்பானந்தர்.

" நான் என் உங்களிடத்தில் இருக்கமாட்டேன்? உங்களைவிட எனக்கு வேறெவரிடத்திலும் ஆசையில்லையே" என்றனள் மனோன்மணி.

இதைக் கேட்கவும் அன்பானந்தர் சற்று திடுக்கிட்டார்; ஆயினும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல், "பேதாய், யாருக்கும் இயல்பாக தம் தாய் தந்தையரிடத்தில் விருப்பமிருக்கும்; அதிலும் உன்னைப்போன்ற வாலிபப் பெண்களுக்கு, அழகும், கல்வியுமுடைய வாலிபன் ஒருவனைப் புருஷனாக அடையவேண்டுமென்ற ஆசை மிகுந்திருக்கும். அவ்விதமானவன் ஒருவனை அடைந்து விட்டால், பிறகு அவன் மீது எற்படும் அன்பும் ஆசையும், தாய்தந்தையரிடத்துள்ள அன்புக்கும் ஆசைக்கும் மேற்பட்டுவிடும். இது இயற்கை. அவ்வாறாக நீ என் மீது கொண்டுள்ள ஆசை வேறெவரிடத்திலும் இல்லை என்று சொல்வது ஆச்சரியமாயிருக்கிறது. அதில் எனக்கு நம்பிக்கை இல்லை. உபசாரமாகக் கூறுகிறாய்போலிருக்கிறது" என்றார்.

உடனே மனோன்மணி அன்பானந்தரை நோக்கி, " மாமா, என்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள்? நான் கூறியது உபசார வார்த்தையல்ல. உண்மையையே கூறினேன். அதைப்பற்றி நீங்கள் சந்தேகப்பட வேண்டாம். வாலிபர்களைப் பற்றி நான் கனவிலும் நினைத்ததில்லை. ஒரு புருஷனை நான் விவாகம் செய்துகொண்டால்; அந்தப் புருஷனிடத்தில் என் முழு அன்பையும் ஆசையையும் செலுத்துவேன் என்பது உண்மையே. ஒரு ஸ்திரீ தன் புருஷன் ஒருவனிடத்தில் தான், தன் பூரண அன்பையும் செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறாள் என்பது எனக்குத் தெரியும். நான் வாசித்த நூற்களில் ஸ்திரீகள் கடமையைப்பற்றி விரிவாய்ச் சொல்லியிருக்கிறது. ஆனால், அந்தப் புருஷன் வாலிபம், அழகு, கல்வி இவைகளை உடையவனாயிருக்கவேண்டும் என்பது அவசியமில்லை. வாலிபம், அழகு, கல்வி இவை யெல்லாம் எதற்கு? உலகில் இன்பமாய் வாழ்வதற்கு இன்றி

யமையாது வேண்டப் படுவது செல்வம். 'பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை' என்று திருவள்ளுவரும் சொல்லியிருக்கிறார். ஆதலால் பணம் ஒன்றே பிரதானம் என்பது எனது கருத்து. அது ஒன்று இருந்து விட்டால் மற்றவை இருந்தாலென்ன, இல்லாவிட்டாலென்ன? அந்தப்படி பார்த்தால் உங்களைவிட உயர்ந்தவர் வேறு எவர் நம்நாட்டில் இருக்கிறார்? அவ்வாறாக, உங்களிடத்தில் எனக்கு அன்பு மிகுந்திருப்பது இயல்புதானே. இப்படிப்பட்ட உன்னத நிலையிலுள்ள உங்களைவிடவேறு யாரிடத்தில் நான் அன்புபாராட்டப் போகிறேன்? நீங்கள் என்னிடத்தில் இவ்வளவு பிரியம் வைத்திருப்பது ஏதோ என்னுடைய பூர்வ ஜன்மபுண்ணியமென்றே நினைத்து நான் அடிக்கடி அகமகிழ்வதுண்டு" என்றாள்.

இதைக் கேட்டுவரும்போதே முதியவர் முகத்தில் சிறிது விசனக்குறி தோன்றியது. ஆனால் அருகிருந்த அம்மங்கை அதை கவனிக்கவில்லை. அன்பானந்தர் அவளை நோக்கி, "நல்லது, நீ பசியோடிருக்கிறாய். போய் சாப்பிட்டுவிட்டு, புருஷர்கள் பந்தியில் உட்கார்ந்ததும் இங்கே வா. நான் உன்னோடு சில விஷயங்களைப் பற்றித் தனித்துப் பேசவேண்டியிருக்கிறது. எனக்குப் பசியில்லை யாதலால், நான் பந்தியில் உட்கார்ந்து சாப்பிடப்போகிறதில்லை. இந்தக் 'காப்பி' போதும்" என்று கூறிக் கையிலிருந்த காபியைக் குடித்துவிட்டுப் பாத்திரத்தை மனோன்மணியின் கையில் கொடுத்துப், "போய்வா" என்றார்.

மனோன்மணி பாத்திரத்தை வாங்கிக்கொண்டு அன்னம் நடப்பது போன்று நடந்து சென்றாள்.

---

## IV

## பண ஆசையும் பதவியின் சீர்கேடும்

இயல்பாகவே மனதிற்கு அருவருப்பைத் தரக்கூடிய அனேக விஷயங்கள், வழக்கத்தினால் தம் இயல்பு மறைபட்டு, நமக்கு இன்பந்தருவனவாக மாறிவிடுகின்றன—அல்லது தோன்றுகின்றன. உணவுப் பொருள்களை ஒருவன் வாயிலிட்டு மென்று தின்னும் காட்சியைவிட,

பார்ப்பதற்கு அருவருப்பான விஷயம் ஒன்றில்லை. அழகினியல்பை அறிந்து அனுபவிக்கும் நுட்ப உணர்வு வாய்ந்தவர்களுக்கு அதன் அருவருப்புத் தோன்றுமலிராது. இது பற்றியே போலும், பைரன் (Byron) என்னும் ஆங்கில கவிஞர் ஒருவர் "மனிதர்கள், தனிமையில் பிறர்கண்ணுக்குப் படாமல் உணவுஉட்கொள்ளவேண்டும்" என்று கூறியிருக்கிறார். நம்மவர்களும், தாம் சாப்பிடுவதைப் பிறர் பார்க்கக்கூடாது, என்று ஜாதி காரணமாகக் கொண்டிருக்கும் அபிப்பிராயத்திற்கும் இதுவே மூலகாரணம் போலும். ஆனால், அவ்வாறு தனிமையில் சாப்பிடுவது தேகசௌக்கியத்திற்கு இடையூறனதென்றும், நண்பர்களோடு சந்தோஷமான விஷயங்களைப் பேசிக்கொண்டு உணவைச்சாவகாசமாய் மென்று உண்பது அவ்வுணவு ஜீரணமாவதற்கு அனுகூலமானதென்றும் சிறந்த ஆங்கிலவைத்திய நிபுணர்கள் சொல்லுகிறார்கள். ஆயினும், அழகியலறிந்து இன்புறும் நுண்ணுணர்வோடு நோக்குமிடத்து ஒருவன் உணவுட்கொள்ளும் காட்சி பார்ப்பதற்கு இன்பந்தரத்தக்கதல்லவென்பது உண்மை. ஆனால், வழக்கத்தினால் பந்தியிலுண்பதை ஓர் இன்பமாக நாம் கருதிவருகிறோம்.

பந்தியிலுண்பது பெரும்பாலார்க்கு எவ்வளவு ஆனந்தத்தைக் கொடுப்பதாயுள்ளதென்பதை அறியவேண்டுமானால், மனோன்மணியின் பதினாறாவது ஆண்டு நிறைவுக் கொண்டாட்டத்தன்று இரவு சுமார் ஒன்பது மணிக்கு, அன்பானந்தர் வீட்டில் நடந்த விருந்தில் பந்தியில் உட்கார்ந்திருந்தவர்கள் முகத்தைப் பார்த்தால் சுலபமாய்த் தெரிந்து கொள்ளலாம். இலையில் உட்கார்ந்ததும் அவர்கள் சூரியனைக் கண்ட தாமரை போல் முகமலர்ந்தார்கள். பின்னர், இலையிலிட்ட அறுசுவையுணவை உட்கொள்ளும் போது, அவர்களுக்கு இவ்வுலக முழுவதும் இன்பமயமாயிருப்பதாகத் தோற்றியது. அதிலும் கோடீஸ்வரர் அன்பானந்தர் வீட்டு விருந்தென்றால் சொல்லவேண்டுமா? பரிமாறப்பட்ட பதார்த்தங்களின் வகை இத்தனையென்று சொல்லமுடியாது. அவ்வளவையும் சாப்பிடுவதற்கு ஒருவராலும் முடியவில்லை. சிலர்—இவர்கள் அன்னசத்திரங்களிலும், மடங்களிலும் சாப்பிட்டுச் சாப்பிட்டுக் கைதேர்ந்தவர்கள்—எண்சாணுடம்பில் நான்கு சாணுவது வயிறாக வைக்காமல், ஒருசாணில் வயிற்றை அடக்கிவிட்ட சிருஷ்டி கர்த்தாவின் மூடத்தனத்தை நினைத்து மனம் வருந்தினார்கள். இந்தப் பந்தி

யில் வீட்டுத்தலைவராகிய அன்பானந்தர் இல்லை. அதற்குக் காரணம் என்னவென்று வாசகர்கள் அறிவார்கள். ஆதலால், இந்த வயிறுடைச் செல்வர்கள் வயிறார உண்ணட்டும்; நாம்அந்தப் பணமுடைச் செல்வரைப் பார்க்கச் செல்வோம்.

புருஷவிருந்தினர் பந்தியில் அமர்ந்து போஜனம் செய்யத் தொடங்கியபோது, அன்பானந்தர் தம் அறையில் சிந்தாக்கிரந்தராய் உலவிக்கொண்டிருந்தார். பல பல எண்ணங்களால் அவர் மனம் சஞ்சலமுற்றது. சிறிது காலமாக அவர் தம்மைப் பற்றியும், தமது செல்வத்தைப் பற்றியும், தம்மைச் சூழ்ந்தவர்களைப் பற்றியும், கொண்டிருந்த வெறுப்பும் அருவருப்பும் சலிப்பும் சமீபத்தில் சிறிது நேரத்திற்கு முன்னால் நிகழ்ந்த ஒரு சந்தர்ப்பத்தால், இன்னும் அதிகமாயின. தாம் மிகவும் அன்பு பாராட்டிவந்த பெண், பெற்றெடுத்த தந்தைபோல அவள் வாழ்க்கையை இன்பமாய்ச் செய்யவேண்டு மென்று பல வகையிலும் அவளை மேன்மைப் படுத்தி வந்ததும், அவளும்—முதன் முதல் கள்ளங்கபடமற்றுத் தோன்றிய அவளும்—செல்வர்கள், அந்தஸ்துடையவர்கள் என்று சொல்லப் படுகிற அந்தக் கூட்டத்திற் பெரும் பாலாரைப்போலவே, தன்னலம் ஒன்றை யன்றி வேறெதையும் கருதாதவளாய், தன் இன்பம்——நிலையில்லா அற்பப் போலி இன்பம்——ஒன்றைத்தவிர, உண்மை, அன்பு, முதலிய உயர்ந்த குணங்கள் ஒரு சிறிதும் இல்லாதவளாய் இருப்பதைக் கருதி, அல்லது இருப்பதாகக் கருதி, அவர் மிகவும் மனம்வருந்தினர். அனுதாப உணர்ச்சியின்றி அவளை இழிகுணத்தாளாகக் கருத அவருக்கு விருப்பமில்லை. ஆயினும், தம்முடைய முதிர்ந்த வயதும், நிறைந்த அனுபவமும், அவள் குணத்தை உள்ளது உள்ளவாறே அவருக்குக் காட்டிவிட்டன. அவர், அவளை அவ்வளவு அற்ப குணமுடையவளாகக் காணவிருப்பமின்றி பற்பல நிலையிலிருந்து அவ்ளை உயர்குணமுடையவளாகப் பார்க்க முயன்றார். எந்நிலையில் நின்று எப்படிப்பார்த்தாலும், அவள் சிறுகுணத்தாளாகவே காணப்பட்டாள். அதை நினைக்க நினைக்க அவர் மனம் மிகவும் வருந்தியது. நிலையான இன்பமென்று—உண்மை அன்பால் விளையும் இன்பமொன்றைத் தவிர— ஒன்றில்லாத இவ்வாழ்க்கையில், நிலையான அன்பால் வரும் அவ்வின்பத்தை, இந்தப் பெண்ணிடத்திலாவது

பெறலாமென்று தாம் நினைத்திருந்த நினைவு கனவாய் விட்டதே யென்று சிந்தை நொந்தார்; 'ஆ, அவள் உருவம் அழகாயிருப்பதுபோல, அவள் உள்ளமும் அழகாயிருக்கக் கூடாதா' என்றெண்ணிப் பெருமூச்சுவிட்டார். இவ்வாறு பற்பல எண்ணி உலவிக்கொண்டிருந்தவர், திடீரென்று நின்று, ஏதோ ஒருவகையான முடிவுக்கு வந்தவர்போல் "யார் எப்படியிருந்தால் என்ன? நாம் ஏன் அதைப்பற்றி வருந்த வேண்டும்? எத்தனையோ கனவுகளில், இதுவுமொரு கனவு. மற்றக் கனவுகள் மறைந்து போனதுபோல இதுவும் மறைந்துபோகட்டுமே. அதற்காக ஏன் வருந்தவேண்டும்? பேரறிவுடைய புலவர்களே, இனியது, நல்லது, ஆயினும் இல்லது என்று கூறிய ஒன்றை நாம் உள்ளதாகக் கருதி ஏன் உள்ளம் புண்ணுகவேண்டும்? மேலும் இவ்வளவு வயதான பிறகு நமக்கு இந்த ஆகாயக் கோட்டை ஏன்? அநேகர் அவ்விதந்தான் சொல்வார்கள். ஆயினும், காடு வா வா, வீடு போ போ என்னும் இக்காலத்திலுங்கூட உண்மை, அன்பு, கற்பு என்பன ஸ்திரீகளிடத்தில் இல்லாமற் போகவில்லை என்பது எனக்கு நிச்சயமாய்த் தோற்றுகிறது. ஆனல், அவைகளையுடைய ஒரு ஸ்திரீயைக் காண்பதுதான் வருத்தம்" என்று தமக்குள் சொல்லிக்கொண்டு மீண்டும் உலவத்தொடங்கினர்.

அப்பொழுது அறைக்கதவைத் திறந்துகொண்டு மனேன்மணி உள்ளே வந்தாள். அவள் உதடுகள் புன்னகை புரிவனபோல் காணப்பட்டன வாயினும், அதற்கேற்ற மலர்ச்சி முகத்திற் காணப்படவில்லை. ஏதோ மனக்குழப்பத்தால் அவள் முகம், மலர்ச்சியிழந்திருந்தது. முதியவர் அவளைக் கண்டதும், "சாப்பிட்டாயா?" என்று வினவினர்.

"சாப்பிட்டுவிட்டேன்" என்றுள் அப்பெண்மணி.

"சரி, இப்படி வந்து உட்கார்" என்று சொல்லிக்கொண்டு சோபாவில் உட்கார்ந்தார் அன்பானந்தர். அம்மடமங்கையும் அவர் அருகில் உட்கார்ந்தாள். அவளையும் அறியாமல் அவள் உடம்பு சிறிது நடுங்கிற்று.

அன்பானந்தர் அவளை நோக்கி, "குழந்தாய்! குணத்தைத் திருத்தி, மனத்தை நன்னிலையில் உறுதிபெற நிற்கச்செய்வதற்கு முக்கிய சாதனம் கல்வியென்று கருதி, நான் உன்னைப் படிக்க வைத்தேன். ஆதலால், உன்னுடைய கல்வி எவ்வளவு தூரம் உனக்குப் பயன்பட்டிருக்கிறதென்று பரிக்ஷிப்பதற்காகவே உன்னை இங்கே வரச் சொன்னேன். என் கேள்விகளுக்கு பதில் சொல்ல நீ தயாராயிருக்கிருயா ?" என்ருர்.

"ஓ! இங்லிஷிலாகட்டும், தமிழிலாகட்டும், நீங்கள் எந்தக் கேள்வி கேட்டாலும் பதில் சொல்வேன்." என்ருள் அம்மங்கை.

"நல்லது; சமமான பருவமும், கல்வியும், குணமும், குலமும், அழகும், செல்வமுமுடைய, ஓர் ஆண்மகனும் ஒரு பெண்மகளும் ஒருவரை யொருவர், தான், அவள், என்னும் வேற்றுமையின்றித் தானே அவள், அவளே தான் என்னும் விகற்பமற்ற உணர்வோடு உருவு இரண்டாயினும் உள்ளம் ஒன்ருய், உண்மை அன்பால் ஒன்றுபட்டு விவாகம் செய்து கொண்டு வாழ்வதே சிறந்த வாழ்க்கை என்று பழைய சங்ககாலத்து நூல்கள் கூறுகின்றன அல்லவா?" என்று வினவினுர் அம்முதியார்.

"ஆம்" என்ருள் மனோன்மணி.

"அவ்விதமான சிறந்த வாழ்கையில் உனக்குவிருப்பமில்லையா?"

"உண்டு."

"அதாவது, உன்னுடைய பருவத்திற்கேற்ற ஒருவனை—அதாவது, சுமார் இருபது இருபத்திரண்டு வயதுள்ள ஒரு வாலிபனை—அவன் உனக்கேற்ற அழகும், கல்வியும், குணமும் உடையவனு யிருந்தால்—விவாகம் செய்துகொள்ள நீ விரும்புகிருயா ?" என்ருர் அன்பானந்தர்.

"பருவம், அழகு, கல்வி, குணம் என்னும் இவற்றைச் சொன்ன நீங்கள் 'செல்வம்' என்பதை விட்டு விட்டீர்களே" என்ருள் மனோன்மணி.

அன்பானந்தர் புன்னகை புரிந்து, "ஆம், முக்கியமான அந்த விஷயத்தை மறந்துவிட்டேன்; அதையும் சேர்த்துக்கொள். உனக் கேற்ற செல்வமும் உடையவனுயிருந்தால் அவனை விவாகம் செய்து கொள்ள உனக்கு விருப்பந்தானு?" என்று கேட்டார்.

அந்நங்கை சிறிதுநேரம் யோசித்தாள். பிறகு, சற்று நாணத் தோடு அன்பானந்தரை நோக்கி, "இவ்விதமாக நீங்கள் கேட்டால் அதற்குச் சாமர்த்தியமாய் பதில் கூற நான் அவ்வளவு கெட்டிக்காரி யல்லவே" என்ருள்.

"நீ கெட்டிக்காரத்தனமாய் பதில் சொல்லவேண்டு மென்ப தில்லை. சாதாரணமாய் ஸ்திரீகளை கெட்டிக்காரத்தனமுடையவர்களாக் கும் வாழ்க்கையின் துன்பதுயரங்களில் நீ இன்னும் அடிபடவில்லை யாதலால், உன்னிடத்தில் கெட்டிக்காரத்தனத்தை நான் எதிர்பார்க்க வில்லை. மனதில் உள்ள விருப்பத்தை வெளியிட்டுச் சொல்வதற்குக் கெட்டிக்காரத்தனம் என்ன வேண்டியிருக்கிறது?" என்ருர் அன்பா னந்தர்.

"என் விருப்பம், எனக்கு மணாளனுய் வாய்ப்பவர் திரண்ட செல் வமுடையவராக இருக்கவேண்டு மென்பதுதான்" என்ருள் மனோன் மணி.

அப்பொழுது அப்பெரியார் தம்முகத்தில் உண்டான வேறு பாட்டை அவள் பார்க்காமலிருக்குப்பொருட்டு, எதையோ நினைத்துப் பின்னல் திரும்பிப் பார்ப்பது போல் திரும்பிச் சிறிதுநேரம் அவ்வண் ணமே இருந்து, தம் மனோநிலை மீண்டும் முன்னிலைக்கு வந்தபிறகு, தலையைத் திருப்பி அப்பொற்ருெடியை நோக்கி, "சிறந்த வாழ்கை இப்படிப்பட்டதா யிருக்கவேண்டு மென்பதை நீ நூல்களால்அறிந்தும், அவ்விதமான வாழ்க்கையை அடையவேண்டு மென்ற விருப்பங்கூட உன்மனதில் இல்லாவிட்டால் நீ கற்ற கல்வியால் பயன் என்ன?" என்று உசாவினர்.

"மாமா, நீங்கள் இப்படிக் கேட்பது எனக்கு ஆச்சரியமாயி ருக்கிறது. என்னைவிட, தாங்கள் எவ்வளவோ அதிகமான அனுபவ

முடையவர்கள். புஸ்தகத்தில்படிப்பதற்கும் உலகத்தில் நடப்பதற்கும் என்ன சம்பந்தம்? பொழுது போக்குக்காகவும், பொருள் தேடுவதற்காகவும் புஸ்தகங்கள் பயன்படுமேயன்றி, புஸ்தகப்படிப்பை உலக நடப்பில் கொண்டுவருவோர், பைத்தியக்காரர் என்று இகழப்பட்டு உலகில் துன்பப்படுகிறதை நாம் நேரில் பார்க்கிறோமே'' என்றாள் மனோன்மணி.

அன்பானந்தர் அவளை வெறித்து நோக்கி, "மனோன்மணி! நான் உன்னிலும் அதிக வயதானவனாகியும்—அறுபது வயது கிழவனாகியும் உனக்குத் தெரிந்த உலக அனுபவம் எனக்குத் தெரியவில்லை. பொழுது போக்குக்கும் பொருள் தேடுவதற்குமே புஸ்தகங்கள் எழுதி வைக்கப்பட்டன என்று உனக்குத் தெளிவாய்ப் புலப்பட்டது போல, எனக்கு இப்பொழுதாவது புலப்படுமாயின், நான் என் செல்வத்தைக்கொண்டு உலகத்திலுள்ள புஸ்தகங்களை யெல்லாம் வாங்கி நடுக்கடலிற் போட்டுவிடுவேன். ஆனால், புஸ்தகங்கள், பொழுது போக்குக்கும் பொருள் தேடுவதற்கும், ஒரு வகையில் உபயோகப்படுவனவாயினும், அவற்றின் முக்கிய உபயோகம், வாழ்க்கையில் உயர்நிலை காட்டி, அந்நிலையை அவாவி அடையும்படி மனிதர்களைத் தூண்டுவதே என்ற நம்பிக்கை இன்னும் என் மனத்தில் உண்டு,'' என்றார்.

"மாமா, உங்களுக்கு அந்த அபிப்பிராயம் இருந்தால், நானும் அதே அபிப்பிராயத்தைக் கொள்கிறேன். ஆனால், நூலெழுதிய புலவர்களே, தாம் கூறிய வாழ்க்கை இனியதும் நல்லது மாயினும் இல்லது என்று கூறியிருக்கும் பொழுது, அந்நிலையை நாமடையக் கூடுமா? கிடைக்கக்கூடிய பொருளைப்பற்றி ஆசைப்படுவது அறிவுடைமையா? கிடைக்கக் கூடாத பொருளைப்பற்றி ஆசைப்படுவது அறிவுடைமையா?'' என்றாள் அவ்வொண்டொடி.

"மனுவு! நீ இவ்வளவு அறிவுடையவளாயிருப்பதைப்பற்றி நான் மிகவும் மகிழ்கின்றேன். ஆனால், சிலர் கருத்து, கிடைக்கக் கூடிய ஓர் அற்பப் பொருள்மீது ஆசைப்பட்டு அதை அடைவதிலும், கிடைக்கக் கூடாத ஓர் உயர்ந்த பொருள் மீது ஆசைப்பட்டு, அதை

அடையாமற்போவது மேன்மை என்பதாகும். எனது கருத்தும் அதுவே; ஏனெனில், அற்ப வஸ்துவை அடைவதிலுள்ள ஆனந்தத்திலும் உயர்ந்தவஸ்துவை அடைய முயற்சிப்பதில் அதிக ஆனந்தம் இருக்கிறதாக நான் நினைக்கிறேன் " என்றார் அன்பானந்தர்.

"வயிறு பசித்தால், கிடைக்கக் கூடிய உணவைத் தேடி உண்பதா? கிடைக்க முடியாத அறுசுவை உணவை விரும்பி ஓடி அலைந்து வருந்துவதா ?" என்றாள் மனோன்மணி.

" பேதாய், உணர்வு நிலையிலிருந்து நான் பேசிவரும் ஒரு விஷயத்திற்கு, நீ உணவு நிலையிலிருந்து உதாரணங்காட்டுவது வேடிக்கையாயிருக்கிறது. கீழ்க்கோடியும் மேற்கோடியும் தம்முள் எவ்வளவு தூரம் விலகியிருக்கின்றனவோ, அவ்வளவு தூரம், உணவும் உணர்வும் தம்முள் விலகியுள்ளன. உணவுகொண்டு உயிர்வாழ்தல் உலகிலுள்ள உயிர் வருக்கங்கள் அனைத்திற்கும் இயல்பு. ஆனால் உணர்வு கொண்டும், அவ்வுணர்வில் உள்ள பல நிலைகளில் கீழ்ப்பட்டனவற்றினின்றும் நீங்கி மேலேறி உன்னத நிலையை யடைய வேண்டுமென்ற அவாவும் மனிதவர்க்கத்துக்கு மட்டும் உரிய சிறப்பியல்பு. இந்த உணர்வு நிலைக்கும் அந்த உணவுநிலைக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. உணவு அழிந்துபோகும் உடலை வளர்ப்பது. உணர்வு என்று மழியா ஆன்மாவின் ஒளியை வளர்ப்பது. இதனால் தான், தம்முடைய வாழ்க்கையாலும், போதனைகளாலும் எண்ணிறந்த ஜீவர்களை நல்வழியிற் செலுத்தியவர்களும், செலுத்துகிறவர்களும், செலுத்துவோர்களுமான, ஞானிகள் பலர் உணவை லட்சியம் செய்யாது, காட்டிலிருந்தால், காய், கனி, கிழங்குகளைப் புசித்தும், நாட்டிலிருந்தால் பிச்சையெடுத்துண்டும்.

"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மொட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே"

என்ற திருமந்திரத் திருவாக்கின்படி, ஞானஉணர்ச்சியில் விருத்தியாவதற்கு உயிர்வாழ்க்கை அவசியமென்பதை அறிந்து, அந்த ஒன்றக்காகத் தம் உடம்பைக் காப்பாற்றிக்கொண்டு, உயர்ந்த உணர்ச்சியும் அதுபற்றி ஏற்படும் ஒழுக்கமுமே பிரதானமாகக்கருதி வாழ்ந்திருந்தனர்—இருக்கின்றனர். அற்புத ஞான வைராக்கியத் திருவருட் செல்வராகிய பட்டினத்தாரும் இதுபற்றியே,

"வீடு நமக்குத் திருவாலங் காடு; விமலர்தந்த
ஓடு நமக்குண்டு, வற்ருத பாத்திரம்; ஓங்குசெல்வ
நாடு நமக்குண்டு கேட்டதெல்லாந்தர; நன்னெஞ்சமே!
ஈடு நமக்குச் சொலவோ ஒருவரும் இங்கில்லையே."

என்று அருளிச் செய்தார். மேலும், உன் கல்வியைக் கருதும்போது நீ அவசியம் அறிந்திருக்கவேண்டிய ஒன்றை அறியாதவளைப்போல்—அல்லது அறியாமலே—பேசுகிருய். ஆதலால், அந்த விஷயத்தை உனக்கு இப்போது நான் விளக்கிச் சொல்கிறேன். அதாவது: மிருகவர்க்கத்தில் மனிதன் சிறந்தவனுயினும், அவனும் அந்த மிருகவர்க்கத்தைச் சார்ந்தவன்தான். அவனிடத்தில் மிருகசுபாவங்கள் பல இருக்கின்றன. சிருஷ்டிக் கிரமத்தில்,

" புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்மிருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகி

* * * *

செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் "

என்று ஸ்ரீமந் மாணிக்கவாசக சுவாமிகள் கூறியபடி பலவகைப்பட்ட மிருகங்களாகப் பிறந்து பிறந்து, முடிவில் இம்மனிதப் பிறவி கிட்டுகிறது. இப்படி எண்ணிறந்த காலம் மிருகஜன்மத்திற் கிடந்துஉழன்ற பழக்கம் அறவே ஒழிந்துவிடுமோ ? விடாது. ஆதலால், மனிதனிடத்தில் மிருகசுபாவங்கள் பல இயல்பாய் அமைந்து விடுகின்றன. ஆயினும், பெருங்கருணைக்கடலாகிய கடவுள், மனிதனுடைய முன்

னேற்றத்தைக் கருதி, தமது தெய்வீக குணமாகிய அன்பையும் ஞானத்தையும் அவனிடத்தில் அமைக்கிறார். அப்படி அவர் கொடுத்த ஞான உணர்ச்சியாகிய விளக்கைத் தூண்டி, அதன் ஒளிகொண்டு பல ஜன்மங்களாய்த் தன்னைத்தொடர்ந்து வரும் மிருகசுபாவங்களில் விலக்க வேண்டுவனவற்றை விலக்கியும், தனக்கு உதவியாய் வைத்துக்கொள்ள வேண்டுவனவற்றை வைத்துக்கொண்டும், மேலேறி, அன்பாகிய இன்பத்தேனைக் கண்டு பருகி இன்புற்று வாழ்பவனே மனிதன் எனப்படுவான். அங்ஙனம் அவன் தனக்கு உதவியாக வைத்துக்கொண்டிருக்கும் மிருகசுபாவங்களுள் பசியும் ஒன்று. ஆதலால், பசிக்கு உணவு கொடுக்கவேண்டியது அவன் கடமைதான். ஆனால், அதைத் தான் அடக்கி, கொடுத்ததை உண்டு திருப்தியோடிருக்கும்படி செய்வதை விட்டுத், தானதற்கு அடிமையாகி அது கேட்கும் விதமெல்லாம் அதற்கு உணவுகொடுத்தாகவேண்டுமேயென்று வருந்துகிறவனைவிட மூடன் வேறொருவன் இல்லை. ஆதலால், நீ கூறிய உதாரணம் பொருந்தாது. பசியினால் உயிர்போகும்போலிருந்தால் மிகவும் இழிந்த உணவாயினும் கிடைத்ததை உண்டு உயிரைப் பாதுகாக்கவேண்டியதவசியமே. ஆனால் உயிர்போவதாயிருந்தாலும் தனக்கு உயர்வு என்று மனமாரத் தெரிந்த ஒழுக்கத்தினின்றும் இறங்கித் தாழ்ந்ததொன்றைக் கைப்பற்றக் கூடாது. உயிரினும் ஒழுக்கம் சிறந்ததென்பதை வற்புறுத்தவே, ஆசிரியர் திருவள்ளுவர் 'ஒழுக்கமுடைமை' என்று வகுத்த அதிகாரத்தின் துவக்கத்திலேயே,

“ ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும் ”

என்றார். ஆனால், இவைகளெல்லாம் 'எட்டுச் சுரைக்காய்; ஆதலால் கறிக்குதவாது' என்று கருதியிருக்கும் உனக்கு'நான் என்ன சொல்லியும் என்ன பயன்?” என்றார் அன்பானந்தர். அம்மங்கை அன்பானந்தர் தன் அபிப்பிராயங்களை இழிவாகக் கருதியிருக்கிறார் என்பதை அறிந்து, “மாமா, என் அபிப்பிராயங்கள் தவறாயின் அவற்றை மாற்றித் திருத்துவது தங்கள் கடமையே யன்றோ ?” என்றாள்.

"உண்மைதான். நீ கொண்டுள்ள தப்பபிப்பிராயங்களை மாற்றுவது என் கடமையெனக்கருதி நான் உன்னைத் திருத்த முன் வந்தால் நீ திருந்துவையோ?" என்று வினவினர் அன்பானந்தர்.

"அதைப்பற்றிக் கேட்கவேண்டுமோ? உங்கள் விருப்பத்திற்கு மாருக நான் ஒரு நாளும் நடக்கமாட்டேன்" என்ருள் மனோன்மணி.

"நல்லது, என்ருல் திருத்தப்படுவதற்கு நீ சம்மதித்தபோதிலும் திருந்துவதற்கு உன்ருல் முடியுமா, அல்லது, என்ன திருத்தினுலும் திருந்த முடியாதபடி உன் ஒழுக்கம், பழக்கத்தில் முற்றிவிட்டாதா என்பதை நான் அறிந்துகொள்வது அவசியமன்ருே? அதற்காக உன்னை ஒன்று கேட்கப்போகிறேன். அந்தக் கேள்வி மிகவும் கடினமானது. ஏனெனில் அந்தக் கேள்விக்கு நீ கூறும் விடை எனக்கு மிகவும் துயரந்தருவதொன்ருயிருந்துவிடக் கூடுமென்று அஞ்சுகிறேன். உன் விடை நான் எதிர்பார்க்குமாறு இல்லாவிட்டால், அதனுல் என் குறைவாழ்நாள் முற்றும் என் மனத்தை விட்டகலாத ஒரு பெருந்துயரம் உண்டாய்விடும். உன் ஸ்திரமான உள்ளநிலையைப் பரிசோதிக்கும் கேள்வியாகும் அது. அந்தப் பரிசோதனை கேள்வியைக் கேட்கட்டுமா?" என்று கூறி அப்பெரியார் அவளை உற்று நோக்கிக்கொண்டிருந்தார். அவ்விளங்குமரியும் அவரை நோக்கியபடியே இருந்தாள். ஆனுல், அவள் நெஞ்சு நடுங்கியது. 'இந்தக் கேள்விக்காகத்தான் இவர் நம்மை இங்கே வரச்சொன்ஞர்போலிருக்கிறது. நான் ——————க்கு மறுத்துவிடுவேன் என்ற சந்தேகம் இருக்கும்போலிருக்கிறது. எல்லாச் சந்தேகங்களையும் தீர்த்து விடுகிறேன். என் விடை, அன்பானந்தர் ஆஸ்திக்கு என்னை உரியவளாக்கிவிடும்' என்று அவள் தனக்குள் எண்ணிக்கொண்டு, அன்பானந்தர் வினவுக்கு உத்தரமாக, "மாமா, உங்கள் கேள்விக்கு விடைகூற என்ருற் கூடுமானுல் கூறுகிறேன், கேளுங்கள்" என்ருள்.

அன்பானந்தர் அவள் இருகரங்களையும் எடுத்துப்பிடித்துக்கொண்டு "மனோன்மணி, 'கேளுங்கள்' என்று நீ கூறிவிட்டபோதிலும் என் மனம் துணியவில்லை. அந்தக் கேள்வியின் பயன் என்னவாகுமென்

பது கேட்டபிறகுதான் உனக்குத் தெரியக்கூடும். அது ஒரு துணிகா மான கேள்வி—என்னைப்போல் வயதான ஒருவன் ஒரு சிறுமியைக் கேட்கக் கூடாதகேள்வி—உனக்குக் கோபமுண்டாக்கக் கூடியது" என்றார்.

மனோன்மணி அவர் பற்றியிருந்த தன் கரங்களைப் பின்னிழுத்துக் கொண்டு, "எனக்குக் கோபமுண்டாகக்கூடியதா? தங்கள் மீது எனக்குக் கோபம் உண்டாக்கக் கூடியதா! அப்படிப்பட்ட கேள்வி எது வாயிருக்கக் கூடும்?" என்றாள்.

"எதுவாயிருக்கக்கூடும்?" என்று அன்பானந்தர், மனோன்மணி யின் வினவையே தாமும் வினவி, "ஒரு மனிதன்————வயதான —ஒரு கிழ மனிதன்—ஒரு யௌவன ஸ்திரீயிடம் உரைக்கக்கூடிய குறும்பான—அகம்பாவமான—விஷயங்களையெல்லாம் சிந்தித்துப்பார். உதாரணமாக—உதாரணமாகச் சொல்கிறேன், ஞாபகமிருக்கட்டும்— —நான் 'என்னை நீ விவாகம் செய்துக்கொள்ளுகிறாயா?' என்று கேட் பதாக வைத்துக்கோள்" என்றார்.

உடனே, ஒரு புன்னகை,—ஆனந்தமிகுதியால் உள்ளடக்க முடி யாமல் அப்பொழுது அலர்ந்த செந்தாமரைபோல், அவள் முகத்தை இன்பமயமாய் மலர்த்தி வெளிப்பட்ட ஒரு புன்னகை—கொண்டு, 'அப்படியே செய்யுங்கள்' என்று நான் மனமாறக்கூறி, உங்கள் விருப் பத்துக்கு மகிழ்ச்சியோடு உடன்படுவேன்" என்றாள் அப்பெண்மணி.

இதைக்கேட்டவுடனே அன்பானந்தர் பொருக்கென்று தம் இருக்கை விட்டெழுந்து, கம்பீரமாய் நிமிர்ந்து நின்று மனோன்மணி யின் முகத்தை நோக்கி, "நீ உடன்படுவாய்! நீ என்னை விவாகம் செய்துகொள்ள உண்மையாய் உடன்படுவாய்?" என்று கேட்டார்.

உடனே அவளும் அவரைப்போலவே எழுந்து கம்பீரமாய்த் தன் யௌவனப்பருவத்தின் அழகெல்லாம் மிகுந்துகாட்ட, மார்பகம் விம்ம, கண்களிரண்டும் ஆனந்த ஒளிவீச, செவ்வியமுகத்தில் சுந்தரப்புன் னகை தவழ, இன்பவடிவாய் உடலுயர நிமிர்ந்து நின்று அவரை நோக்கி, "மாமா, ஆம்; என் மனமார மகிழ்ச்சியோடு உடன்படுவேன்.

தங்களை விவாகம் செய்துகொள்வதில் எனக்குள்ள மகிழ்ச்சி, இவ்வுல கில் வேறு எவனையாயினும் மணந்துகொள்ள நேரிட்டால், எனக்கு இராது'' என்றாள்.

சுமார் ஒரு நிமிஷகாலம் இருவரும் மௌனமாய் நின்றார்கள். பிறகு அன்பானந்தர் அவளை நோக்கி "ஏன்?'' என்றுகேட்டார்.

ஒரே பதத்தாலாகிய இந்தச் சிறு கேள்வி மனோன்மணிக்குப் பெரியதொரு மனக்கலக்கத்தை உண்டுபண்ணிவிட்டது. இவ்வித மான வினா ஒன்றை அவள் எதிர்பார்க்கவில்லை. ஆதலால், அதற்கு எவ்வாறு விடைகூறுவதென்று அவளுக்கு எளிதில் விளங்கவில்லை. மேலும் அவர் பார்வை தன்மீது பதிந்திருந்ததால், அவள் அவரை நோக்குவதைவிட்டு முகத்தை வேறொரு புறமாகத் திருப்பிக்கொண் டாள். ஏன்? வெட்கத்தினாலா? இல்லை; வெட்கம் என்ற உணர்ச்சி அவளுக்கு இல்லை. வேறென்னெனின், அவர் கேள்வியால் சிறிது வருத்தங்கொண்டே அவள் ஒருபுறமாய்த் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். இச்சமயத்தில், அவர் நடந்துகொள்ளவேண்டிய முறை மைப்படிப் பார்த்தால், தன்னை வாரி அணைத்தெடுத்துக் கொண்டு 'என்கண்ணே, ஆருயிரே, மாற்றறியாப் பொன்னே, மணியே, எங் குந் தித்திக்கும் இளங்கரும்பே, தெவிட்டாத செந்தேனே! இவ்வளவு இளமையும் இவ்வளவு அழகும் உடைய நீ என்னைப் போல் வயது முதிர்ந்த ஒரு கிழவனை உண்மையில் காதலிக்க முடியுமா—காதலிக்கின்றாயா?' என்று கெஞ்சிக் கொஞ்சி வார்த்தை யாடவேண்டுமென்று அவள் கருதினாள். அப்படி அவர் வார்த்தை யாடியிருப்பாரானால், மனோன்மணி அவர் வார்த்தைகளுக் கிணங்க, 'என் அன்பிற்குரிய கண்ணாளா! என் மனங்கவர்ந்த மணவாளா! வயதைப்பற்றி ஏன் பேசுகிறீர்கள்? அன்பின் மிகுதியால் என் உள் ளத்தில், தாங்கள் என்றும் யௌவனராகவே இருப்பீர்கள். தங்கள் வயோதிகம் என் ஆசைக்கடலில் மறைந்துவிடும்' என்று இன்னோ ரன்ன வார்த்தைகளை உண்மைபோற் கூறியிருப்பாள்.

ஆனால், அவர் நிற்பதுபோல, வார்த்த செப்புச்சிலை யென்ன, அசையாது வளையாது, கண்களிரண்டையும் தவிர மற்ற உறுப்புகளி லெல்லாம் உயிரென்பது இல்லாததுபோல இயக்கமற்று நின்று கொண்டு 'ஏன்' தன்னை விவாகம் செய்துகொள்வதில் உள்ள மகிழ்ச்சி, இவ்வுலகில் வேறு எவனையாயினும் மணந்துகொள்ள நேரிட்டால் அவளுக்கு இராது என்று கேட்பது மூடத்தனமாகவும், நாகரீகக் குறைவாகவும் அவளுக்குத் தோற்றியது. இந்தக் கஷ்டமான நிலை யினின்று எவ்வாறு தப்புவது? அவர் கேள்விக்கு என்ன விடை கூறு வதென்று யோசித்துப்பார்த்தாள். ஒன்றும் அவளுக்குத் தோற்ற வில்லை. அவள் புன்னகையும் முகமலர்ச்சியும் மாறின. அவர் செய்த பரீக்ஷையில் தான் தவறிவிட்டதாகக் கருதினாள். பின்னால் ஏற்படும் தோல்விக்கு முன் குறிபோல அவள் மனம் குழப்பமுற்றது. கிடைக்காத அமிர்தம் கிடைத்தும், அதைக் குடிக்க வாயருகே கொண்டுபோம்போது பாத்திரம் கைநழுவிக் கீழ்விழுந்து சிதைந்து விடும்போலிருக்கிறதே! அதைக் கைநழுவாது பிடித்து உள்ளிருக் கும் அமுதத்தைப் பருகுவதெப்படி என்று அவள் சிந்தித்தாள். தன் வலையிலகப்பட்ட பிரமாண்டமான பொன்மீனைக் கரைக்கிழுக்க என்ன யுக்திசெய்யலாமென்று யோசித்தாள். ஒன்றும் புலப்பட வில்லை. அப்பொழுது அவளுக்குண்டான மன எரிச்சலும் கோப மும் வேறெப்பொழுதும் அவளுக்கு உண்டானதில்லை. அவள் இந்நிலையிலிருக்கும்போது, அன்பானந்தர் தம் மௌனத்தை நீக்கி மீட்டும் இதே கேள்வியை அவளை நோக்கிக் கேட்டார்.

"என்? என் என்னை விவாகம் செய்துகொள்வதில் உனக்கு அவ்வளவு பிரியம்? காதலினாலல்ல என்பது நிச்சயம். உனக்குக் காதல் என்பதில் நம்பிக்கையில்லையென்று நீயே சொல்லியிருக்கி றாய். ஒருகால் உனக்குக் காதல் என்பதில் நம்பிக்கையிருந்தபோதி லும், உன்னுடைய வயதில் என் வயதுள்ள ஒருவனை நீ காதலிக்க மாட்டாய். அப்படிக் காதலிப்பது இயற்கையுமல்ல, முடியவும் முடி யாது. உனக்குப் பாட்டனாய் இருக்கக்கூடிய அவ்வளவு வயது எனக்காய்விட்டது. மனோன்மணி, நன்றாய் இன்னொருமுறை

யோசித்துச் சொல். உனது சிறுமைப் பருவத்தினுல் அவசரப்பட்டு யோசனையில்லாமல் வாய்க்குவந்ததைச் சொல்லிவிட்டாய்போலிருக்கிறது. அல்லது, என்மீதுள்ள பக்ஷத்தினுல் எனக்குச் சந்தோஷந் தரத்தக்கவிதமாய்க் கூறியிருக்கலாம். ஆனுல், அதி முக்கியமான இவ்விஷயத்தில் என் மனோவிருப்பத்தையும், நான் சந்தோஷப் படும் வகையையும் கருதாதே. என்னைப்பற்றிய நினைப்பே வேண்டாம். உன் நிலைமையைமட்டும் கருதிக்கொள். உன் உண்மையான மனோவிருப்பம்—உன் சுபாவம்—உன் பிற்கால வாழ்க்கை—உன் இன்பஜீவியம், இவைகளைப்பற்றி யோசி. நான் வாழ்க்கையை முடித்துவிட்டவன்; நீ வாழ்க்கையை ஆரம்பிக்கிறவள். நான் வயோதிகன்; நீ சிறுமி. அனுபவிக்கவேண்டிய உலக இன்பங்களையெல்லாம் நீ இனிமேல்தான் அனுபவிக்கவேண்டும். இப்படிப்பட்ட உன்னை, நான் விவாகம் செய்துகொள்ளவிரும்பினுல், உன் மனமார, உன் சுயவிருப்பத்தின்மேல் அதற்கு உடன்படுவாயா?'' என்று கேட்டார்.

இப்பொழுது எப்படிச் செய்வது உசிதமென்று மனோன்மணி தனக்குள் விரைவாய் ஆலோசித்தாள். அன்பானந்தர் பேசுவதே அதிசயமாயிருக்கிறது! அவர் தோற்றமும் செய்கையும் இதற்குமுன் என்றும் அவரிடத்துக் காணப்படாத ஒரு வகையாயிருக்கின்றன! ஆனுல், இந்த மாறுதல் தன்மீது அவர்கொண்டுள்ள காதல் மிகுதியால் எற்பட்டனவாயிருக்கலாம் என்று கருதினுள் மனோன்மணி. அவள் உதடுகள் அகன்றன. எதிரியின் வாளுக்கு அஞ்சாத போர் வீரன்போல அவள் அன்பானந்தரை, தைரியத்துடன் நோக்கி, "உடன்படுவேன்,—மனமார உடன்படுவேன்! அதைவிட என் வாழ்க்கையை இன்பமாய்ச் செய்வது வேறென்றில்லை!'' என்றுள்.

தம் கையில் வைத்திருந்த ஓர் அரிய பொருளை விட்டெறிவது போல, அன்பானந்தர் தம் வலக்கரத்தை வீசி, "நான் கண்டு மகிழ்ந்து பருகி, விடாய்தீரக் கருதிய தெண்ணீர் கானல்நீராய்விட்டது. என் செய்வது! நான் கொடுத்துவைத்தது அவ்வளவுதான்!'' என்றுர்.

மனோன்மணி ஒன்றுந் தோன்றாதவளாய் அவரை உறுத்துப் பார்த்தாள். அவர் உள்ளக் கருத்தென்ன? இப்பொழுதுகூட என் என்னைக் 'கண்ணே, பொன்னே' என்று ஆசைவார்த்தைகளைப் பொழிந்து கட்டியணைத்துக் களிக்காமலிருக்கிறார்? என்று தனக்குள் எண்ணி மயங்கினாள்.

அன்பானந்தர் மனோன்மணியைப் பார்ப்பதுவிட்டுத் தரையை நோக்கித் தமக்குள் தாமே பேசிக்கொள்வதைப்போல, "தெரியாமலா, 'மாதரை நம்பொணாது மெய், நம்பொணாது மெய், நம்பொணாது மெய்' என்று ஒரு முறைக்கு மூன்று முறை சொல்லப்பட்டிருக்கிறது! ஆ, நவீன நாகரீகத்தைப்பற்றி நான் அறிந்தது இவ்வளவுதானா! எனக்கு மிகுந்த உலகானுபவம் இருந்தும், ஸ்திரீகளின் உயர்ந்த ஒழுக்கத்தில் ஒரு சிறிது நம்பிக்கை வைத்திருந்ததுகூட எவ்வளவு மூடத்தனம்" என்றார்.

இதைக் கேட்டுக்கொண்டிருந்த அம்மடமங்கை, ஆத்திரம் பொங்க, அவரை இமையாது நோக்கி "மாமா!" என்றாள்.

உடனே அன்பானந்தர் அவள் புறமாய் முகத்தைத் திருப்பி, "மனோன்மணி, தயவுசெய்து என்னை மன்னி. மனதில் தோன்றுவதை ஒளியாமற் கூறிவிடுவது எனக்கு வழக்கமாய்ப் போய்விட்டது. இவ்வளவு வயது முதிர்ந்த கிழவனான பிறகு, அந்தப் பழக்கத்தை மாற்றுவதென்றால் முடியாது. என் சொற்களால் நான் உன்னை வருத்திவிட்டாலும், உன் வருத்தத்தை மாற்றி மன்னிப்புக் கேட்டுக்கொள்வதெப்படி யென்று எனக்குத் தெரியவில்லை. மனோன்மணி! பண ஆசைக்கும், பதவியின் சீர்கேட்டிற்கும் அப்பாற்பட்டவள் நீ என்று கருதியிருந்தேன்——" என்று சொல்லி வரும்போது மனோன்மணி அவரை இடைமறித்து,

"பண ஆசையா?——பதவியின் சீர்கேடா?" என்று வாய்குழறக் கேட்டாள். அவளுக்கிருந்த மனக்குழப்பத்தில் அவள் தன் கையில் வைத்திருந்த ஒரு ரோஜாமலரைக் கசக்கிக் கீழே போட்டுவிட்டாள்.

அவன் முகத்தில் வியர்வை அரும்பியது. மார்பு 'படக் படக்' கென்று அடித்துக்கொண்டது.

அன்பானந்தர், அவள் கீழ்விழவிட்ட ரோஜாமலரைக் குனிந்து எடுத்துத் தம் கையில் வைத்துக்கொண்டு, "ஆ, எவ்வளவு அழகான புஷ்பத்தை இப்படிக் கசக்கிவிட்டாயே! மனோன்மணி! சற்று அழுத்தினாலும் வாடிப் பொலிவிழக்கும் இந்த ரோஜாமலர்போல, கேட்கத்தகாத ஒரு வார்த்தையைக் கேட்டாலும் உள்ளம் வாடும் அவ்வளவு மென்மையுடையவர் பெண்பாலர் என்று சொல்வதுண்டு. அதனால்தான் வேடிக்கையாகச் சொல்லியபோதிலும், உன்னைப்போன்ற சிறுமிகளுக்கு அருவருப்பைத் தரக்கூடிய ஒரு விஷயத்தை உன்னைக் கேட்பதற்கு நான் அஞ்சினேன். ஆனால், நீ அவ்விஷயத்தில் அருவருப்புக் கொள்வதுபோக ஆனந்தங் கொள்கிறாய்! அவ்வளவு தூரம் உன் மனத்தின் மென்மை கெட்டதற்குக் காரணம் பணஆசையும், பதவியின் சீர்கேடுமே என்று நான் கூறியது உனக்குக் கோபத்தை உண்டாக்குகிறது. ஆனால் நான் சொல்லியது உண்மையே என்பதை உன் மனச்சாட்சி அறியும். பணத்துக்கும் பதவிக்கும் அல்லாவிட்டால் வேறு எதற்காக நீ என்னை விவாகம் செய்து கொள்ள இஷ்டப்படுகிறாய்? அவைகளைத் தவிர உனக்களிப்பதற்கு வேறு என்ன இருக்கிறது? ஒரு புருஷன் ஒரு மனைவிக்குக் கொடுக்கக் கடமைப்பட்ட காதலுணர்ச்சியும் இன்பமும் என்னால் அளிக்கமுடியாது. ஏனெனில், அதற்குரிய பருவத்தை நான் கடந்து விட்டேன். நான் வெளிப்படையாய் இவற்றையெல்லாம் கூறுவதுபற்றி வருந்தாதே. நான் மரியாதை தெரிந்தவனல்லன்—பிறர் வருந்தப் பேசாத நாகரீக வழக்கமும் எனக்கில்லை. பொய்புரைகள் கூறுவதற்கும் மிகவும் கிழவனாய்விட்டேன். பொய் சொல்லுதல் வாலிபத்திலும் பயன்தரக் கூடியதல்ல—வயதானபிறகோ பொய் சொல்வது கால விரயமும், சக்தி விரயமுமாகும். அவ்வாறு எனக்குள்ள சொற்பகாலத்தையும் அற்பசக்தியையும் விரயமாக்க எனக்கு மனமில்லை. இந்தச் சம்பாஷணையை இன்னும் நீட்டிக்கவேண்டுவதில்லை. மனோன்மணி! உன்மேல் அளவு கடந்த நம்பிக்கை வைத்தது என்குற்றமே யொழிய உன்குற்றமல்ல. உன்னை நான் பொற்பீடத்தில் வைத்தேன். நீ

உன் மனோவிருப்பப்படி அதைவிட்டிறங்கிக் கற்றரையில் வந்துவிட்டாய். உன்னைப் பரீக்ஷித்தேன்; நீ தவறிவிட்டாய். உன்னை நான் கேட்ட கேள்விக்கு, நீ உனக்கு இயல்பாக இருக்கவேண்டிய பெண்மைத் தன்மையோடும், உறுதியோடும் அந்தக் கருத்து பொருத்தமற்றதென்று கூறி, என் மனத்தைவிட்டே அக்கருத்தை அகற்ற முயன்றிருப்பாயானால்—'' என்று கூறி, சற்று நின்றார்.

" இருப்பேனானால்—என்ன?'' என்றாள் மனோன்மணி.

" நீயே என் ஆஸ்திக்கு வார்சாவாய்'' என்றார் அன்பானந்தர்.

---

## V

### நாடக வியல்பும், நங்கையின் வாட்டமும்.

அன்பானந்தர், மனோன்மணி தம்மை விவாகம் செய்துகொள்ள மறுத்திருப்பாளாயின், அவளையே தமக்கு வார்சாக நியமித்திருப்பார் என்பதில் ஐயமில்லை. தம்முடைய உண்மைக் கருத்தையே அவர் அம்மங்கையிடம் கூறினார். ஆனால் அப்பெண் அதைக் கேட்டதும், மிகுந்த கோபத்துடன் அன்பானந்தரை ஒரு முறை உறுத்து நோக்கி விட்டு அவ்வறையைவிட்டு வெளியேறிச் சென்று விட்டாள். அன்பானந்தர் தம்மை மறந்து சிறிது நேரம் நின்றவிடத்திலேயே அசையாமல் நின்றார். பிறகு, உடலும் மனமும் மிகவும் களைத்துப் போயிருந்த படியால், சற்றுமுன் தாம் உட்கார்ந்து மனோன்மணியுடன் உரையாடியிருந்த சோபாவின்மீது படுத்தார். கொஞ்சநேரத்திற்கெல்லாம் உறக்கம் வந்தது. அயர்ந்து தூங்கிவிட்டார்.

அன்றிரவே விருந்தினர் யாவரும் போய்விட்டனர். மனோன்மணியும் அவள் தாயுடன் தன் வீட்டுக்குப்போய்விட்டாள்.

மறுநாள் பொழுது விடிந்தது. அயர்வுற்று நித்திரைபோன அன்பானந்தரை மெல்லத் தட்டித் துயிலெழுப்ப வந்தவன்போல், சூரியன் தன் இளங்கிரணங்களைச் சிறிது சிறிதாக அவர் படுத்திருந்த

அறையின் ஜன்னல் வழியாக, உட்புக விடுத்தான். அக்கிரணங்களின் இன்பப் பரிசம் பட்டவுடனே அப்பெரியார் நித்திரை நீங்கி எழுந்து முகத்தைத் துடைத்துக் கொண்டு ஜன்னலண்டை சென்று வெளிப் புறத்தை நோக்கிக்கொண்டு நின்றார். சூரிய ஒளியில் அவர் முகம் ஞானதேஜசுடன் பிரகாசித்தது.

அவர் சுமார் ஐந்து நிமிஷ நேரம் ஜன்னலண்டை நின்றுவிட்டுப் பிறகு அறையைவிட்டு வெளியேறி, காலைக்கடன்களை முடித்துக் கொண்டு சிற்றுண்டி அருந்தியபின் ஒரு சாய்மான நாற்காலியில் படுத்துக்கொண்டார். வயது அறுபதாகியும், ஒரு வேலையும் செய்யாமற் காலங்கழிக்கக் கூடிய திரண்ட செல்வமிருந்தும், சோம்பலுக்கிடங் கொடாமல், திடகாத்திர தேகியான முப்பது வயது ஆண்மகனைப் போல எந்நேரமும் சுறு சுறுப்பாயிருக்கும் அவர், அன்றையதினம் ஒரு வேலையிலும் மனஞ் செல்லப் பெறுதவராய், பல பல சிந்தனைகளால் மனங்குழம்பிப் படுத்திருந்தார். யார் என்ன நிலையில் இருந்த போதிலும், தான் தன் தொழிலில் ஒரு சிறிதும் வழுவாத சூரியன், பொழுது ஏற ஏறத் தானும் மெல்ல மெல்ல மேலேறி, வானத்தின் உச்சிக்கு வந்து விட்டான். சற்று நேரத்திற்குப் பின், அன்பானந்தர் வீட்டு வேலைக்காரன் ஒருவன் அவரிடம் வந்து மிகவும் பணிவுடன், "ஸ்நானத்திற்கு ஜலம் வைத்திருக்கிறது. போஜனம் தயாராகி விட்டது" என்று தெரிவித்தான். ஒரு வேலையிலும் மனஞ் செல்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த அவருக்கு, ஸ்நானம் செய்து சாப்பிடுவதாகிய ஒரு கட்டாயவேலையை, வேலைக்காரன் ஞாபகமூட்டியது சிறிது சந்தோஷத்தைக் கொடுத்தது. அவர் உடனே எழுந்து போய் ஸ்நானம் செய்து போஜனம் கொண்டார். அதன் பிறகு, குறைப் பொழுதும் எப்படிப் போகப் போகிறது என்ற கவலையுடன் அவர் முன் படுத்திருந்த சாய்மான நாற்காலியிலேயே படுத்துக் கொண்டார். ஒரு மணிபோவது அவருக்கு ஒரு யுகமாயிருந்தது. மிகவும் வருத்தத்துடன் சுமார் இரண்டு மணிநேரங்களைக் கடத்தினர். எப்பொழுது மணி நாலாகுமென்றிருந்த அவர் ஆவல்தீர அவர் வீட்டுக்கூடத்தில் வைத்திருந்த கடியாரம் ஒன்று, நான்கு முறை 'கிணிங்' 'கிணிங்' என்று அடித்தது.

உடனே, அன்பானந்தர் தமது வேலைக்காரனைக் கூப்பிட்டு "மோட்டார் மேனை' (Motor-man) வண்டி தயாரிக்கச் சொல்" என்று கூறித் தாம் உடுப்பறைக்குச் (Dressing-room) சென்று கடற்கரை உலாவிற்குரிய உடை உடுத்தி வெளிவந்தார். அதற்குள் வீட்டு வாயிலில் அவருடைய மோட்டார் வண்டி புறப்படுவதற்குச் சித்தமாக நின்றது. அவர் அதில் வந்து ஏறி ஆசனத்தில் அமர்ந்த பின், சாரதியை நோக்கி; "வக்கீல் சிவஞானத்தின் வீட்டுக்கு விடு" என்றார். அடுத்த ஐந்தாவது நிமிஷம் வண்டி குறித்த விடத்தில் வந்து நின்றது.

ஆ ! ஸைன்ஸ் (Science) என்னும் அறிவு நூற் பயிற்சியால், ஐரோப்பியரும் அமெரிக்கரும் கண்டுபிடித்திருக்கும், அற்புத இயந்திரங்களின் ஆற்றலையும், அவ்வறிவின் துணையால் அவர்கள் அடைந்திருக்கும் மேன்மையையும் என்னென்போம்! அன்பானந்தர் வீட்டிலிருந்து சிவஞானத்தின் வீட்டுக்கு ஒருவன் நடந்துசெல்வதாயிருந்தால், குறைந்தது அரைமணி நேரம் செல்லும். அவ்வளவு தூரத்தை ஐந்து நிமிஷத்தில் கடக்கவல்ல இம் மோட்டார் வண்டி ஒன்றின் தன்மையையும், உபயோகத்தையும் மட்டும் சற்றுக் கவனித்தால், அது மனதிற்கு எவ்வளவு பிரமையையும், ஆச்சரியத்தையும், இன்பத்தையும் உண்டுபண்ணுகிறது ! இது நிற்க.

அன்பானந்தர், வண்டியைவிட்டு இறங்கி சிவஞானத்தின் வீட்டுக்குள் நுழைந்தார் ; வீட்டு வாயிலில் நின்று கொண்டிருந்த ஒரு வேலைக்காரன் பெரியவரைக் காணவும், அவரை நன்கறிந்தவனாதலால், மிகுந்த வணக்கத்துடன் எதிர்கொண்டு, "எஜமான் வீட்டுக்குள் இருக்கிறார்கள். தாங்கள் வந்திருப்பதாகத் தெரிவிக்கட்டுமா ?" என்றான்.

" ஆம், தெரிவி" என்றார் அன்பானந்தர்.

உடனே வேலைக்காரன் வீட்டுக்குள் சென்றான். அன்பானந்தர் தாழ்வாரத்திலேயே நின்றுகொண்டிருந்தார். ஒரு நிமிஷத்திற் கெல்லாம், சிவஞானம் அன்பானந்தரை எதிர்கொண்டு வந்து, கைகுலுக்கி "வாருங்கள், வாருங்கள் ! ஏது திடீரென்று புறப்பட்டது. இவ்வளவு சீக்கிரத்தில் தாங்கள் மாலையுலாவுக்குப் புறப்படுகிற வழக்கமில்லையே!"

என்று கூறி, அவரை அழைத்துக் கொண்டு உட்சென்றார். பிறகு 'காட்சிக் கூட'த்தில் (Visiting-room) இருவரும் எதிர்முகமாக இரு நாற்காலிகளில் உட்கார்ந்தார்கள். பிறகு சிவஞானம் அன்பானந்தரை நோக்கி, "நேற்று, மனோன்மணியின் பதினாறுவது ஆண்டு நிறைவு வெகு விமரிசையாயிருந்தது" என்றார்.

அன்பானந்தர்—"சந்தோஷம். நேற்றிரவு மனோன்மணி நாடகம் பார்த்தாயிற்று. இன்றிரவு 'ஞானசௌந்தரி' நாடகம் பார்ப்போம் வருகிறீர்களா?"

சிவஞானம்—"மனோன்மணி நாடகமா?"

அன்பானந்தர்—"இல்லை, மனோன்மணிக்கு, நாடகத்தில் அரசி வேஷம் போடுவது போல, வேஷம் போட்டுப் பார்த்தோம்; என்று கூறவந்தேன்."

சிவஞானம்—"வேஷமா? 'அலங்காரம் செய்து பார்த்தோம்' என்று சொல்லுங்கள்."

அன்பானந்தர்—"எல்லாம் ஒன்றுதான். இப்பொழுது தான் எல்லாம் வேஷமாய்ப் போய்விட்டதே! பிரத்தியட்சமாக நம்மைப் பார்த்துக் கொள்கிறது தானே. இன்று பொழுது விடிந்து பொழுது போவதற்குள், நான் மூன்று உடுப்புகள் மாற்றிவிட்டேன். நாளைப் பொழுது விடிவதற்குள், இன்னும் மூன்றுடுப்புகள் உடுத்திக் களைந்து விடுவேன். காலை உடுப்பு, மாலை உடுப்பு, படுக்கை உடுப்பு, ஸ்நான உடுப்பு, உத்தியோக உடுப்பு இவ்விதமாக எண்ணத் தொலையாத உடுப்புகளின் விசித்திரப்பெயர்களை, நம் பாட்டனார் காலத்தில் எவரேனும் கேட்டாவது இருப்பார்களோ? 'உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்' என்று கூறுவதெல்லாம்போய் விட்டதே. அதுகிடக்கட்டும்; இன்றிரவு டவுன் ஹாலில் (Town Hall) 'சத்சங்கவிலாஸ' சபையார்' ஞானசவுந்தரி என்ற நாடகத்தை நடத்தப்போகிறார்களாம்."

சிவஞானம்—"ஏது உங்களுடைய மனம் இன்று நாடகத்தின் மேல் நாடியது?"

அன்பானந்தர்—"மனம் நாடுவதென்ன, பொழுது போக்காக இருக்கட்டுமே என்பதுதான். இன்றைக்கு எனக்கு ஏதோ ஒருவகை யாக இருக்கிறது. ஆதலால், மனதைச் சற்று வேடிக்கையான விஷ யங்களிற் செலுத்தியிருக்கலாமென்று கருதுகிறேன்."

சிவஞானம்—"ஓ! அதற்கென்ன, அப்படியே செய்யலாம். ஆனால் இந்த நாடகங்கள் எனக்கு அவ்வளவாய்ப் பிடிக்கிறதில்லை."

அன்பானந்தர்—"அது உண்மைதான், இவர்கள் நடத்தும் நாட கம் அறிவுடைய எவருக்குத்தான் பிடிக்கும். நம்மவர்களுக்கு நாடகத் தின் இயல்பே தெரியாதென்று துணிந்து சொல்லலாம்."

சிவஞானம்—"நாடகத்தின் இயல்பு தெரியாதா? நாடகத்துக்கு ஓர் இயல்பு இருக்கிறதென்று கூடத் தெரியாதே!"

அன்பானந்தர்—"நம்முடையதேசம் ஒரு விசித்திரமான தேசம். நம்மவர்களும் மனிதவர்க்கத்தில் ஒரு விசித்திரமான வகுப்பைச் சார்ந் தவர்கள். 'மேனாட்டு மக்கள் கண்டுபிடித்துள்ள இயந்திரங்களின் அற்புதத்தைப் பாருங்கள்' என்றால், 'அந்த மிலேச்சர்கள் என்ன பிர் மாதமாய்க் கண்டு பிடித்துவிட்டார்கள்! நம் முன்னோர்கள் கண்டுபிடித் துக் கையாடி வந்த ஆகாயவிமானமென்ன, மந்திரப் புரவியென்ன, சூத்திரரதமென்ன, அஸ்திரங்களின் வகைகளென்ன, ஆற்றலென்ன, இவற்றைவிடவா?' என்கிறார்கள். 'ஆங்கிலத்தில் உள்ள நாடகநூல் களைப்பாருங்கள், நாடகவிதிகளைப்பாருங்கள், நாடக நடிப்பைப்பாருங் கள்' என்றால், 'ஓ! நம் நாட்டில் பண்டைக்காலத்தில் எத்தனையோ நாடகங்களும், எவ்வளவோ அருமையான நாடக இலக்கணங்களும் இருந்தன. அவையெல்லாம் இப்பொழுது இறந்தொழிந்தன. நம் முடைய நாடக இலக்கணநூல்களுக்குமுன் ஆங்கில நாடக இலக்கண நூல்கள் தலையெடுக்குமா?' என்கிறார்கள். இவர்களை எப்படித் திருத்து வது?"

சிவஞானம்—"திருத்துவதா? நாடகம் என்பதில் நம்மவர்களில் அறிவுடையவர்களுக்குக் கூட மதிப்பில்லையே. முதலாவது, ஒன்றில் மதிப்பேற்பட்டாலல்லவோ அதைக் கவனிக்கக்கூடும்?"

அன்பானந்தர்—"தாங்கள் சொல்வது சரிதான். மதிப்பு எப்படி ஏற்படக்கூடும்? நாடகம் என்றால் என்ன? ஒரு பெரிய உருவத்தின் எதிரே ஒரு சிறு கண்ணாடியைக் காட்டினால், அச்சிறு கண்ணாடியில் அப்பெரிய உருவம் சிறிதாக—ஆனால் உருவத்தின் இயல்பில் சிறிதும் வித்தியாசமின்றி—பிரதிபலிப்பது போல, விரிந்த உலகியற்கையைச் சுருக்கி—இயற்கை சிறிதும் வேறுபடாது—காட்டுவதே நாடகம். அதனால் தான் நாடகமேடையை 'சிற்றுலகம்' (The world in miniature) என்று ஆங்கிலர் கூறுகின்றனர்."

சிவஞானம்—"உண்மைதான். நாடகம் அவ்வாறு இயற்கைவிரோதமின்றி நடிக்கப்பட்டால், அறிஞர்களுக்கு நாடகத்திலும் நாடகம் நடிப்போரிடத்திலும் மதிப்பேற்படும்."

அன்பானந்தர்—"நாடகம் நடிப்போரிடத்தில் நம்ஜனங்களுக்கு மதிப்பேற்படுவது இந்த ஜன்மத்திலில்லை. நாடகக்காரர் என்றால் கூத்தாடி என்று ஜனங்கள் கருதி, அவர்களை எவ்வளவு தாழ்வாக மதிக்கிறார்கள். அதிலும், பெண்பாலார் நடிக்க முன் வந்து விட்டாலோ, அவர்களைவேசிகளினும் தாழ்வாக மதித்து ஒதுக்கி விடுகிறார்கள். ஆனால் இங்கிலாந்து தேசத்தில் இவ்வாறில்லையே! அங்கே, ஒரு ஸ்திரீ ஆக்ட்ரஸாக (Actress—நாடகம் நடிப்பவள்) வந்து அதில் பேர்வாங்கிவிட்டால், அவளுக்கு ! என்ன மதிப்பு, என்ன கௌரவம்! அரசர்களெல்லாம் அவள் பேட்டியை விரும்புவதும், அவளைத் தம் வீட்டுக்கு விருந்தாக அழைப்பதும், பெரிய கோடீஸ்வரர்கள் அவளை விவாகம் செய்துகொள்ள விழைந்து முன்வருவதும் சகஜமாயிருக்கிறது."

சிவஞானம்—"நீங்கள் சொல்வதெல்லாம் சரிதான். ஆனால் இங்கிலிஷ் நாடகக் காரர்கள் நிலையெங்கே, நம் நாட்டு நாடகக்காரர்களின் நிலை எங்கே? எணி வைத்துப் பார்த்தாலும் எட்டாதே. அந்த நாடகக்காரர்களும் நாடகக்காரிகளும், தங்கள் ஒழுக்கத்தையும் கௌரவத்தையும் காப்பாற்றுவதுபோல இவர்கள் காப்பாற்றுவார்களா? அவர்களுக்குள்ள கல்வியுணர்ச்சி இவர்களுக்குண்டா?"

அன்பானந்தர்—"ஆனால், உங்களைப்போன்ற வக்கீல்கள் முதலிய உயர்ந்த உத்தியோகஸ்தர்கள்,—கல்வியில் தேர்ந்தவர்கள்,—கூடி நடத்

தும் நாடகசபைகள் பலதோன்றி வருவதால், நாடகவியல்பு சீர்திருந்தி வருமென்று நினைக்கிறேன். பொது ஜனங்களுக்கு நாடகத்தில் மதிப்பும், நாடகம் நடிப்போர்க்குக் கௌரவமும் ஏற்படக்கூடும். ஏனென்ருல், இத்தகைய சபையரர்கள் பிழைப்புக்காக நாடகம் நடத்துவோரல்லராதலாலும், கல்வியிற்றேர்ந்து நாடகவியல்பை நன்குணர்ந்தவர்களாதலாலும், ஜனங்கள் விருப்பத்தைப் பின்பற்றிச் சென்று நாடகவியல்பைத் தாழ்த்திவிடாமல், தங்கள் உயர் வழியில் ஜனங்கள் விருப்பத்தைத் திருப்பி, நாடகநிலையையும் ஜனங்கள் மனோநிலையையும் ஒருங்கே உயர்த்துவார்களல்லவா?"

சிவஞானம்—"ஆம். தாங்கள் சொல்வது வாஸ்தவந்தான். நான் மெம்பராயுள்ள (Member) * 'சுகுண விலாச சபை' ஒன்று மட்டும் தாங்கள் சொல்கிறபடி இருக்கிறது. அதைப் போல் இன்னும் சில சபைகள் நம் தமிழ் நாட்டில் பரவினல், தமிழ் நாடகநிலை மிகவும் சிறப்புற்றுவிடும். அவ்வாறில்லாமல், போலிச் சபைகள் சில தோன்றி, நல்ல சபைக்குள்ள மதிப்பையும் கெடுக்க முயல்கின்றன. கௌரவத்துக்காக நாடகம் நடிப்பவர்களும்; பிழைப்புக்காக நாடகம் நடிப்பவர்களும், சுகுணவிலாச சபையைப் பின்பற்றி நடித்தால் நலமாகும். அவ்வாறு பின்பற்றுவார் அருமையாயிருப்பது நம் தமிழ்நாடு செய்த தவக்குறைவே."

அன்பானந்தர்—"இன்று, நான் பார்க்கப் போகலாமென்று கூறிய சபை?"

சிவஞானம்—"அதுவும் போலிச்சபைகளில் ஒன்றுதான்."

அன்பானந்தர்—"என்ன அவ்வளவு கேவலமாகச் சொல்லிவிட்டீர்களே! இவர்கள் நடிப்பு, மற்றநாடகக்காரர்களின் நடிப்புக்குச் சற்று

---

* சுகுணவிலாச சபைக்கு ஒரு நேத்திரம்போல் விளங்கி, நம்மவர்க்கு உண்மையான நாடகத்தின் தன்மை இனத்தென்று தம் நூல்களாலும், நாடகமேடையில் தாம் செய்யும் நடிப்பாலும் நன்கு காட்டிவரும் ஸ்ரீமான்-ராவ்சாஹிப்-சம்பந்த முதலியார் அவர்களுக்குத் தமிழுலகம் நிரம்பக் கடமைப்பட்டிருக்கிறது என்று ஈண்டுக் கூறுதல் மிகையாகாது.

வது உயர்வாகத்தான் இருக்கும். வேறு எதற்காக இவர்கள் நாடகமாடு வது?"

சிவஞானம்—"எதற்காக? சீட்டாடிப் பொழுதுபோக்குவதை, நாடகமாடிப் பொழுதுபோக்கலாமென்றுதான். நான் சொல்லுவா னேன்? இன்றைக்கு 'ஞானசௌந்தரி' நாடகம் பார்க்கப் போகவேண்டு மென்றீர்களே, அப்படியே போவோம். இந்த ஒரு நாடகத்தைப் பார்த் தாலே போதும். இந்தச் 'சபை'யார் வள்ளல் உங்களுக்கு விளங்கி விடும்."

அன்பானந்தர்—"நீங்கள் இதற்குமுன் இந்த நாடகத்தைப் பார்த்திருக்கிறீர்களா?"

சிவஞானம்—"பார்த்திருக்கிறேன் ஒரு முறை. 'ஞானசௌந் தரி' என்பது ஒரு கிறிஸ்தவக் கதை. அதை நடிக்கும்பொழுது, கிறிஸ்தவர்கள் வழக்க ஒழுக்கங்களை யொட்டியல்லவா நடிக்கவேண் டும்? அதைக் கவனிப்பதேயில்லை. அது போகட்டும். ஓர் அரசன், சிம்மாதனத்தினிலிருந்து அரசு செய்யும் போதும், வேட்டையாடும் போதும், நண்பர்களுடன் சிற்றுண்டியருந்தும்போதும் ஒரே வகை யான உடுப்பா உடுத்திக் கொண்டிருப்பான்? அந்தந்த சந்தர்ப்பத்துக் கேற்ற உடையும், நடைநொடி பாவனைகளும் வேண்டாமா?"

அன்பானந்தர்—"என்ன இது! இவைகளைக் கூட இயற்கை வழுவாமல் நடத்த இவர்களால் முடியவில்லையா?"

சிவஞானம்—"எதைத்தான் அவர்கள் இயற்கைக்கு விரோதமில் லாமல் நடத்துகிறார்கள்! அவர்கள் நடத்துவது நாடகமா? 'கதாகால க்ஷேபத்தில்' ஒருவகை. நாடகத்தில் சங்கீதம் எவ்வளவு தூரம் சம்பந்தப் படக்கூடும் என்று ஒருவரையறைவேண்டாமா? எடுத்ததற்கெல்லாம் பாட்டு என்றால் என்ன செய்வது! நாடகமேடையில் வருவது நடிப் பின் சாமர்த்தியத்தைக் காட்டவா, சங்கீத சாமர்த்தியத்தைக் காட்ட வா?

" அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம் "

என்றபடி மனத்தில் நிகழும் வேறுபாடுகளுக்கேற்ப முகக்குறிகள் நிகழவேண்டும். உதாரணமாக, இராமபிரான் விசுவாமித்திரரோடு மிதிலை நகருள் வரும்போது, கன்னியாமாடத்தில் தோழியருடன் நிற்கும் சீதையைக் காணுகிறார்; சீதையும் அவரைக் காணுகிறாள்; இருவர்நெஞ்சமும் காதலால் ஒன்றுபடுகிறது. இது எவ்வளவு அழகான நிலை? இந்நிலையை இயற்கையாக நடித்துக் காட்டினால், காண்பதற்கு எவ்வளவு இன்பம் பயக்கும்? இராமச்சந்திரன் ஒரு சக்கரவர்த்தியின் பட்டத்துக்குமாரன்; கல்வியறிவு ஒழுக்கங்களில் ஒப்புயர்வற்றவன். சீதையும் அப்படிப்பட்டவள். கதாநாயகன், தனக்கு அஸ்திரவித்தை கற்பித்தவரும் முனி சிரேஷ்டருமாகிய விசுவாமித்திரருடனும் தன் தம்பியுடனும் வருகிறான். கதாநாயகியோ கன்னியாமாடத்தில் தோழியருடன் இருக்கிறாள். இந்நிலையில் ஒருவர்க்கொருவர் தம் காதலை அறிவிப்பதெப்படி? கதாநாயகன் ' ஓ, மை டியர் லேடி' (Oh my dear Lady) என்று இந்துஸ்தான் மெட்டில் நாலைந்து பாட்டுகளும், கதாநாயகி "மாரனே, சுகுமாரனே" என்று தொடங்கி ஐந்தாறு பாட்டுகளும் பாடித் தங்கள் காதலைப் புலப்படுத்துவார்களோ?

"கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்னும் பயனு மில"

என்று திருவள்ளுவர் சொன்னதெல்லாம் பொய்யாகிவிட்டதே! இராகத்தில் ஈடுபட்டுத் தாளத்திற்கேற்றாற்போல் நடிப்போனுக்குத் தலையாடும்போது, அவனிடத்தில் அவன் பூண்ட வேடத்திற்கியைய மெய்ப்பாடுகள் தோன்றுவதெங்கே?"

அன்பானந்தர்—" நீங்கள் சொல்வதைப் பார்த்தால் கல்விமான்கள் கூடி நடத்தும் நாடகத்துக்கும், சாதாரணமாய் வயிற்றுப் பிழைப்புக்காக நாடகம் நடத்துவோர் நாடகத்துக்கும் வித்தியாசமில்லை போலிருக்கிறதே."

சிவஞானம்—"என்ன வித்தியாசம்? கல்விமான்கள் கூடி நடித்தால் 'சபா'; மற்றவர்கள் கூடி நடித்தால் 'கம்பெனி'; இதுதான் வித்தியாசம்."

அன்பானந்தர்—“ஆனால், இவ்வளவு சீர்கேடாய் நடத்தப்படும் நாடகத்தைப் பார்க்க எனக்கு விருப்பமில்லை. வாருங்கள், கடற் கரைக்குப் போய்விட்டுத் திரும்பி விடலாம்.”

சிவஞானம்—“ஏன், ‘ஞானசௌந்தரி’ நாடகம் எப்படியிருக்கிற தென்று ஒரு முறை பார்க்கிறது தானே ?”

அன்பானந்தர்—“வேண்டாம், வேண்டாம்; நீங்கள் சொன்னதே போதும்.”

“ஆனால் சரி, வாருங்கள் போகலாம்” என்று எழுந்தார் வக்கீல் சிவஞானம்.

சற்று நேரத்திற் கெல்லாம் இருவரும் வீட்டைவிட்டு வெளியே வந்து, தெருவிற் காத்திருந்த ‘மோட்டார்’ வண்டியில் ஏறிக்கொண்டு கடற்கரைக்குச் சென்றார்கள்.

உலகத்திலுள்ள அழகிய கடற்கரைகளுள் மூன்றாவதாகச் சிறப் புற்றிலங்கும் சென்னைக் கடற்கரையில், அன்பானந்தரும் சிவஞானமும் சுமார் ஒரு மணிநேரம் போல் உலாவிக்கொண்டிருந்து, பிறகு வண்டி யிலேறி வீட்டுக்குத் திரும்பினர். வக்கீலை அவர் வீட்டண்டை இறக்கிவிட்டு அன்பானந்தர் தம் மாளிகைக்கு வந்து சேர்ந்தார்.

அப்பொழுது மணி ஏழிருக்கும். அன்பானந்தர் தம் மாலையுடுப் பைக் களைந்து விட்டு, வீட்டுள் இருக்கும்பொழுது உடுத்தியிருக்கும் சாதாரண உடையோடு தம் படிப்பறைக்குச் (Studying-room) சென்று ஒரு நாற்காலிமீது களைப்புடன் அமர்ந்தார். அவருக்கு எதிரி லிருந்த மேஜைமீது ஒரு வெள்ளித் தட்டில், “மிஸ்டர், அன்பா னந்தர் அவர்களுக்கு, சென்னை” என்று விலாசமிட்ட கடித மொன்று திறக்கப்படாமல் இருந்தது. அன்பானந்தர், தாம் வெளியே சென்றிருந்தபோது வந்த கடிதம்போலிருக்கிறதென்று கருதி அதை யெடுத்து, உறையைத் திறந்து, உள்ளிருந்த கடிதத்தைப் பிரித்துப் பார்த்தார். உடனே அவர் முகத்தில் சந்தோஷமில்லாத ஒரு சிறுபுன்னகை தோன்றியது. அதற்குக் காரணமான அக்கடி தம் வருமாறு :

"ஐயா,—'மாமா' என்று உம்மைக் கூப்பிட்ட நாவை அறுத்தெறிந்து விடலாமா என்று நினைக்கிறேன்—ஏதோ குருட்டதிர்ஷ்டத்தால் நீர் கோடீஸ்வரராய் விட்டபோதிலும், உம்முடைய மனமும், உம்முடைய செயல்களும் எவ்வளவு அற்பமானவை யென்பதை நேற்றிரவுதான் தெரிந்துகொண்டேன். நீர் இவ்வளவு கேவல புத்தி யுடையவரென்று முன்னமேயே தெரிந்திருந்தால், உம்முடைய வீட்டில் எனது பதினாருவது ஆண்டு நிறைவேற்றத்தைக் கொண்டாடும்படி நான் சம்மதித்திருக்கமாட்டேன்.

பொருள் திரட்டுவதற்காக நீர் எத்தனை மனிதர்களை ஏமாற்றியிருப்பீர்! அந்தப் பழக்க முதிர்ச்சியாலல்லவா நேற்றிரவு என்னை ஏமாற்றத் துணிந்தீர்? என்னை விவாகம் செய்துகொள்ள உமக்கு உண்மையில் விருப்பமிருப்பதாக நான் நினைக்கும்படி செய்தீர். உம்முடைய வார்த்தையை நம்பி, நான் உம்மை விவாகம் செய்துகொள்ள சம்மதித்தபிறகு, உம்முடைய உண்மை விருப்பம் அதுவல்ல என்று நாக்கூசாது மொழிந்தீர்! உம்மை விவாகம் செய்துகொள்ளும்படி ஒரு பெண்ணிடம் நீர் கூறினால்—நானல்ல, வேறு எவளாயிருந்தபோதிலுஞ் சரியே—அவள் அதற்கு உடன்பட ஒருபொழுதும் பின் வாங்காள். உம்மைப்போன்ற ஒரு கோடீஸ்வரரை—அவர் நூறுவயது கிழவராயிருந்தபோதிலும்—விவாகம் செய்துகொள்ள மறுப்பது முழுமூடத்தனமேயாகும். நிறைந்த செல்வம் கிட்டும் போலிருந்தால் அதை ஏற்றுக்கொள்வது தவறல்ல—யோக்கியக் குறைவுமல்ல. ஒருகால், நீர் அதைத் தவறென்றும், யோக்கியக் குறைவென்றும் கருதியிருப்பீரானால், என்னை அப்படிச் செய்யும்படி கூறியிருக்கக்கூடாது.

உம்முடைய வாயாலேயே என்னை விவாகம் செய்துகெள்ள உமக்கு விருப்பமென்று தெரிவித்து, நான் அவ்விருப்பத்திற் கிணங்கிய போது, உமது விருப்ப மது வல்லவென்றும், நான் அதற்கு இணங்கியது தவறென்றும் கூறிய வஞ்சகராகிய உம்முடைய நட்பு இனி எனக்கு வேண்டாம். என்னை இவ்வளவு கொடுமையாய் நடத்திய உமது முகத்தில் விழிப்பதற்கே எனக்கு அருவருப்பாயிருக்கிறது. ஆதலால், என்னுடைய கருத்தை இக்கடிதமூலமாகத் தெரிவிக்கலாயி

னேன். நான் குழந்தையாயிருந்தபோது ஏதோ என்னிடத்தில் மிகவும் வாஞ்சை வைத்திருந்ததாக நீர் சொல்லியதெல்லாம், உரையளவேயொழிய ஒரு நாளும் உண்மையாயிருக்க முடியாது. இக்கடிதமே உமக்கும் எனக்குமுள்ள கடைசி சம்பந்தம்.

இங்ஙனம்,

நம்பிமோசம்போன

மனோன்மணி.

* * * *

அன்பானந்தர் இக்கடிதத்தைப் படித்துமுடித்து மேஜைமீது வைத்துவிட்டுச் சிறிது நேரம் சிந்தித்தார். அவரை அறியாமலே அவருக்குச் சிரிப்பு வந்தது. சுமார் அரைமணிநேரம்போல் சிந்தித்திருந்து, பிறகு ஒரு கடிதத்தை எடுத்துப் பின்வருமாறு எழுதலாயினர்.

"மனோன்மணி, உன்னுடைய கடிதத்தைக் கண்டு களிப்புறுறேன். ஏன் என்றால் உன்னுடைய குணத்தைப்பற்றி எனக்கு இருக்கக்கூடிய குறைச் சந்தேகத்தையும், இப்பொழுது என் எதிரிலிருக்கும் உன்னுடைய கடிதம் அடியோடு ஒழித்துவிட்டது. எந்தப் பெண்ணும், இவ்வயதில் என்னை—என்னுடைய திரண்ட செல்வத்தைக்கருதி—விவாகம் செய்துகொள்ள சம்மதித்திருப்பாள் என்பது உண்மையே. ஆனால், அந்தப் பெண்களுள் உன்னையும் ஒருத்தியாக நான் இதற்கு முன் கருதவில்லை. திரண்ட செல்வம் கிடைப்பதாயிருந்தால் அதை ஏற்றுக்கொள்வது 'தவறல்ல— யோக்கியக்குறைவும் அல்ல.' ஆயினும், அச்செல்வத்தின் பொருட்டு, பதினாறு வயதுள்ள சிறுமி ஒருத்தி, அறுபது வயது நிறைந்த கிழவன் ஒருவனை விவாகம் செய்துகொள்ள உடன்படுவாளானால், அவள், மானம் என்பதை அறவே ஒழித்துப் பொருளுக்காகத் தம் உடலை விற்கும் வேசியருக்குச் சமானமாவாள் என்பதே என்னுடைய அபிப்பிராயம். அத்தகையாள் ஒருத்தி, தன்னை விற்க முற்படுவாளாயின் அவளை, எழுபது வயது கிழவன் வாங்க ஒருப்படுவானாயின், அவனைப் புருஷப்பிறவியென்று நான் கருதவும் மாட்டேன்.

உன்னை விவாகம் செய்துகொள்ள விரும்புவதாக் நானே கூறி விட்டுப் பிறகு ஏமாற்றி விட்டதாகக் கூறுகிறாய். அப்படி நான் உனக் குக் கூறவுமில்லை— ஏமாற்றவுமில்லை. 'நான் உன்னை விவாகம் செய்துகொள்ள விரும்புவதாக வைத்துக்கோள்' என்று தெளிவாக —என் கருத்து அதுவல்லவென்பதைக் குறிப்பாகக்—'கூறினேன். அன்றியும் தொடக்கத்திலேயே உன்னைப் பரீக்ஷித்தேன்; நீ தவறிவிட் டாய். இவ்வளவுதான் நேற்றிரவு நமக்குள் நடந்த சம்பாஷணையின் சாரம். இது நிற்க.

என்னை 'மாமா' என்று எப்படி நீ நாக்கூசாமல் கூப்பிடுகிறாய் என்று நான் பலமுறை கருதியதுண்டு. இப்பொழுதாவது அப்படிக் கூப்பிட உனக்கு நாக்கூசுகிறதென்பதையறிய மிகவும் சந்தோஷமாயி ருக்கிறது. உன்னுடைய குழந்தைப் பருவத்தைச் சுட்டி ஏதோ எழுதி யிருக்கிறாய். நான் கடற்கரையில் கண்டு அன்பு பாராட்டிய அந்தக் குழந்தை இவ்வுலகினின்றும் போய்விட்டது—இப்பொழுது இல்லை; ஆதலால், அதைப்பற்றிப் பேசாதே.

என் முகத்தில் விழிக்க உனக்கு விருப்பமில்லாமற் போனது மிகவும் அனுகூலமே. ஏனெனில், நீ விரும்பினாலும் இனி என் முகத் தில் விழிப்பது கடினம். உன்னுடைய கடிதத்தை உனக்கும் எனக் கும் இருந்த கடைசி சம்பந்தமாக்க விரும்பிய உன் விருப்பத்திற்கு மாறாக, என்னுடைய இக்கடிதத்தைக் கடைசி சம்பந்தமாக்கியது பற்றி என்னை மன்னிப்பாயென்று நம்புகிறேன். உன் அன்னைக்கு என் வந்தனம் தெரிவிக்கவும்."

இங்ஙனம்,

நம்பிமோசம்போன

அன்பானந்தன்.

அன்பானந்தர் இக்கடிதத்தை மடித்து ஓர் உறையிலிட்டு 'ஸ்ரீமதி இராஜரத்தின் தமாரத்தி சௌபாக்கியவதி, மனோன்மணி அம்மாள், சென்னை' என்று விலாசமிட்டு ஒட்டி, அதைத் தம் வேலைக்காரன் ஒருவன் மூலமாக உடனே மனோன்மணிக்கு அனுப்பிவிட்டார்.

அப்பால் அவர் முகம் தெளிவுற்றது. தமது யௌவனப் பருவத்தின் ஆற்றலெல்லாம் திரும்பவும் தம்மிடத்துத் தோற்றுவது போல அவருக்கு ஓர் உணர்ச்சி யுண்டாயிற்று. 'உண்மை யன்பை எவ்விடத்திலும் காண முடியாத ஓர் உலகத்தை, அன்புருவாகிய கடவுள் ஒருநாளும் சிருஷ்டித்திருக்க மாட்டார். அன்பு இருக்க முடியாத இடத்தில் அன்பைத் தேடுவது நம்முடைய குற்றம். நிலையற்ற செல்வத்தை நிலையாகக் கருதி அச்செல்வத்தின் பெருமையே பெருமை, செல்வத்தாலாகாதது ஒன்று மில்லை என்று கருதி, 'பணம்' 'பணம்' என்று பேயாய்ப் பறந்து, அதைத் தேடுவதிலேயே காலத்தையெல்லாஞ் செலவிட்டு, அது கிடைக்காவிட்டால் ஏங்கித் திரிந்தும், கிடைத்தால் செருக்கு, பொறாமை முதலிய இழிகுணங்கள் கொண்டும், குடி, காமம் முதலிய தீய ஒழுக்கங்களின் வசப்பட்டும், 'நாகரீகம்' என்ற திரை மறைவில் உழலும் இச்சென்னையை யொத்த பிரபல பட்டினங்களில் உண்மையன்பைத் தேடினால் அகப்படுமோ? அமைதியான அன்பைக் காணுவதென்றால், அதற்கேற்ற அமைதியுள்ள—நாகரிகபடாடோபமில்லாத—இடங்களில், அமைதியாய்த் தேட வேண்டும். அப்படித்தேடினால் எப்படியும் அவ்வன்பு அகப்படும்' என்று இவ்வாறெல்லாம் அன்பானந்தர் கருதி 'எங்குச் சென்றாயினும், எப்பாடு பட்டாயினும் அவசியம் அன்பென்னும் அவ்வின்னமுதைப் பெற்றுப் பருகி என்று மழியாப் பேரானந்தப் பெருவாழ் வெய்த வேண்டும்' என்று தீர்மானித்து அது முதல் அதிலேயே நாட்டங் கொண்டிருந்தார்.

அன்பானந்தர் கடிதத்தைப் பார்த்த பிறகு மனோன்மணி, தன் மனக்கோட்டை யெல்லாம் வெறுங் கோட்டையாய் விட்டமையை நினைந்து வாட்டங் கொண்டிருந்தாள்.

---

## VI

### "போதியோ பூம்பாவாய்"

இரண்டு நாட்கள் சென்றன. மூன்றாவது நாள் காலை சுமார் ஒன்பது மணிக்கு, சிவஞானம் தம் வீட்டுக் கூடத்தில் பெரியமேஜை ஒன்றின்

எதிரே ஒரு சுற்றுநாற்காலியில் (Revolving Chair) உட்கார்ந்திருந்தார். எதிரேயிருந்த மேஜைமீது சட்ட புஸ்தகங்களும், தஸ்தாவேஜு கட்டுகளும் நிறைந்திருந்தன. அவருக்கு இடப்பாரிசத்தில் குமஸ்தா ஒருவன் நின்று, ஏதோ ஒரு பத்திரத்தை வாசிக்க, வக்கீல் தம் தலையை வலக்கரத்தால் தடவிக்கொண்டு அவன் வாசிப்பதைக் கேட்டிருந்தார்.

'ஷை ஜாதி, ஷை மதம், 'இன்னார்' குமாரன், இன்னாரும், ஷை ஜாதி, ஷை மதம் இன்னாரும், ஷை ஜில்லா ஷை தாலுக்கா ஷை கிராமம் சர்வே நம்பர்————'என்று இவ்வாறு தஸ்தாவேஜுகளில் இயல்பாகவே திரும்பத் திரும்ப எழுதவேண்டிய வழக்கப்படி எழுதப்பட்டிருக்கும் ஒரேவகையான வார்த்தைகளைக் கேட்கும்போதெல்லாம், சிவஞானத்துக்கு மிகவும் கஷ்டமாயிருந்தது. அவர் இரண்டு மூன்றுதரம் கொட்டாவிவிட்டார்; 'குமஸ்தா இந்தத் தஸ்தாவேஜை எப்பொழுது படித்து முடிப்பானோ தெரியவில்லையே' என்று எங்கினார். அவர் மனம் குமஸ்தா வாசிக்கும் விஷயங்களில் பற்றவில்லை. தஸ்தாவேஜோ சீக்கிரத்தில் முடிகிற ஸ்திதியில் இல்லை. என் செய்வார், பாவம்!

கட்சிக்காரரிடத்தில் பணத்தைப் பெற்றுக்கொண்டு, அவர்கள் விவகாரத்தைச் சரியாய் கவனிக்காத வக்கீல்களுள் ஒருவரல்லர், நம் சிவஞானம். மனச்சாட்சிக்கு விரோதமாக அவர் எந்த விவகாரத்தையும் வாதிக்க முன்வரமாட்டார். ஆனால், சற்று வயதாய்விட்டமையால், மூடசொரூபர்களான சில கட்சிக்காரர் செய்கிற தொல்லை அவருக்குப் பொறுக்கமுடிகிறதில்லை. அதிலும், இப்பொழுது அவர் குமஸ்தா பஞ்சாங்கம் படிக்கிறதுபோல் படித்துவரும் விவகாரம் சற்றேனும் சாரமில்லாதது. ஆதலால், அதைக் கேட்பதில் அவருக்குக் கொஞ்சங்கூட ஊக்கஞ் செல்லவில்லை.

நல்லவேளையாக அவர் அலுப்பை நீக்க ஒரு வேலைக்காரன் அவரிடம்வந்து, அன்பானந்தர் வேலைக்காரன் ஒருவன் அவரைப் பார்க்க வந்திருப்பதாகத் தெரிவித்தான்.

சிவஞானம் மிகவும் சந்தோஷத்துடன் "நல்லது மற்றதை நீயே படித்து, முக்கியமான விஷயங்களை மட்டும் ஒரு சிறு கடிதத்தில் குறித்து என்னிடம் கொடு" என்று கூறி குமஸ்தாவை அனுப்பிவிட்டுத் தம்வேலைக்காரனை நோக்கி, "நீ போய், அவனை இங்கே வரச் சொல்" என்றார். "அப்படியே" என்று வேலைக்காரன் போய்விட்டான்.

சற்று நேரத்திற்கெல்லாம், அன்பானந்தர் வேலைக்காரன் சிவஞானத்திடம் வந்து, அவர் விலாசத்தோடு 'தனது பார்வை' என்று உறைமேற் குறிக்கப் பெற்றிருந்த கடிதம் ஒன்றினை, அவர் எதிரே மேஜை மீது வைத்துவிட்டு வணங்கி நின்றான்.

சிவஞானம் கடிதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு புன்சிரிப்போடு வேலைக்காரனை நோக்கி, "என்ன சமாச்சாரம், கோவிந்தா! உன் எஜமானர் சௌக்கியந்தானே?" என்று வினவினர்.

"சௌக்கியந்தான், சுவாமி. நேற்று இராத்திரி, ரயிலேறும் போதெல்லாம் எஜமான் சௌக்கியமாய்த்தான் இருந்தார்கள்" என்றான் கோவிந்தன்.

"ஓ, ஆனால் அவர் நேற்று இராத்திரி வெளியூருக்குப் புறப்பட்டுப் போய் விட்டாரோ?"

"ஆம், சுவாமி."

"அப்படியா !" என்று சிவஞானம் ஆச்சரியத்துடன் கூறிவிட்டு தம் கையிலிருந்த கடிதத்தைப் பிரித்துப் பார்த்தார். கடிதம் முழுவதையும் படித்தான பிறகு, அதைத் திருப்பித் திருப்பி மேலும் கீழும் இரண்டு மூன்றுமுறை நோக்கினர். பிறகு கோவிந்தனை விளித்து, "அப்படியா, அன்பானந்தர் ஒருவரையும் தம்முடன் அழைத்துச்செல்லாமல், தனியாகவா பிரயாணப்பட்டுச் செல்கிறார் ?" என்றார்.

கோவிந்தன்—"ஆம், சுவாமி· ஒருவரையும் கூட அழைத்துப் போகவில்லை."

சிவஞானம்—"இன்னவிடத்துக்குப் போகிறேனென்று தெரிவித்தாரா?"

கோவிந்தன்—"ஜோலார்பேட்டைக்கு டிக்கெட்டு வாங்கினர்"

சிவஞானம்—"ஓகோ!"

கோவிந்தன்—"கையில் ஒரு சிறு தோற்பெட்டியைத் தவிர வேருென்றுங் கொண்டுபோகவில்லை."

சிவஞானம்—"அப்படியா? அவர் வருகிறவரையில் நீ அவர் மாளிகையிலேயே இருக்கப் போகிருயா——?"

கோவிந்தன்—"இல்லை சுவாமி; ஒரு மாதம் நான் அங்கே இருப்பேன். பிறகு, என் வீட்டுக்குப் போய்விடவேண்டும். இதே உத்தாவுதான் மற்ற வேலைக்காரர்களுக்குங்கூட"

சிவஞானம்—"சரிதான், நல்லது—" (சிறிதுநேரம் யோசித்துப் பிறகு) "அன்பானந்தர் தாம் வருகிறவரையில், உங்களுடைய சம்பளம், வீட்டுச்செலவு முதலியவைகளுக்கு வேண்டிய பணத்தை என்னிடம் பெற்றுக்கொள்ளும்படி தெரிவித்தாரா?"

கோவிந்தன்—"ஆம், சுவாமி தெரிவித்தார். நேற்று சாயந்திரம் எஜமான் எங்களையெல்லாம் தம் அறைக்குக் கூப்பிட்டுத் தாம் வருகிறவரையில் நடந்துகொள்ளவேண்டியதிப்படி யென்று சொன்னர்."

சிவஞானம்—"அப்படியா! எந்த விஷயத்தையும் குறைபாடில்லாமல் செய்வது அவருக்கு வழக்கந்தான். ஒரு மாதத்திற்குள் அவர் வராவிட்டால், நான் அவர் மாளிகைக்கு அடிக்கடிபோய் எல்லாம் சரியாயிருக்கின்றனவா என்று பார்த்து வருவேன். உங்களுக்கு ஏதாவது வேண்டியிருந்தால்—அல்லது ஏதாவது சமாச்சாரம் அறிய விரும்பினல்—இங்கு வந்து என்னைக் கேட்கலாம். தாம் வருகிற வரையில், எல்லாவற்றையும் நான் மேற்பார்த்துக்கொள்ள வேண்டும் என்று அன்பானந்தர் எழுதியிருக்கிருர்."

கோவிந்தன்—"மிகவும் சந்தோஷம்."

சிவஞானம்—(முகம் சிறிது மங்கி, கண்கலங்கி) "என் நண்பர், உன்னை மட்டுமாவது தம்முடன் அழைத்துப் போகாமற் போனது எனக்கு மிகவும் விசனமாயிருக்கிறது," என்றார்.

கோவிந்தன்—(மிகவும் வருத்தத்துடன்) "ஆம், சுவாமி. எனக்கும் அது தான் விசனமாயிருக்கிறது. எங்குப்போனாலும் என்னை அழைத்துப் போகிறவர், இப்பொழுது தனியாய்ப் போனது, ஆச்சரியமாயிருக்கிறது. அதிலும் எஜமானனுக்கு இப்பொழுது சுமார் எழுபது வயதாகிறது. அவர், தமக்கு அதிக பலமிருப்பதாக நினைத்துக் கொண்டிருந்தாலும், வயது, தளர்ந்த வயதல்லவா? இந்த வயதில் அவர் துணையில்லாமல் வெளியூர் போவது, அவ்வளவு உசிதமல்ல. நான் கூட வருவதாகச் சொல்லிப் பார்த்தேன்; அவர் கேட்கவில்லை. வேலை செய்தால் அவரிடத்தில் வேலை செய்யவேண்டும். அவ்வளவு நல்லவர். ஆனால், ஒவ்வொரு சமயங்களில் பிடிவாதம் கொண்டால், அவர் பிடிவாதத்தை மாற்ற எவராலுமாகாது. தங்களுக்குத் தெரியாததல்லவே, சுவாமி," என்றான்.

சிவஞானம்—"வாஸ்தவந்தான்."

சற்று நேரம் இருவரும் மௌனமாயிருந்தனர். பிறகு சிவஞானம் கோவிந்தனை நோக்கி, "நீதான் அவருக்குத் தளர்ந்த வயதென்று சொல்லுகிறாய். அவர் என்னைவிட சுறுசுறுப்பாக இருக்கிறாரே!" என்றார்.

கோவிந்தன்—"நீங்கள் சொல்வது சரிதான். ஆனால் அந்த சுறுசுறுப்பெல்லாம் அவர் மனோ தைரியத்தாலேயே யொழிய உடம்பின் வலிவாலல்ல. ஆறுமாதத்துக்கு முன்னேதான் 'டாக்டர்' அவர் நாடியைப் பார்த்து விட்டு, 'இருதயம் பலஹீனமாயிருக்கிறது, ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்' என்று சொன்னார்."

சிவஞானம்—"ஓ, அப்படியா! அந்த பலஹீனத்தை நீக்க வழியொன்றும் சொல்லவில்லையா?"

**கோவிந்தன்**—"சொன்னார் சுவாமி. இடம் மாறி வசிக்கவேண்டு மென்றும், வேலை யொன்றும் செய்யாமல் சிறிது காலம் இளைப்பாறி யிருக்கவேண்டும் என்றும் சொன்னார்."

உடனே சிவஞானத்தின் முகம் தெளிவடைந்தது. அவர் கோவிந் தனை நோக்கி, "ஆனால் சரிதான். அதனால்தான் அவர் தனியே பிர யாணப்பட்டுப் போயிருக்கிறார். 'போகிற இடத்தைத் தெரிவித்தால், கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ளும் படியாயிருக்கும்; ஒரு கவலையுமற்று இளைப்பாற முடியாது' என்று கருதியே அவர் எனக் குக்கூடத் தாம் போகிற இடத்தைத் தெரிவியாமற் போய்விட்டார். ஆதலால் நாம் கவலைப்பட வேண்டியதில்லை. அப்படித் தமக்கு ஏதா வது கஷ்டம் நேரிட்டால் அவர் அவசியம் நமக்குத் தம் இருப்பிடத் தைத் தெரிவிப்பார்" என்றார்.

"அதில் சந்தேகமில்லை, சுவாமி. என் உதவி அவசியம் தேவை யாயிருந்தால் எனக்குத் தந்தியடிப்பதாக அவரே சொல்லியிருக்கிறார்" என்றான் கோவிந்தன்,

"சந்தோஷம் ; அவரைப் பற்றி எனக்கு ஏதாவது தெரிவதற்கு முன் உனக்குத் தெரிந்தால், நீ உடனே அவ்விஷயத்தை எனக்குத் தெரிவி. மற்றப்படி, உனக்கு ஆகவேண்டிய காரியங்கள் ஏதாவதிருந் தாலும் சரி, செலவுக்குப் பணம் வேண்டியிருந்தாலும் சரி, என்னை வந்து பார்; நான் காலை பதினொரு மணிவரையில் இங்கே இருப்பேன். அதற்குமேல் அவசரமாய்ப் பார்க்கவேண்டியிருந்தால் 'ஹைகோர்ட்' டில் பார்க்கலாம்" என்று சிவஞானம் கூறவும், கோவிந்தன் மிகவும் பணிவுடன் அவரை நமஸ்கரித்து "நல்லது சுவாமி. நான் போய் வரு கிறேன்" என்றான்.

" சரி, போய்வா " என்று சிவஞானம் அவனை அனுப்பிவிட்டுச் சிறிது நேரம் சிந்தனையிலாழ்ந்திருந்தார். அப்பால், தம்கையில் மடித்து வைத்திருந்த அன்பானந்தர் கடிதத்தை மெல்லப் பிரித்து, மீட்டும்ஒரு முறை அதை வாசித்துப் பார்த்தார். அக்கடிதம் வருமாறு:

"என் அன்பிற்குரிய சிவஞானம், சௌபாக்கியவதி—மனோன் மணியின் பதினைந்தாவது ஆண்டு நிறைவு கொண்டாடிய அன்று

எனக்கு ஒரு கெட்ட சமாச்சாரம் தெரியவந்தது. நான் மிகவும் லாபந் தரக் கூடியதாக எண்ணியிருந்த ஒரு விஷயம், நான் எதிர்பார்த்ததற்கு விரோதமாக எனக்கு முழு நஷ்டத்தையும் மனக்கஷ்டத்தையும் விளைவித்துவிட்டது. ஆயினும் அதனல் என் ஆஸ்திக்கு ஒன்றும் பங்கம் நேராது. நாலைந்து நாட்களுக்குமுன், எனக்குப் பின் என் ஆஸ்தி விஷயமாகத் தாங்கள் செய்யவேண்டிய ஏற்பாட்டைப் பற்றி, தங்களுக்கு விளக்கமாகச் சொல்லியிருக்கிறே ஞதலால், அதைப்பற்றி ஒருசிறிதும் கவலையின்றி நான் சென்னையை விட்டுச் செல்கிறேன். அநேகமாய் சிறிது நீண்டகாலம் நான் வெளியூரில் தங்கும்படி நேரிடும். இன்னவிடத்திற்குப் போவதென்பதைப்பற்றி எனக்கே இன்னும் நிச்சயமாய்த் தெரியவில்லையாதலால், தங்களுக்கு நான்செல்லும் இடம் இன்னதென்பதைத் தெரிவிக்கக் கூடாதவனுயிருக்கிறேன். ஆதலால், நான் தங்குமிடத்தைத் தங்களுக்குத் தெரிவிக்கும் வரையில், நான் காணுமற்போய் விட்டதாகக் கருதிக்கொள்ளலாம்.

நான் திடீரென்றுவது, சாவகாசமாய் வியாதியில் வருந்தியாவது இறந்துவிட்டால், என்கைவசத்தில் தயாராக அத்துக்கச் (?) செய்தியைக் குறித்து எழுதிவைத்திருக்கும் கடிதம் ஒன்று தங்களுக்கு வந்து சேரும். விவகாரசம்பந்தமாகவும், சிநேகசம்பந்தமாகவும் தாங்கள் எனக்குச்செய்திருக்கும் உதவிகள்பல. அவைகளுக்கு நான் செலுத்தக் கடமைப்பட்டிருக்கும் நன்றியறிதலை, என்னுடைய மரணசாதனத்தில் உரியவாறு குறிப்பிப்பேன். தாங்கள் வழக்கம்போல் என் விவகாரங்களை கவனித்துவரும்படி வேண்டுகிறேன். என்னைப் பொறுத்தமட்டில், இளைப்பாறுதலும், மனேஅமைதியும் எனக்கு அவசியம் தேவையாயிருப்பதால், அவைகளைப் பெறவேண்டி, சென்னையை விட்டுச் செல்கிறேன். அவைகளைத் தேடும் முயற்சியில் என்னையே நான் இழந்து விடும்படி நேரிட்டாலும் பாதகமில்லை. ஆதலால், வந்தனம்! கர்ணுடகமானவர்கள் சொல்வதுபோல—“ஈசன் தங்களைக் காப்பாற்றுவாராக.” இவ்வாக்கியத்தில் ஏதாவது சாரமிருந்தால், இதைத் தங்களுக்கு உள்ளன்போடும், உண்மைவிருப்பத்தோடும் சொல்ல முன்வருவேன்.

தங்கள் பழைய நண்பன்,

அன்பானந்தன்.

இதைப் படித்து முடித்தபிறகு "என்ன பைத்தியக்காரர்! என்ன பைத்தியக்காரர்" என்று சொல்லிக்கொண்டே, சிவஞானம் கடிதத்தை மடித்துத் தம் சட்டைப்பைக்குள் வைத்துக்கொண்டு, மீண்டும் தமக்குள்ளேயே, "கடைசியாகக் கடிதத்தால் ஒன்றும் விளங்கவில்லையே! 'முழுநஷ்டம்' நேரிட்டுவிட்டதாகச் சொல்கிறாரே! என்ன நஷ்டம்? எனக்குத் தெரியவில்லையே. 'அதனால் என் ஆஸ்திக்கு ஒன்றும் பங்கம்வராது' என்கிறார்! அவர் ஆஸ்திக்குப் பங்கம் வந்தால் பிறகு என்ன இருக்கிறது! அவர் மனதில் என்னென்னமோ நினைத்துக்கொண்டிருக்கிறார். அளவற்ற அவர்செல்வத்துக்கு ஒரு வார்சு வேண்டுமோம்; அந்த வார்சு தம்மிடத்தில் உள்ளன்புடைய வார்சாயிருக்கவேண்டுமோம்! இதெல்லாம் சித்திக்கிற யோசனையா? அது போகட்டும், தாம் இருக்கும்இடத்தைத் தெரிவிக்கிறவரையில் தம்மை காணமற்போய்விட்டவராகக் கருதிக்கொள்ள வேண்டுமோம்! தாம் இறந்துபோன செய்தியைத் தெரிவிக்க இப்பொழுதே கடிதம் எழுதித் தயாராய் வைத்திருக்கிறாராம்!" என்று கருதி வரும்போது அவரை அறியாமல் அவருக்குச் சிறிது விசனம் தோன்றியது. இறந்துபோன பெண்ணின் அஸ்தியை நோக்கி ஸ்ரீ ஞானசம்பந்தசுவாமிகள் பாடிய,

"மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சுரமமர்ந்தா
னொட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணதே போதியோ பூம்பாவாய்"

என்ற பாசுரம் அவரை அறியாமல் அவர் ஞாபகத்திற்கு வந்தது. அப்பாசுரத்தின் கடைசி இரண்டு வார்த்தைகளைமட்டும்,

"போதியோ பூம்பாவாய்"

என்று வாய்விட்டுக் கூறிப்பெருமூச்செறிந்தார்.

---

## VII

### நண்பனைக் காண நடந்துபோதல்.

இயற்கையரசி, தன் அழகெல்லாங் காட்டி இன்பவிளையாட்டயர் வது மனிதசஞ்சாரமற்ற காடுகளிலும், போலிநாகரீகத்துக் குட்படாத நாடுகளிலுமே. 'பணமோ பணம்' என்று பணத்துக்குப் பேயாய்ப் பற ந்து, அந்தப் பணத்தைத் தேடி யடைவதிலேயே தம் காலத்தை யெல்லாம் செலவிட்டுப் பணநலம் ஒழியக் குணநலம் முதலிய உயர் நலங்கள் ஒன்றேனும் அறியாது, சுயநலப்பிரியகர்ளாய், அரிதிற்பெற்ற தம் வாணாளை வீணாக்கும் பட்டணத்து மாக்களுக்கு இயற்கையரசி யின் இன்பக் காட்சியினைக் கண்டு களிக்க நேரம் எது? ஆசை எது? ஆற்றல் எது? அந்தோ! மனிதன் தன் அற்ப ஆசைகளைப் பூர்த்தி செய்துகொள்ளவேண்டித் தான் பிறப்பதற்கு எவ்வளவோ காலத்துக்கு முன்னாக முதற்கொண்டு நிலத்தில் நிலையூன்றி, ஓங்கிவளர்ந்து நெடுங் கிளைகளோடி, பச்சென்ற இலைகளடர்ந்து, நறும் பூக்கள் பூத்து, காய்கள் காய்த்து, கனிகள் கனியத் தந்து, வழிச்செல்வார்க்கு நிழல ளித்து, பல்வகைப் பறவைகள் கூடு கட்டி வாழவும் கனியுணவுகொள் ளவும் பயன்பட்டுவந்த பருமரங்கள் பலவற்றை வேரற வெட்டி வீழ்த் தியும், தெண்ணீரோடைகளை மண்ணாலடைத்தும், குளங்களைத் தூர்த் தும், குடிசைகளைக் குலைத்தும், பகையரசன் அரண்மனையைப் பாழாக் கும் கொடுங்கோல் மன்னனைப்போல இயற்கையரசியின் இன்பப் பூஞ்சோலைகளைச் சின்னாபின்னமாயழித் தொழித்து, 'கண்டதே காட்சி, கொண்டதே கோலமாக' தான் வாழும் சுயநலவாழ்க்கைக் கேற்றவாறு, தன் மனத்தைப்போல் பசையற்ற கல்லையும் இரும்பை யுங்கொண்டு மாடமாளிகைகள் கட்டி, அவைகளைக் கண்டு தானே அக மகிழ்ந்து, 'இறைவனாற் படைக்கப்பட்ட எண்ணிறந்த உலகங்களில், இம்மண்ணுலகம் ஒரு பகுதியிற் சிறுபகுதி, அச் சிறு பகுதியில் மிக மிகச் சிறியவோர்பகுதி நாம் கட்டிய மாடமாளிகைகள்' என்பதை அறவே மறந்து, 'எல்லா உலகமும் இதுவே, எல்லா இன்பமும் இதுவே, இவையெல்லாம் நமக்கே' என்றெண்ணி இறுமாந்து, தனது ஆசைக்கடலில், சுயநலமலையை மத்தாக நாட்டி, வஞ்சகப் பாம்பைக் கயிறாகச்சுற்றிக் கடைந்து, பண அமுதெடுத்துப் பருகி, அழியாவாழ்க்கையும், ஒழியா இன்பமும் பெறக்கருதி வகுத்த—மனி தன் வகுத்த—'நாகரீக' பட்டணங்களில் இயற்கையரசி அரசுபுரிந்து

இன்பமளிக்க ஒப்புவளோ? ஒப்பாள். இதனாலல்லவோ, உத்தமக் கவிஞர்களும், மெய்த்தவ ஞானிகளும் காடெங்கே, மலையெங்கே, நெடு நீர்க் கடலெங்கே என்று தேடித் திரிந்தனர்— திரிகின்றனர்? கடவுளின் பேராற்றலையும் பெருங் கருணையையும் ஒருசிறிதாவது காட்ட வல்லது இயற்கைக் காட்சியையன்றி வேறொன்றுண்டோ? இது பற்றியே உண்மையறிய அவாவிய ஸ்ரீமத் தாயுமான சுவாமிகள்,

காயிலைபுன் சருகாதி யருந்தக் கானங்
கடல்மலையெங் கேயெனவுங் கவலையாவேன்
வாயில்கும்பம் போற்கிடந்து புரள்வேன் வானின்
மதிகதிரா முன்னிலையா வைத்து நேரே

நேரேதா னிரவுபகல் கோடா வண்ணம்
நித்தம்வா உங்களையிந் நிலைக்கே வைத்தார்
ஆரே?யங் கவர்பெருமை யென்னே? யென்பேன்.
அடிக்கின்ற காற்றே!நீ யாராலேதான்
பேராதே சுழல்கின்ற யென்பேன். வந்து
பெய்கின்ற முகில்காள்! எம்பெருமானும்போல்
தாராள மாக்கருணை பொழியச் செய்யுஞ்
சாதகமென்னே? கருதிச் சாற்று மென்பேன்.

கருதறிய விண்ணோ! நீ யெங்கு மாகிக்
கலந்தனையே யுன்முடிவின் காட்சியாக
வருபொருள் எப் படியிருக்குஞ் சொல்லா யென்பேன்.
மண்ணே! உன் முடிவிலெது வயங்கு மாங்கே
துரியவறி வுடைச்சேடன் ஈற்றின் உண்மை
சொல்லானோ சொல்லென்பேன் சுருதியே நீ
ஒருவரைப்போ லனைவருக்கு முண்மை யாமுன்
உரையன்றோ உன்முடிவை உரைநீ யென்பேன்.

உரையிறந்து பெருமைபெற்றுத் திரைக்கை நீட்டி
ஒலிக்கின்ற கடலே! இவ் வுலகஞ் சூழக்
கரையுமின்றி உன்னைவைத்தார் யாரே யென்பேன்.
கானகத்திற் பைங்கிளிகாள்! கமல மேவும்

வரிசிறைவன் டினங்காள்! ஒதிமங்காள்! தூது
 மார்க்கமன்றோ நீங்கள்? இது வரையிலேயும்
பெரியபரி பூரணமாம் பொருளைக் கண்டு
 பேசியதுண் டோ? ஒருகாற் பேசு மென்பேன்."

என்று, கானம், கடல், மலை, மண், விண் முதலியஇயற்கைப் பொருள் களையும், இயற்கை நெறிதிறம்பாது இன்பமாய் வாழும் கிளிமுதலிய பறவைகளையும் முன்னிலைப்படுத்தி 'உண்மை எத்தகைத்து?' என்று உசாவுகின்றார். ஆ, இயற்கையின் பெருமையே பெருமை! அதன் அழகே அழகு! அதைக்கண்டு இன்பமுறும் இன்பமே இன்பம்!—

இத்தகைய இயற்கையின் இனிய காட்சிகள் பலவற்றை, மேற்குக் கணமலைத் தொடரைச் சார்ந்த மலையாளதேசத்திலும், அதையடுத்த நகர்களிலும் காணலாம். அந்நாடுகளில் ஒன்றெனத்தக்க சேலம் ஜில்லாவின் பிரதான பட்டணமாகிய சேலத்தின் வழியாக ஈரோடு, திருப்பூர் முதலிய ஊர்களுக்குச் செல்லும் ரஸ்தா ஒன்றுண்டு. அந்த ரஸ்தா வழியாக ஒரு நாள் மாலை சுமார் மூன்றுமணிக்கு, பிச்சைக்காரன்—அல்லது—பிச்சைக்காரனைப்போல் தோற்றிய ஒரு வயோதிகன் தன்னந் தனியனாய் நடந்து வந்தான். அவன் இடையில் உடுத்தியிருந்த ஆடை, தெருப்புழுதி படிந்து மிகவும் அழுக்கேறியிருந்தது. அவன் தன் உடம்பை மூட ஒரு சட்டை அணிந்திருந்தான். ஆனால், அச்சட்டை, நெடுநாள் உபயோகப்படுத்தப்பட்டது போல் இழைகள் நைந்தும், பலவிடங்களிற் கிழிந்தும், இருந்ததை நோக்கினால், யாரோ ஒருவன் அதை முன்னம் உபயோகித்திருந்து தனக்கு உதவாமற் போனபிறகு, அதை இந்தப் பிச்சைக்காரனுக்குப் பிச்சையாகக் கொடுத்திருக்கவேண்டுமென்று கருதற்கு இடமுண்டாகும். இந்தக் கேவல உடைகளை உடுத்தியிருந்த வயோதிகனோ, அவ்வுடைகளினும் கேவலமாய் இருந்தான். அந்த உடைகள் அவனுக்கும் உபயோகப்படாமல் எறியப்பட்டு மண்ணோடு மண்ணாய் மக்கிமடியுமுன், அவன் இவ்வுலகத்தில் ஒன்றுக்கும் உபயோகப்படாமல் வலிவிழந்து செயலிழந்து மடிந்து மண்ணோடு மண்ணாய்ப்போவான் போலக் காணப்பட்டான். அவன் தலைமயிர் அடர்ந்திருந்ததாயினும், முழுவதும் பால்போல் நரைத்துப்போயிருந்தது. கன்னங்கள் ஒட்டி

யும், கண்கள் குழிந்தும் இருந்தன. ஆனால் அவன் பார்வை மட்டும் மிகவும் கூரியதாகவும் ஆழ்ந்த சிந்தனையைக் காட்டுவதாகவும் இருந்தது. உடலின் கட்டு ஒருகாலத்தில் அவன் மிகவும் வலியவனாயிருந்திருக்கவேண்டும் என்பதைக் காட்டியதாயினும், இப்பொழுது அவன் மிகவும் இளைத்துக் களையுற்றிருந்தான். வெகுதூரம் நடந்து வந்தமையாலோ, உண்ண உணவு போதிய அளவு கிட்டாத அவ்வளவு கொடிய வறுமையினாலோ, அல்லது இயல்பாகவே வயோதிகத்திற்குள்ள பலவீனத்தாலோ, அவன் மிகவும் தள்ளாடித் தள்ளாடிச் சிறிது தூரம்நடந்து வந்து அதற்குமேல் நடப்பதற்குச் சக்தியற்று ஓர் ஆல மரத்தினடியில் உட்கார்ந்தான். அவன் முகத்தில் வியர்வை ஒழுகியது. அதைத் தன் கையால் துடைத்துக்கொண்டு அம்மரத்தின் மீது அவன் சாய்ந்தான்.

அவன் களைதீர உட்கார்ந்த ஆலமரம் மிகவும் முதிர்ந்த மரமாகையால், அதன் நெடிய கிளைகளிலிருந்து வீழ்ந்த விழுதுகள் நிலத்திற் பாய்ந்து வேரூன்றி, தாமும் தனித்தனி மரங்கள் போலப் பருமனும் உறுதியும் உடையவா யிருந்தன. வயோதிகன் தான் உட்கார்ந்திருந்த மரத்தின் உச்சியை அண்ணாந்து பார்த்தான். மாலைவெயிலின் பிரகாசத்தில் மிளிரும் பச்சென்று அடர்ந்த இலைகளையும், அவற்றின் இடையிடையே கிளையோடு ஒட்டினாற்போல் விளங்கிய செக்கச் சிவத்த சிறு பழங்களையும் நோக்கி, சிகப்புக் கற்களிழைத்த மரகதப் பந்தரின் கீழ், தான் உட்கார்ந்திருப்பதாகக் கருதி அவன் அகமகிழ்ந்தான். அப்பொழுது அம்மரத்தின் உயர்ந்த கிளை ஒன்றில் ஒரு நாகணவாய்ப் பறவை வந்தமர்ந்து நிர்விசாரமாய், அரசி ஒருத்தி, அரண்மனையின் மேல்உப்பரிகையில் ஒய்யாரமாய் நின்றுகொண்டு, தன் ஆளுகைக்குட்பட்ட நிலப்பகுதியின் அழகை இப்புறமும் அப்புறமும் திரும்பித் திரும்பி மகிழ்ந்து நோக்குவது போலத், தன் தலையை இப்புறமும் அப்புறமும் திரும்பித் திரும்பிப் பார்த்தது. வயோதிகன் அந்தப் பட்சியைப் பார்த்துப் பேசுவது பேலப் பின்வருமாறு தனக்குள் சொல்லிக் கொண்டான்:

" அநேகமாய் எல்லாவிஷயங்களையும் சாமர்த்தியமாகவே செய்துவிட்டேனென்று நினைக்கிறேன். துப்பறிந்து என்னைக் கண்டுபிடிப்ப

தற்கு ஓரிடத்திலும் எவ்வடையாளமும் வைக்கவில்லை. கடியம்பட்டி ஸ்டேஷனில் விட்டுவந்த தோற்பையால் ஒன்றும் விளங்காது. அதை எப்பொழுதாவது, சுதந்தரவாளிகளற்ற சொத்துக்களோடு சேர்த்து ஏலத்தில் விற்றபோதிலும், அதை வாங்குவோர், அதனுள் விலாசக் குறியில்லாத சில உடைகளையன்றி வேறொன்றையும் காணப் போகிற தில்லை. எனக்கு அறிமுக மானவர்கள் என் யாத்திரையைக் குறித்து அறிந்திருக்கக்கூடிய அறிவெல்லாம் ஜோலார்பேட்டையோடு நின்று போகும். ஜோலார்பேட்டைக்கு அப்பால் ஓர் அந்தகாரம் உண்டா ய்விட்டது. அந்த அந்தகாரத்தில் கோடீசுவரர்—அன்பானந்தர் மறை ந்துபோய் விட்டார். பிச்சைக்காரன்—அன்பானந்தன் இதோ அவர் ஸ்தானத்தில் இங்கே உட்கார்ந்திருக்கிறான்!''

அன்பானந்தர்—பிச்சைக்காரக்கோலத்தில்நாம் காணும் வயோதி கர் நமது அன்பானந்தரே என்பதை அவர் வாய்மூலமாகவே அறி ந்து கொண்டோமல்லவா?—அவர் கூறியவற்றையெல்லாம், மரக் கிளைமேல் அமர்ந்த சிறுபறவை நன்கறிந்து கொண்டு “தெரிகிறது! தெரிகிறது! நீர் எங்களில் ஒருவராகி விட்டீர்!—அதாவது நாளைக் கு என்ன செய்வதென்று இன்றே கவலைகொள்ளாது, அவ்வச்சமய விருப்பு வெறுப்புக்களை அவ்வப்போது கொண்டு, அவ்வப்பொழுதே ஒழிப்பதென்று தீர்மானித்து அப்படியே நடந்துவருகிறீர். ஆகவே பறவையாகிய எனக்கும், மனிதனாகிய உமக்கும் ஒருவகை ஒற்றுமை ஏற்பட்டுவிட்டது. இனி நாம் இருவரும் சகோதரர்கள்'' என்று கூறுவது போல சிறகை உதறிக்கொண்டு, அவரை ஒரு கண்ணாற் கூர்ந்து நோக்கியது.

உடனே ஒரு புன்னகை அவர் முகத்தை மலர்வித்தது. அந்த நிலைமை அவர்க்குப் புதுமையாகவும் இன்பம் பயப்பதாகவும் இருந் தது. அவர் மிகவும் களைத்திருந்தார். சென்ற இரண்டு நாட்களாக, தாம் இதுவரையில் நடந்து பழக்கமுள்ள தூரத்திற்கு மிகவும் அதிக மாக நடந்தமையால், அவர் அவயவங்கள் பெரிதும் வருந்தின. ஆயி னும், பெற்றோர் முதலிய பெரியோர் சொற்கு அடங்கியிராமல் வீட்டைவிட்டு ஓடிவந்துவிட்ட சிறுவன், அதனால் என்ன இடை யூறுகள் அல்லது கஷ்டங்கள் நேர்ந்தபோதிலும் அவற்றை அனு

பவிக்கச் சித்தமாயிருப்பதுபோல், அன்பானந்தரும் என்ன துன்பம் நேரிட்டாலும் அதை ஏற்றுக்கொள்ளச் சித்தமாயிருந்தார். ஆதலால், இப்பொழுது தொலைதூரம் நடந்ததா லுண்டான களைப்பை நினைத்து ஒரு சிறிதும் வருந்தவில்லை. சென்ற சில வருஷங்களாக அவர் தம் வாழ்க்கையில் ஒரு புதிய அனுபவத்தை அனுபவிக்கவேண்டுமென்று விரும்பினார்—முயன்றார். அதைக் கொடுப்பார் ஒருவரும் இல்லை. தன்னைச் சுற்றியிருந்த ஜன சமூக உலகம், எப்பொழுதும்போல அன்பும் அறிவும் அற்றதாகவும், மனோ அமைதிக்கும் இன்பவாழ்க்கைக்கும் ஒரு சிறிதும் பயனில்லாததாகவும், சாரமற்ற சக்கையாகவுமே இருந்தது. பண உலகமோ வென்றால், அதுவும் அவர் சம்பந்தப்பட்ட மட்டில் பயனற்றதாகவே இருந்தது; அந்த உலகத்தைச் சுற்றிச் சுற்றிப் பார்த்துவிட்டார்; தேடிய பணத்தையே மேலும் மேலும் தேடித்தேடி அவர் சலித்துவிட்டார். சலிப்பின்றி மேலும் மேலும் பணந்தேடிப் பேராசைப் பேய்கொண்டு திரிவோர் பலர் உளர்; ஆனால் அன்பானந்தருக்கு அத்தகைய நிலையற்ற இன்பங்களின் நிலை, இவ்வளவுதான் என்று தெளிவாய்த் தெரிந்துவிட்டபடியால் அவற்றை ஒதுக்கிவிட்டார். தம்முடைய வாழ்க்கையில் ஒரு முழுமாறுதல் உண்டாகவேண்டும் என்ற அவா அவருக்கு மிகுதியாக இருந்தது. அதற்குத் தரித்திரத்தின் அனுபவத்தைருசித்துப் பார்ப்பதைவிட சிறந்த மருந்து வேறு யாது இருக்கக் கூடும்? அதை உத்தேசித்தே—அந்தக் கருத்துடனேயே— அவர் தற்போது கொண்டிருக்கும் கோலத்தைக் கொண்டார். ஆனால் தாம் தொடுத்த காரியம் எவ்வகையாய் வளர்ந்து முடிவு பெறும் என்பதைப் பற்றி அவருக்கு இதுகாறும் தெளிவாக ஒன்றுந் தோன்றவில்லை. விஜயமங்கலம் என்னும் ஊருக்குப் போய்ச் சேர்ந்தால், அங்கே தாம் கொண்டகருத்து—அதாவது அன்பைக் காணுவது—ஜயமாகுமென்ற எண்ணத்தினல் தான். அவர் விஜயமங்கலம் என்று ஊருக்குப் பெயரிருப்பதால் தம் கருத்து அங்கே போனல் ஜயமாகக் கூடுமென்ற ஒரு குருட்டு நம்பிக்கையைக்கொண்டு, அதைத் தாம் குறித்துச் செல்லும் இடமாகத் தெரிந்தெடுத்தாரேயன்றி வேறு எந்தக் காரணத்தினலுமல்ல.

அன்பானந்தர், தாம் சென்னையைவிட்டுப் புறப்பட்டதுமுதல் செய்த செய்கைகளையெல்லாம் முறையே சிந்தித்துப் பார்த்தார் :

வேலைக்காரன் கோவிந்தன், உத்தரவுப்படி, இரண்டு மூன்று நாள் பிரயாணத்துக்கு அவசியமான உடைமுதலியவைகளைத் தோற் பையில் எடுத்துவைத்து, ஸ்டேஷன் வரையில் அவரோடு சென்று, அவர் ஜோலார்ப்பேட்டைக்கு முதல் வகுப்பு டிக்கட்டுவாங்கிக்கொண்டு ரயிலேறும்வரையில் பார்த்திருந்து பிறகு போய்விட்டான். புகை வண்டி புறப்பட்ட பின், அன்பானந்தர் தாம் ஏறியிருந்த முதல் வகுப் பில் வேறு பிரயாணிகள் ஒருவரும் இல்லாமையால், தோற்பையைத் திறந்து, அதிலிருந்த உடைகளில் தமது விலாசக் குறியிட்ட பாகங் களை யெல்லாம் ஒரு கத்தியால் கிழித்து எடுத்தெறிந்துவிட்டார். தோற்பைமீதும் உள்ளும் அப்பையாவது, அதனுள்ளிருக்கும் சாமான் களாவது இன்னாருடையவை என்று அவைகளைக் கொண்டு மட்டும் ஒருவரும் அறிந்துகொள்ள முடியாதபடி செய்துவிட்டார். இரவு ஒன்றரை மணி சுமாருக்குப் புகைவண்டி ஜோலார்பேட்டையை அடைந்தது. அன்பானந்தர் அங்கு இறங்கி, ஸ்டேஷனில் உள்ள முதல் வகுப்புப் பிரயாணிகள் தங்குமிடத்தில் அன்றிரவைக் கழித்து, மறுநாள் பொழுதுவிடிந்தவுடன் எழுந்து ஊருக்குள் சென்று ஓர் அன்னசத்திரத்தில் தங்கினார். அன்றுமாலை மூன்றுமணி க்கு ஸ்டேஷனுக்குத் திருப்பிவந்து, அப்பொழுது புறப்பட்ட வண்டி யில் கடியம்பட்டிக்கு இரண்டாவதுவகுப்பு டிக்கட்டு வாங்கிக்கொ ண்டு ஏறினார். மாலை ஆறுமணி சுமாருக்கு வண்டி கடியம்பட்டிக்கு வந்தது. அன்பானந்தர் அங்கே இறங்கி, மறுநாள் காலைவண்டியில் புறப்படப் போவதாகவும், அப்பொழுது எடுத்துக்கொள்வதாகவும் கூறித், தோற்பையை ஸ்டேஷன் மாஸ்டரிடம் (Station Master) ஒப்புவித்துவிட்டு ஊருக்குள் சென்று ஒரு சத்திரத்தில் தங்கி, இராப் போஜனம் முடித்துக்கொண்டு, மறுநாள் காலை எட்டு மணிக்குள் ஓர் அவசர காரியமாய் சேலம் போகவேண்டியிருக்கிற தென்றும், அதற் காகக் காலை நாலுமணிக்கே அங்கிருந்து புறப்படக் கூடிய குதிரைவண்டி யொன்று வாடகைக்கு வேண்டு மென்றும் சத்தி ரக்காரரிடம் கூறி, அவர் அப்படியே அமர்த்திவைப்பதாக வாக் களித்த பிறகு படுக்கைத்குப் போய்விட்டார். சத்திரக்காரர் வாக்

களித்தபடியே ஒரு குதிரை வண்டியை இரண்டு ரூபா வாடகைக்குப் பேசிவைத்திருந்தார். காலை நாலுமணிக்கெல்லாம், அன்பானந்தர் நித்திரை நீங்கி எழுந்து அவ்வண்டியில் புறப்பட்டுவிட்டார். எட்டு மணிக்குள்ளேயே வண்டி சேலம் சென்று சேர்ந்தது. வண்டிக்காரனுக்குப் பேசிய வாடகையைக் கொடுத்தனுப்பிவிட்டு அவர் ஒரு சத்திரத்தை நாடிச் சென்று அங்குத் தங்கியிருந்து, மாலை நான்கு மணிக்கு அந்திக்கடை வீதிக்குப் போய் ஒரு கடைக்காரனிடம், 'கட்டத் துணியில்லாமல் ஒரு பிச்சைக்காரன் கஷ்டப்படுகிறான். சொற்ப விலையில் ஒரு வேஷ்டியும், ஒரு சொக்காயும் வேண்டும்; கிடைக்குமா? கிழிந்து போனதாயிருந்தாலும் பாதகமில்லை' என்றார். கடைக்காரன் அப்படியே ஒரு கிழிந்த வேஷ்டியும், கந்தலாகிப் பலவிடங்களில் தைக்கப்பட்ட ஒரு சட்டையும் எடுத்துக்கொடுத்தான். அவைகள் இரண்டையும் நாலணாவுக்கு விலைதீர்த்து, அவைகளைக் கையால் தொடுவதற்கும் அருவருப்புற்றவர்போல், அவைகளை ஒரு காகிதத்தில் வைத்துச் சுற்றிக்கொடுக்கச் சொல்லி வாங்கிக்கொண்டார். பிறகு வேறெங்குந் தங்காமல், சேலத்திலிருந்து ஈரோடுக்குப் போகும் சாலையைத் தெரிந்துகொண்டு அதன் வழியே நடந்தார். ஊர் கண்ணுக்கு மறையுந் துணையும் நடந்தார். பொழுதுபட்டு விளக்குவைக்குந் தருணமாயிற்று. சாலையோரத்தில் ஒரு மரத்தடியில் உட்கார்ந்தார். தமக்கு முன்னும் பின்னும் கண்ணுக்கெட்டிய தூரம் வரையில் கவனித்துப் பார்த்தார். போவார் வருவார் ஒருவரும் இல்லை.

அன்றையதினம் பௌர்ணமி. ஆதலால், சந்திரன் ஆகாயத்தில் தோன்றிப் பால்போல் நிலாக் கற்றைகள் வீசிப் பிரகாசித்தது. பறவைகளெல்லாம் தத்தம் கூடுகளிற் சென்று ஒடுங்கிவிட்டன. எங்கும் அமைதி நிறைந்திருந்தது. அன்பானந்தர் தம் சட்டைப் பையில் வைத்திருந்த இரு கடிதஉறைகளை எடுத்தார். அவற்றுள் ஒன்று சிவஞானத்தின் விலாசம் இடப்பெற்றிருந்தது. அதை ஒருபுறமாக வைத்துவிட்டு மற்றொன்றை எடுத்துப் பிரித்தார். அதனுள் நூறு ரூபா நோட்டுக்கள் ஐந்தும், பத்துரூபா நோட்டுக்கள் இரண்டும் இருந்தன. அன்பானந்தர் அவைகளைத் திரும்பவும் உறையிலிட்டு, சிவஞானம் விலாசமிட்ட உறையோடு வைத்துவிட்டுத் தாம் அந்திக்கடையில் வாங்கிய பழஞ் சட்டையை எடுத்து, அதின்

ஓரத்தில் துணியை இரட்டையாய் மடித்துத் தைத்தவிடத்தில் பின் புறமாக இருந்த துணியைத் தம் சட்டைப்பையில் வைத்திருந்த ஒரு கத்தியால் மடிப்புள்ள அகலத்துக்குக் கீறினார். அதனால் அவ்விடம் ஒரு பைபோலாயது. அந்தப் பைக்குள், அவர், சற்றுமுன் எடுத்துப் பார்த்துவிட்டு வைத்த நோட்டுகளடங்கிய உறையையும், சிவஞானம் விலாசமிட்ட உறையையும் வைத்தார். பிறகு தாம் முன்யோசனை யுடன், தம்முடன் கொண்டுவந்திருந்த ஒரு நூற்கண்டையும் ஊசி யையும் எடுத்து நிலாவெளிச்சத்தில் நூலை ஊசியிற் கோத்துப் புதிதாகத் தாம் உண்டு பண்ணிய பையின் வாயைத் தைத்துவிட் டார். அப்பால், அவர் தம் உடைகளைக் களைந்துவிட்டு, அந்திக் கடையில் வாங்கிய பழையவஸ்திரத்தையும் சட்டையையும் உடுத் திக் கொண்டார். முன் அணிந்திருந்த சட்டைப்பையில் இருந்த சில நாணயங்களை எடுத்து எண்ணிப்பார்க்க, பதின்மூன்றரை அணு இருக்கக் கண்டு, அவைகளைத் தாம் புதிதாய் அணிந்துகொண்ட பழைய சட்டைப்பையில் போட்டுக்கொண்டார். இந்த நிலையில் தாம் செய்ய வேண்டிய வேலைகளையெல்லாம் செய்து முடித்து விட்டது போல் அவருக்கு ஓர் ஆனந்த முண்டாயிற்று. ‘இன்னும் ஒன்று பாக்கியிருக்கிறது. நான் களைந்துவைத்த உடைகளை, ஒருவர் கண் ணிலும் அகப்படாத ஓரிடத்தில் எறிந்து விடவேண்டும். அதையும் செய்துவிடுகிறேன்’ என்று அவர் தமக்குள் சொல்லிக்கொண்டு அவ்வுடைகளைச் சுருட்டி எடுத்துக்கொண்டு எழுந்து சிறிது தூரம் கடந்து சென்றார். வழியில் ஓர் ஆறு குறுக்கே ஓடியது. அதைக் காணவும் அன்பானந்தர் மிகவும் சந்தோஷமுற்று, அவ்வாற்றின் மதகருகே தங்கி, சாலையிற் கிடந்த ஒரு கருங்கற்றுண்டை எடுத்துத் தாம் முன் உடுத்தியிருந்த வஸ்திரத்தில் ஒரு பாகத்தைக் கிழித்து, அதைக் கயிறாக முறுக்கி, கையில் வைத்திருந்த உடைகளை விரித்து அதன் நடுவே தாம் எடுத்த கருங்கல்லை வைத்து, எல்லாவற்றையும் ஒரு மூட்டையாகச் சுற்றி, அதைத் தாம் திரித்த துணிக்கயிற்றால் இறுகக் கட்டி முடிந்து, அம்மூட்டையை அவ்வாற்றின் நடுவே எறிந்து விட்டார். உடனே தாம் எறிந்ததை மனிதர் எவரேனும் பார்த்தி ருக்கக்கூடுமோ வென்று ஐயமுற்று சுற்றி முற்றும் பார்த்தார். ஒரு வரும் கண்ணிற்படவில்லை. அதனால், அவர் மன அமைதியுற்று விரைந்தோடும் அவ்வாற்றை நோக்கிய படியே பின்வருமாறு சிந்திக்க

லானர்: "நான் இவ்வாற்றில் எறிந்தது ஒரு துணி மூட்டையேயாயி னும், ஏதோ ஒரு கொலை புரிந்து, தான் கொன்ற பிரேதத்தை ஒளிக்க அதை ஆற்றில் கல்லைக்கட்டி எறிந்த ஒரு கொலைஞனைப்போல் என் உள்ளம் அஞ்சுகிறதே, ஏன்? ஒரு வகையில் நானும் கொலைஞன் தான் போலிருக்கிறது. என்னுடைய முன் உருத்தோற்றத்தை—கோடீசுவரர் அன்பானந்தரைக்—கொன்று விட்டேனல்லவா? அநேகமாய்க் கொன்றுவிட்டதாகத்தான் நினைக்கிறேன்."

இவ்வாறு சிந்தித்துத் தம்மைத் தாமே குனிந்து நோக்கி "இந்தக் கோலத்தில் என்னை யார் அறிவார்? யார் மதிப்பார்? ஒருவரும் அறியார்; ஒருவரும் மதியார். அம்மட்டும் அல்ல. செல்வர்கள் என்ன அநியாயம் செய்தபோதிலும், அவர்களை நியாய சபைக்குக் கொண்டுவர நெருங்கினால் அவர்களிடத்து ஏராளமாயுள்ள பண உருளைகள் உருண்டுவந்து தங்கள் கழுத்தை அரைத்துவிடுமென்று அஞ்சி ஒதுங்கியும், அறியாமையாற் சிறு குற்றங்கள் செய்யும் ஏழை எளியவர்கள் மீது அபாண்டமான பெருங்குற்றங்களை யெல்லாம் ஏற்றி அவைகளை ருசுப்படுத்தி அவர்களைத் தண்டனைக்காளாக்கி, அவர்கள் மனைவி மக்களை வருந்தவிட்டுத் தாம் தம் உத்தியோகத்தில் உயர்பதவியும் கீர்த்தியும் அடையவேண்டி அண்டபிண்டத்தையெல்லாம், பொய், புனை சுருட்டு, வஞ்சம், லஞ்சம் முதலிய கருவிகளாற் புரட்டும் போலீஸ் புலிகள் என்னைக் கண்டால், 'சந்தேகப் பேர்வழி'யாக (Suspect) கருதி, சிறைப் படுத்தினாலும் படுத்துவார்கள்! ஆனால் எல்லாவற்றுக்கும் துணிந்து வெளிப் புறப்பட்ட நான், இந்தப் புலி சிங்கங்களுக்கெல்லாம் அஞ்சப் போகிறதில்லை. வாராத ஆபத்து வந்தாலொழிய சட்டை மடிப்புக்குள் வைத்திருக்கும் நோட்டுகளை எடுப்பதில்லை. என்கையில் இப்பொழுதுள்ள ஆஸ்தியெல்லாம் பதின் மூன்றரை அணாவே. இதைக் கொண்டு என் யாத்திரையைப் பூர்த்திசெய்வேன். இந்தப் பதின்மூன்றரை அணாவுக்குக் கூட விதியில்லாமல், அன்றாட உழைப்பைக்கொண்டு அன்றாட ஜீவனம் நடத்தும் ஏழைகள் எத்தனையோ பெயரில்லையா? அவர்களெல்லாரும் எவ்வளவு கவலையற்று—போதுமான திரவியமிருந்தும் அதைக்கொண்டு திருப்தியுறாது, தம் வாழ் நாள் மட்டுமல்ல,—தம் பிள்ளைகள், பேரப்பிள்ளைகள் வாழ்நாள்களுக்கும்

போதுமான திரவியம் சேகரிக்கவேண்டுமென்று படாதபாடுபட்டு உழலும் சில 'நாகரீகர்கள்' போல், என்னவிருந்தும் இல்லாததற்கு எங்கித்தவியாது—காலங் கடத்தவில்லையா? அவர்களுள் ஒருவனாக நான் ஏன் இருக்கக்கூடாது? 'கல்லினுள் தேரைக்கும் கருப்பையுள் முட்டைக்கும்' உன்னி உணவளிக்கும் ஒரு கர்த்தன் இருக்கின்றான் என்ற நிச்சயமான நம்பிக்கை இருக்குமானால், வாழ்க்கையில் கவலை ஏன் உண்டாகிறது? இடையறாது அசைந்து கொண்டிருக்கும் இருதயகமலம் ஒரு சிறிது அசையாமல் நின்றுவிட்டால், தன் அபாரபுத்தி, சக்திகளெல்லாம் செயலற்றுத் தான் வெறும் மாமிச பிண்டமான பிரேதமாய்விடும்! அவ்வளவு அற்ப வாழ்க்கையை யுடைய மனிதன், எல்லாம் தன்னால் இயங்குகிறதாக நினைத்து இறுமாப்பெய்தி, துன்பத்துக்கும் துயரத்துக்கும் ஆளாகி அழிகின்றான்! அந்தோ, இவன் பேதைமையை என்னென்று சொல்வது! செல்வத்தால் எல்லாங் கிட்டிவிடும் என்று மனிதன் நினைக்கிறான். ஆனால், அந்தச் செல்வத்தை அடைந்தால், ஆதனால் 'எல்லாம் அவனுக்குக் கிட்டுவது' போக, எல்லாவற்றையும்—அறிவுடைய ஒருவன் விரும்புதற்கேற்ற எல்லாவற்றையும்—அவன் இழந்துவிடுகிறான்! அதற்கு நானே திருஷ்டாந்தம்! கோடிக் கோடியாய்ப் பணத்தைச் சேர்த்தேன்! சேர்த்து என்ன பயனைக் கண்டேன்? அந்தப் பணமே என் இன்பத்துக்கு ஒரு பெரிய தடையாய் விட்டது. அந்தப் பணத்தைத் தேடச் செலவிட்ட காலமெல்லாம் வீணாயிற்றே என்று வருந்துகிறேன். நான் தேடிய பொருள் அத்தனையையும் கொட்டிக் கொடுத்தாலும், கடந்து போன என் வாழ்நாட்களை நான் மீட்டும் பெறக் கூடுமா? நான் தேடிய செல்வம் எனக்கு அல்லலைத் தருவதாயிற்றேயொழிய வேறென்ன? இதனாலல்லவோ ஸ்ரீமந் மாணிவாசகப் பெருமான்,

'செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்'

என்றார்? ஆயினும், இப்பொழுதாவது எனக்குஉணர்வு வந்து அச்செல்வத்தை ஒதுக்கி வைத்து இவ் வறிய கோலங்கொண்டதைப்பற்றிச் சந்தோஷப் படுகிறேன். என்னை இந்நிலையிற் கண்டு யாராவது 'இவ்வளவு வருந்தி, இந்தத் தள்ளாத வயதில்எங்கையா போகிறாய்?' என்று கேட்டால் என்ன சொல்லுவது? ஒன்றும் புலப்படவில்

லையே.—ஏன் ? உண்மையைச் சொல்லிவிடுகிறேன். நான் சொல்வது விஜயமங்கலத்திற் கல்லவா ? அங்குச் சென்றால் என்கருத்து ஜய மாகும் என்னும் கருத்தோடு செல்கிறேன். அக்கருத்தாவது அன்பைக் காணுவது. அதாவது அன்புடையவரைக் காணுவது. அன்புடையவர் நண்பரல்லரோ ? ஆதலால், நான் என் நண்பர் ஒருவரைக் காண விஜயமங்கலம் செல்வதாகச் சொல்லிவிடுகிறேன். ரயில் மார்க்கமாய்ச் செல்லக்கூடிய அவ்வூருக்கு நடந்து செல்வானேன்? ரயில் மார்க்கமாய்ச் செல்லக் கையிற் காசில்லாத வறியனாகிய நான் நடந்து தானே செல்லவேண்டும்? விஜயமங்கலம் நடந்துசெல்வதற்குத் தூரமான ஓர் இடமானாலும், பரம ஏழையாகிய ஒருவன், அவ்விடத்தில் உள்ள, தனக்கு அன்பான ஒரு 'நண்பனைக் காண நடந்துபோதல்' அவ்வளவு அதிசயமாகத் தோற்றாதென்று நினைக்கிறேன்.'' என்று இவ்வாறு சிந்தித்துப் பிறகு தாம் செல்லும் வழியைத் தொடர்ந்து சென்றார் நமது பெரியார்.

கால் ஓயும் மட்டும் நடப்பதும், ஓய்ந்த பிறகு ஓரிடத்தில் தங்குவதும் இப்படி அன்றிரவையும் மறுநாட் பகலிற் பெரும்பொழுதையும் கடத்தி இப்பொழுது—மாலை சுமார் மூன்று மணிக்கு—நாம் கூறிய ஆலமரத்தடியில் தங்கினார் அன்பானந்தர்.

## VIII

### வழியிடை நட்பு.

ஆலமரத்தின் நிழலும், மாலையழகின் மாட்சியும் அன்பானருக்கு இருந்த களையை ஆற்றி, உடலுக்கு சுகத்தையும் மனத்[illegible] இன்பத்தையும் அளித்தன. பொழுதுபடும் வரையில் அவ்[illegible] லேயே இருப்பதென அவர் தீர்மானித்தார். அவர் [illegible] கொண்டுவந்த உடை முதலிய பொருள்களை எறிந்து விட்டா[illegible] நமக்குச் சிறந்த வழித்துணையென்று தம்மோடு கொண்[illegible]! ஒரு பொருளை மிகவும் ஜாக்கிரதையாக வைத்திருந்தார் [illegible]ப! நீ காலத்தில் உதவக்கூடும் என்று பத்திரப்படுத்தி வைத்த [illegible]யல் களை ஒரு பொருளாக அவர் மதிக்கவில்லை. அந்தோ!

ணத்தை முன்னிட்டாவது இழக்கநேரிட்டாலும், அதைப் பற்றி அவர் மனம் வருந்தார். ஆனல், தான் குறித்துச்செல்லும் அன்பைக் கண்டாலும் காணுவிட்டாலும், உயிருள்ளளவும் தம்மை விட்டு நீங்கவொட்டாமல், மிகவும் ஜாக்கிரதையாகப் போற்றிப் பாதுகாக்க வேண்டுமென்ற உறுதியுடன் கொண்டுவரப்பட்ட வேறு ஒரு பொருள், அவரிடத்தில் இருந்தது. அதாவது, அன்புருவும் ஞானத்திருவும் ஒருங்கெய்திய அருந்தவச் செல்வராகிய ஸ்ரீமத் தாயுமான சுவாமிகள் பாடியருளிய திருப்பாடல்கள் அடங்கிய, ஒரு சிறு புத்தகமே!

அப்புத்தகத்தை அன்பானந்தர் இப்பொழுது தம் சட்டைப் பையினின்று எடுத்தார். ஆனல், அதில் ஏதாவதொரு குறித்த பாட்டைப் படிக்கவேண்டு மென்ற கருத்தூன்றப் பெருமல், அப்பாக்களின் அச்சுருவத்தைப் பார்ப்பதிலேயே ஏதோ இன்பம் இருப்பது போல, அமைதியான இனிய சிந்தையோடு அப்புத்தகத்தின் ஏடுகளை மெல்லப் புரட்டினர். அப்பொழுது அவர் கண்களின் பார்வை, பின் வரும் பாடல்மீது செல்ல, அதைத் தமக்குள்தாமே மெல்லப் படித்தார். அப்பாடல் வருமாறு:

" அன்பின்வழியறியாத வென்னைத் தொடர்ந்தென்னை
யறியாத பக்குவத்தே
ஆசைப் பெருக்கைப்பெருக்கிக் கொடுத்து நான்
அற்றேன் அலந்தேன்என
என்புலம் மயங்கவே பித்தேற்றிவிட்டாய்
இரங்கி ஒருவழியாயினும்
இன்பவெளமாக வந்துள்ளங் களிக்கவே
எனைநீ கலந்ததுண்டோ
தன்பருவ மலருக்கு மணமுண்டு வண்டுண்டு
தண்முகை தனக்குமுண்டோ
தமியனேற் கிவ்வணந் திருவுளமிரங்காத
தன்மையாற் றனியிருந்து
ன்பமுறி னெங்கனே யழியாத நின்னன்பர்
சுகம்வந்து வாய்க்குமுறையாய்
ிர்க்குணமான பரதெய்வமே பரஞ்
சாதியே சுகவாரியே "

இப்பாட்டு முழுவதையும் பார்த்து முடிந்தவுடன், முதியவர் புத்தகத்தை மூடிக் கையிலேயே வைத்துக்கொண்டு, தம்மையும் அறியாமல் ஒரு பெருமூச்சுவிட்டார்; "ஆ, இப்பாட்டு என் நிலைக்கு எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது. தெய்வமே! அன்பின் வழியை அறிய முடியாத அவ்வளவு உயரிய செல்வ நிலையில் என்னை ஏற்றிவிட்டு, என் அறிவு மயங்கும்படி அன்புப்பித்தையும் எனக்கு ஏற்றிவிட்டாயே! அந்தோ! நான் தேடிய செல்வத்தை ஒதுக்கி வைத்து வந்துவிட்டதை நீ அறியாயா? அச்செல்வத்தில் ஒரு சிறிதும் எனக்கு வேண்டாம்—வேண்டாம்.

"வன்பொன்று நீங்காமன திறப்ப மாருப்பேர்
அன்பொன்றும் போதும்எனக் கையா பராபரமே!"

நிறைமதியின் கலைபோலும் நீணெருப்பி னொளிபோலும்
இறையளவும் வேறுபடா திணைந்தீச னுடனென்றி
அறைவடிவம் அவர்க்காகும் அன்பென்னும் அரும்பொருளே!
குறையிரந்து வேண்டுமென்றன் குறைமுடிக்க வாராயோ!

இன்பேதன் உருவான இறையளித்த இவ்வுலகம்
துன்பேயென் றுணர்ந்தன்றோ துறந்தார்கள் தூயோர்கள்?
என்போலிங் கிடருறுவார் எவரையும்நான் கண்டிலனே!
அன்பேநீ எனையணைத்தே ஆதரித்தால் ஆகாதோ!

தனக்கினியன் தானேயாம் தன்னலத்தான் மடமையென்னே!
மனக்கினிய அன்பே!உன் மாண்புணரார் மதியிலரே.
உனற்கரிய நேயம்அருள் உயர்காதல் உன்பெயரே.
எனக்கினியாய்! உன்னுருவம் யான்காண அருளாயோ!

கள்ளமென்ப தொருசிறிதும் கருதறியாத் தூயோர்கள்
உள்ளமதே உன்கோயில்; உனக்கவர்கள் உள்ளுருகி
வெள்ளமெனச் சொரியுமிரு விழிநீரே மஞ்சனநீர்.
எள்ளியுனை இகழ்வார்கள் இருகாற்கான் விலங்குகளே!

வல்லரக்கை நெருப்புருக்கும் வகையேபோல் அன்பே! நீ
கல்லிருக்கும் வன்மனத்துக் கயவரையும் சாருதியேல்

நல்லுருவாய் உருக்கியவர் நன்மனத்தைத் திருத்துவையே!
சொல்லரிய உன்பெருமை சொல்லிமகிழ் கின்றேனே!

என்னுயிர்நீ! என்னுடல்நீ! என்னறிவும் நீயாவாய்!
மன்னுயிர்க்கு வாழ்வளிக்கும் மாமருந்தே! எவ்வுயிரும்
தன்னுயிராக் காண்பார்க்குத் தனித்துணையே! மெய்யன்பே!
உன்னியுரைத் தடங்காத உன்பெருமை யாரறிவார்!

செழுமலர்த்தே வென்றலையில் சேர்த்தெழுது பிறப்புண்டேல்
எழுபிறப்பும் அதன் பின்னும் எனையகலா தணையென்று
பழுதற்ற மெய்யன்பே! பார்க்கரிய உன்னடியைத்
தொழுதுற்ற மனத்தினனுய்த் தோத்தரித்து வேண்டுவனல்.

என்று வாய்விட்டுச் சொல்லி, மிகவும் சோகமுற்றுத் தம் இடக் காத்தால் சிரத்தைத் தாங்கிக்கொண்டு, அன்பானந்தர் உள்ளம் ஒன்றிலும் பற்ருது கலக்கமுற்றிருந்தார். அம்மனச் சோர்வாலும் கலக்கத்தாலும் சிறிது நேரத்திற்கெல்லாம் அவருக்கு அயர்ந்த உறக்கம் வந்துவிட்டது. அவர் கையில் வைத்திருந்த புத்தகம் நழுவி அவர் மடி மீது வீழ்ந்துவிட்டது.

சுமார் அரைமணிநேரம் சென்ற பிறகு, அவ்வழியே பாரவண்டியொன்று மெதுவாய் அசைந்தாடிக்கொண்டு வந்தது. அதை ஒட்டி வந்த வண்டிக்காரன், வண்டியைச் செலுத்துவதில் சற்றும் நோக்கமில்லாதவனுய், தில்லாலப்பாட்டு, அருட்பா, காவடிச் சிந்து, தேவாரம் இவ்வாறு ஒரு வரைதுறையில்லாமல் வாய்க்கு வந்த பாட்டுகளை எல்லாம் ஒன்ருேடொன்று கலந்து, தன் மனதிற்கிசைந்த இராகத்திற் பாடிக்கொண்டு, வண்டிமீது சுகமாய் உட்கார்ந்திருந்தான். பாம்பாட்டி ஊதும் மகுடியின் ஓசையில் மயங்கி பாம்புகள் ஆடிக்கொண்டிருப்பது போல, அவன் பாட்டுகளின் இசையில் மயங்கிப்போலும், அவ்வண்டியிற் பூட்டப்பெற்ற மாடுகள் இரண்டும் தம்மையும் மறந்து, நேராய்ச் செல்லும் ரஸ்தாவின் வழியே, நெடுகச் சென்றுகொண்டிருந்தன. அன்பானந்தர் உறங்கும் ஆலமரத்தருகே அவ்வண்டி வந்தபோது, அவரைக் கண்ட அவ்வண்டிக்காரன் வண்டியையும் நிறுத்தித் தன் பாட்டையும் நிறுத்திவிட்டு, உறக்கத்திலிருக்கும் பெரியவரை உற்று

நோக்கினன். பிறகு, 'யாரோ, கிழவன்! பாவம்! ஏன் இப்படிக் களைத்துக்கிடக்கிறான்?' என்று தனக்குள் சொல்லிக்கொண்டு வண்டியைவிட்டுக் கீழிறங்கி அவரை நெருங்கினன்.

அன்பானந்தர் கோலம் பிச்சைக்காரக் கோலமாயிருந்தபோதிலும், அவருடைய அவயவங்கள் தேக உழைப்பினல் முரடுபடாமல் மென்மையாயிருப்பதை நோக்கி, 'நன்ருய் வாழ்ந்தவன் போலிருக்கிறது! என்ன கஷ்டகாலமோ இப்படி வரும்படியாய்விட்டது' என்று வண்டிக்காரன் நினைத்துக்கொண்டு அவரை மெல்லத் தட்டி "யாரையா, பெரியவரே! ஓய், பெரியவரே!" என்று கூவி எழுப்பினன்.

உடனே உத்தமப் பெரியவர் தூக்கங் கலைந்து திடுக்கென்று விழித்து நிமிர்ந்து உட்கார்ந்தார். யாரோ தம் எதிரில் இருப்பதாக அவருக்குத் தெரிந்ததாயினும், அது யாரென்று கவனிப்பதற்குமுன், தன் மடியிற்கிடந்த தாயுமானவர் பாடற்றிரட்டைப் பரபரப்புடன் எடுத்துத் தம் சட்டைப் பைக்குள் வைத்துக்கொண்டு பிறகு, எதிரேயிருந்த வண்டிக்காரனை உற்று நோக்கினர்.

"அதென்ன பொஸ்தகம் ஐயா, பையிலே வச்சியே?" என்று வினவினன் வண்டிக்காரன்.

"தாயுமானவர் பாடல்" என்று கூறிவிட்டு, அன்பானந்தர், அவன் யார்? இங்கே எப்படி வந்தான்? என்னை ஏன் எழுப்பினன்? என்ற இதுபோன்ற ஐயங்களோடு அவனை உற்று நோக்கியபடி இருந்தார்.

வண்டிக்காரன் அவர் தன்னைப் பார்ப்பதைக் கவனியாது, அல்லது கவனியாதவன் போல, அவர் தம் சட்டைப் பைக்குள் வைத்த புத்தகத்தின் மேலேயே கண்ணேக்கமுடையவனுய், "தாயுமான சாமி பாட்டா! அந்தப் பாட்டெல்லாம் நண்ணயிருக்குமே! எனக்குக்கூட தாயுமானசாமி பாட்டு பத்துப் பதினஞ்சு தெரியும். எல்லாம் பெரியவங்க சொல்லக் கேட்டது. எனக்குமாத்ரம் படிக்க தெரிஞ்சுச்சோ

வண்டி வண்டியா பாடுவேனே. எங்கே ஐயா, அந்தப் பொஸ்தகத்திலே ஒரு பாட்டுச் சொல்லு, பாக்கலாம்'' என்றான்.

'இதென்ன இது! இவனை நாம் முன் பின் அறியோம். நம்மிடத்தில் மிகவும் நெருங்கிப் பழகினவனைப்போல, ஒரு பாட்டுப் பாடச் சொல்கிறானே' என்று அன்பானந்தர் தமக்குள் எண்ணிக் கொண்டுஅவனை நோக்கி, 'நான், என்ன ஐயா, தள்ளாத கிழவன். என்னைப் பாடச் சொல்கிறாயே. நீ வயது புருஷன். நீ பாடினால் கேட்க இன்பமாயிருக்கும். உனக்குத் தெரிந்த தாயுமானவர் பாடல் ஒன்றை நீதான் சொல் ; நான் கேட்கிறேன்.'' என்றார்.

"அதுக்கென்னய்யா ? இதோ சொல்றேன்'' என்று கூறி வண்டிக்காரன் தரைமீது நன்றாய் உட்கார்ந்து கொண்டு, தன் கைத்தாளத்துக்கு இயையத் தனக்குப் பழக்கமான ஒரு இராகத்தில்,

" சங்கர சங்கர சம்பு-சிவ
சங்கர சங்கர சங்கர சம்பு.
" கண்டார் நகைப்புயிர் வாழ்க்கை இரு
கண்காண நீங்கவுங் கண்டோந் துயில்தான்
கொண்டாற்போற் போனாலும் போகும்
குணமேது நலமேது கூறாய் நீ தோழி?''

என்ற பாடலைப் பாடினான்.

இதைக் கேட்டபொழுது அன்பானந்தர் தமக்குள் "ஆம், தூங்குவதுபோற் போனாலும் போய்விடும் இவ்வுயிர்வாழ்க்கை! இதில் குணமேது? நலமேது?—எப்பொழுது?—இவ்வநித்தியமான உயிர் வாழ்க்கையினால், நித்தியமான அன்புவாழ்க்கை ஏற்படாதபொழுது'' என்று சிந்தித்துக்கொண்டிருந்தார்.

வண்டிக்காரன், பாட்டை முடித்த பிறகு அன்பானந்தரை நோக்கி, "அது கெடக்கு, நீ யார் ஐயா? நடுவயிலே இபடி களைச்சுப் படுத்திருக்கிரியே ஏன் ?'' என்று கேட்டான்.

அன்பானந்தரும் தம் சிந்தனையை நிறுத்தி வண்டிக்காரனை நோக்கி, "ஐயா, நான் ஒரு பரதேசி. விஜயமங்கலத்தில் என் நண்பர் ஒருவர் இருக்கிறார். அவரைப் பார்க்கப் போகிறேன்'' என்றார்.

வண்டிக்காரன்—"விஜயமங்கலத்திலியா? அடேயப்பா! அது கிட்டத்தட்ட முப்பது கல்லு இருக்தே ஐயா! அவ்வளவு தொலே நடந்தா போவே?"

அன்பானந்தர்—"ஆம், ஐயா. வேறென்ன செய்வது?"

வண்டிக்காரன்—"என்ன, ஐயா! பைத்தியக்கார ஆசாமியா இருக்றே! ஆறணு காசு கொடுத்து ரயில்லே போயிடலாம். இதுக்கு நடக்கணும்கிறியே. முப்பது கல்லுண்ணு என்ணு பிரமாதம்! என்னெப் போல ஆசாமி விளேயாட்டா பொயிட்லாம்! ஆனு நீ குடுகுடு கிழவனுயிருக்றே. ஒன்னுலே நாலு கல்லு நடக்க முடியாது போலிருக்குதே. நீ என்னமா ஐயா நடந்து போவே? இப்டி எங்கேயிருந்து புறப்பட்டு வர்ரே?"

அன்பானந்தர்—"சேலத்திலிருந்து வருகிறேன்."

வண்டிக்காரன்—"அம்மா! சேலத்துக்கும் விசயமங்கல்துக்கும் அம்பது கல்லுக்கு மேலேயிருக்தே. அரைரூபா அரேயரைக்கா ரூபா ரயில்சார்சு குடுத்து ரயில்லே போரத்தை வுட்டு, ஏன் ஐயா இப்படி நடக்ணும்?"

அன்பானந்தர்—"ஐயா, அந்த அரை ரூபா, அரையே யரைக் கால் ரூபா இருந்தால் பத்துநாள் சாப்பாட்டிற்காகுமே. அதை ரயில்காரனுக்குக் கொடுத்துவிட்டு என்ன செய்கிறது. பசியைத் தணித்துக்கொள்ள, என்னேப்போல வேலேசெய்து சம்பாதிக்க முடியாதவர்கள், பிச்சையெடுக்கலாம். அது அவ்வளவு குற்றமல்ல. ரயில் சார்ஜுக்குக் கூடவா பிச்சை எடுப்பது?"

வண்டிக்காரன்—"அது நெசந்தான். 'ஏற்பதிகள்ச்சி' இன்னு ஔவைகூட சொல்லியிருக்கிரு. ஆனு, இந்தக் காலத்லே மானத்தை யார் ஐயா பாக்ரு? எனக்குத் தெரியும், சேலத்லே ஒரு பாப்பான் இருக்கிருன்; நல்ல தடியன். எட்டாள் வேலெ செய்வான். அவனுக்குப் பிச்சையெடுக்கிறது தான் தொயில். பிச்சையெடுத்து சேத்த சொத்லெ, சொந்த கல்லூடு ஒண்ணு கட்டிட்டான். அவனுக்குக் கூத்தியா ரெண்டுபேரு, பொண்டாட்டி ஒருத்தி யிருக்கிரு. ஆனு

னும், இந்த சாதி கெட்டாப்லே, வேறே எந்த சாதியும் கெடலே. அவுங்களுக்கு மானம், வெக்கம் ஒண்ணுமில்லே. பணம் வர்ரதாயிருந்தா என்ன கேவலத் தொழில்னாலும் செய்வாங்க. அது கெடக்கு. நீ எழிந்திரி ஐயா. என் வண்டி ஈரோடு வரைக்கும் போவுது. அதுவரைக்கும் வண்டிலே எறிவா. அப்பறம்ணு நடந்து போவலாம்.''

அன்பானந்தர்—''ஐயா, நீர் செய்யும் உதவிக்கு மிகவும் வந்தனம். என்மேல் இவ்வளவு இரக்கம் வைத்துத் தூங்கிய என்னை எழுப்பி வண்டியிலேற்றிக்கொண்டு போவதாகச் சொல்லும், நீர் யார்? இருப்பது எந்த ஊர்? நான் என் இதையெல்லாம் கேட்கிறேனென்று கோபித்துக்கொள்ளவேண்டாம். கஷ்டகாலத்தில் உதவிசெய்தவர்களை என்னாளும் மறக்கக்கூடாது. அதற்காக உம்முடைய ஊர், பேர் என்னவென்று கேட்கிறேன்.

வண்டிக்காரன்—''நல்லா சொன்னே. ஊருபேரு என்னுன்னுக் கேட்டா, அதுக்குக்கூடவா, கொவச்சுக்குவாங்க. நான் இருக்கிறது தொட்டிப்பாளையம். விசயமங்கலத்துக்குக் கிட்டெதான். அதுக்கு மதுக்கும் பன்னெண்டு கல்லு. என் பேரு முத்தையன். சேலத்லேயிருந்து திருப்பூர் வரைக்கும், வண்டிக்கார-முத்தையன் என்றால் எல்லார்க்குந் தெரியும். நேத்து சேலத்துக்கு சாமான் எத்திக்கிட்டு போயிட்டு இப்பதான் திரும்பி வர்ரேன். ஈரோடுகிட்ட பவானின்னு ஒரு ஊர் இருக்தே, அங்கே நாளைக்கு வியாயக்கியமை சந்தை கூடுது. அங்கேபோனு எதாவது கிராக்கி ஆப்புடும், அதைப் பாத்துகிட்டுப் போவலாம்ணு போரேன்''

அன்பானந்தர்—''அப்படியா, சந்தோஷம்'' என்று சொல்லி அவனோடு கூடச்சென்று ரஸ்தாவில் நின்ற வண்டியில் ஏறிக்கொண்டார். முத்தையனும் வண்டியிலேறிக்கொண்டு சிறிது விரைவாகவே வண்டியை ஓட்டத் தொடங்கினான்.

அன்பானந்தர், வண்டி செல்ல ஆரம்பித்த பிறகு முத்தையனை நோக்கி, ''ஐயா, இது என்ன ஊர்?'' என்று வினவினார்.

''இது அணங்கூர் ஐயா. இங்கிர்ந்து ஈரோட்டுக்கு மூனு கல்லுதான் இருக்கும். இதோ ஒரு நாயிக்குள்ளே நாம் அங்கே போயிட்

லாம். அங்கே, எனக்குத் தெரிஞ்ச சாப்பாட்டுக்கடே ஒண்ணு இருக்து. அதிலே ராத்திரி தங்கியிருக்லாம். பொயுது விடிய நாலு நாயிக் கெல்லாம் நான் எயுந்து சந்தைக்குப் போயிடுவேன். அப்றம் நீ உனக் கிஷ்டம்போல் போகலாம். சாப்பாட்டுக் கடயிலேயே நாளைப் பவுல் தங்கியிருந்தினு, சாயந்திரமா நான் திரும்பிவருவேன். அப்போ, உன்னையும் வண்டியிலேத்திக்கினு எங்கூருவரைக்கும் கொண்டு போய்விட்டுடுவேன்" என்றான்.

அன்பானந்தர் அவனுக்குள்ள இரக்கத்தையும், பரோபகார சிந்தையையும் கண்டு, மிகவும் அதிசயமும் ஆனந்தமும் கொண்டு "ஐயா, கடவுள் உமக்கு ஒரு குறைவுமில்லாமல் வைத்திருக்க வேண்டும். என் மேல் இவ்வளவு இரக்கமுடைய உமக்கு நான் என்ன செய்யப்போகிறேன். ஈரோடு வரைக்கும் என்னைக்கொண்டுபோய் விடுவதே போதுமானது. அங்கே நீர் வரும்வரையில் தங்குவதற்கு எனக்கு இஷ்டமில்லை. அப்பால் நான் நடந்துபோய் விடுகிறேன்" என்றார்.

"ஆனுக்கா, சரி. இதென்ன ஒதவி ஐயா நான் செய்துட்டது! பிரமாதமா சொல்றியே. வெறும் வண்டியாய்ப் போறத்லே ஒன்னே எத்திக்கினு போனு இது ஒரு ஒதவியா? என்னமோ, இன்னிக்கி இருக்கிறவனே நாளைக்குக் காணோம். இதில் யார் என்னத்தை வாரிக் கட்டிக்கினு போப்போறாங்கோ. ஏதோ ஏழை எளியவங்களுக்கு நம்மாலான ஒதவியை நாம் செய்தோம்னு ஆண்டவென் நமக்கு ஒதவி செய்வான்" என்றான் வண்டிக்காரன்.

இதைக்கேட்ட அன்பானந்தர் 'ஆ, இந்த வண்டிக்காரனுக்குள்ள உணர்ச்சியும் உபகார சிந்தையும் கூடத் தம்மை 'நாகரீகர்கள்' என்று பெருமை பாராட்டிக் கொள்ளும் பட்டணத்து மாக்களுக்கில்லையே' என்று தமக்குள் எண்ணிக்கொண்டு வண்டிக்காரனை நோக்கி, "ஐயா, ஆண்டவன் உமக்கு உதவி செய்வாரென்பதில் தடையென்ன? இவ்வளவு பரோபகார சிந்தையுள்ள உமக்கு ஒரு குறைவுண்டானால், அப்புறம் ஆண்டவன் ஒருவன் இருக்கிறானென்று கூடச் சொல்லக் கூடாது" என்றார்.

உடனே முத்தையன் சிறிது ஆச்சரியத்தோடு அன்பானந்தரைத் திரும்பிப் பார்த்து, "ஐயா, அப்டிச் சொல்லாதே. ஆண்டவென் இல்

லாமலா பொழுது விடியுது, பொழுது போவுது? நமக்கு ஒரு கொறை வந்துட்டா, அத்னாலே ஆண்டெவன் இல்லேன்னு சொல்றது? அவன் திருவிளாட்டே நாமென்ன கண்டோஞ்சாமி! ஒண்ணு வாணும், இந்தக் கொடுமையே கேளு. எனக்கு அறவுதெருஞ்சு நானு ஒரு பிராணிக்கு ஒரு கெடுதல் இது வெரைக்கும் பண்லே. சாமி கண்பாத்தார். தேடியலேஞ்சாலும் ஆப்டாத, அவ்ளோ குணசாலியான ஒரு பொண்ணு, எனக்குப் பெண்டாட்டியா வாச்சா. ஆனா—உள்ளத்தெ மறைப்பானே?—அவோ தாலிகட்ன பொண்சாதி அல்ல. பதினாறு வயசு பொண்ணு இருந்தப்போ நான் மொத மொதா அவளெக் கண்டேன். கண்டதுதான், என்னெ அறியாமே எனக்கு அவோ மேலியே பிரியம் உண்டாயிட்டுது. அவளுக்கும் அந்தமாதிரியே எம்மேலே ஒரு பிரியம் உண்டாச்சுபோலிருக்து. அடிக்கடி நாங்க ரெண்டுபேரும் ஒருத்தர் ஒருத்தரைக்கண்டு பேசுறது. ஒரு நாளு நான் கொஞ்சோ தெயிரியங்கொண்டு 'என்னெ நீ கண்ணாலம் பண்ணிக்றியா' இன்னுகேட்டேன். அவோ அதுக்குசம்மதிச்சா. ஆனா அவோ ஆயி அப்பேன் அவோ இஸ்டத்துக்குச் சம்மதிக்லே போலிருக்து. கொஞ்ச நாளெக்குளும், அவோ தன் வூட்டே உட்டுட்டு என் வூட்டுக்கு ஓடியாந்துட்டா. 'என் இப்டிவந்தே?' இன்னு நான் கேட்டதுக்கு 'நானு வூட்லிருந்தா என் ஆயி அப்பென் உன்னம் யாருக்னாலும் என்னெக் கட்டிக்குடுத்துடுவாங்க. ஒனக்குக் குடுக்கமாட்டாங்க. அப்றம் நான் ஒன்னோடெ பேசமுடியாது. அதான் ஓடியாந்துட்டேன். கண்ணாலம் என்னாத்துக்கு? கண்ணாலமான பொண்டாட்டி புருசனாட்டமே நாமும் நீயும் இருந்துடுவோமே' இன்னா. அவோ சொன்னது எம் புத்திக்கும் சரியாய்ப் பட்டுது. மாட்டுக்குத் தும்பு கட்றாப்லே வெறுந் தாலிக்கயித்தே பொண்டாட்டி கழுத்திலே கட்றத்திலேயும், அனாசாரம் புடிச்ச பாப்பானுக்குக் காசைக்குடுத்து கன்னாரே பின்னாரே யென்று வாயிலெ வந்தெத்தே ஒளறச் சொல்றத்திலேயும் என்னா இருக்து? கட்றவனுக்கும் கட்டிக்கிறவளுக்கும் மனசு ஒண்ணாயிட்டா அதான் பெருசுன்னு எனக்குத் தோணுச்சு. ஒடனே அவள் சொன்னபடி, ஊரறிய நாங்கள் கண்ணாலம் செய்துக்காமே, எங்களுக்குள்ளே ஒரு சத்தியம் செய்துக்கிட்டு புருஷனும் பெண்சாதியுமா இருந்து வந்தோம். ஊராருங்கோ கண்டபடிக்கு பேசு

ளுங்கோ. ஆனு நாங்க அதெல்லாம் லச்சியம் செய்லே. நாளடவில் எல்லாம் ஒயுங்குக்கு வந்துட்டுது. நானும் அந்தப் பெண்ணுமா, ஒரு மனக்கொறையும் இல்லாமல் காலந்தள்ளேம். அஞ்சாறு வருஷங் கழிச்சு எங்களுக்கு ஒரு ஆம்பிளெப் பிள்ளெ பொறந்தது. தெய்வங் கொடுத்த பாக்கியம்னு நாங்க அதை அருமையா வளத்து வந்தோம். அடுத்த ஒரு வருஷத்துக்கெலாம் என் பொண்சாதி செத்துப்பூட்டா. அவோ செத்ததும் ஆசையெலாம் அவமேலே வச்சிர்ந்த எம் மனசு என்ன பாடு பட்டிருக்கும்ணு நீயே ஒசிச்சுக்கோ. இன்னமு அந்தத் துக்கம் எனக்கு ஆறலே. அவோ செத்து வருஷம் அஞ்சாவுது. இந்தக் கொடுமையே என்னுண்ணு சொல்றது. ஆசையாயிருந்த ரெண்டு பேர்லே ஒருத்தரைப் பிரிச்சு ஒருத்தரெவச்சது தெய்வந்தானே. ஆனு, அப்படிச் செய்துட்டுதே என்னு நாம்போ தெய்வத்தை நோவ்லாமா? தெய்வோம் இல்லேன்னுதான் சொல்லலாமா? நம்ப அதிஷ்டம் அவ்ளோதான் என்னு இருக்கவேண்டியதுதான்" என்ருன்.

இதைக் கேட்ட அன்பானந்தர் மிகவும் பரிதாபத்துடன் "பாவம்! உம்மைப்போன்றவர்களுக்கா, தெய்வம் இவ்விதமான கஷ்டங்களைக் கொடுக்கவேண்டும்! விதி யாரை விட்டது? நல்லது, உமக்குப் பிறந்த குழந்தையை யார் இப்பொழுது பாதுகாத்து வருவது?" என்று வினவினுர்.

"கொழந்தையே நான்தான் வளத்துவர்ரேன். அவுனுக்கு இப்போ ஆறு வயசாவுது. ரொம்ப சுட்டியாயிருக்ருன். அவோமேலே இருந்த ஆசையெல்லாம், இப்போ, அவோ வயத்லே பொறந்த அவன்மேலே வச்சிருக்கேன். அவனுலேதான் நான் இந்த உயிரை வச்சிகிட்டிருக்கேன்" என்ருன் முத்தையன்.

* * *

இவ்வாறு பேசிக்கொண்டே அவர்கள், இரவு எட்டுமெணி சுமாருக்கு ஈரோடு போய்ச் சேர்ந்தார்கள். முத்தையன், தனக்குத் தெரிந்ததென்று அன்பானந்தருக்குச் சொல்லிய சாப்பாட்டுக் கடையில் வண்டியை நிறுத்தித் தான் கீழிறங்கி, அன்பானந்தரையும் இறங்கச் செய்தான். பிறகு, இருவருமாக சாப்பாட்டுக் கடைக்குள் நுழைந்தார்கள்.

சாப்பாட்டுக் கடைக்காரன் வண்டிக்காரனைக் கண்டதும் முக மலர்ந்து, "ஓ, முத்தையனு! வா, வா. நாளைக்கு சந்தையாச்சே, அத ஞல் தான் இப்படித் திரும்பினையா? குழந்தை எப்படியிருக்கிருன்?" என்று க்ஷேமம் விசாரித்தான்.

முத்தையன் "கொழுந்தே க்ஷேமந்தான்" என்று சொல்லிவிட்டு "சாப்பாடு தயாராயிருக்குதா. ரெண்டு ஆசாமிக்கு இலைபோட முடியுமா?" என்று சாப்பாட்டுக் கடைக்காரனைக்கேட்டான்.

அவன் "முடியும்; இதோ போட்டாயிற்று. உட்காருங்கள். யார் அது உன்னோடு வந்திருப்பவர்?" என்ருன்.

"கூடவந்திருப்பது நமக்குவேண்டிய ஆசாமிதான். இலை போட் டாகட்டும்" என்று சொல்லிவிட்டு முத்தையன் ஒரு செம்பில் வெந்நீ ரெடுத்து அன்பானந்தருக்குக் கொடுத்துக் கைகால் சுத்திசெய்து கொள்ளச்செய்து, தானும் கைகால் சுத்தி செய்துகொண்டான். பின் இருவருமாய்ச் சாப்பிடச் சென்ருர்கள்.

சாப்பாடு முடிந்த பிறகு சிறிதுநேரம், அன்பானந்தரும் முத்தை யனும் பல பல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அன்பானந்தர் அதிகமாகப் பேசவில்லை. ஏனெனில் எங்கே தம் வாய்தவறி, தம் உண்மை நிலையைப் புலப்படுத்தத்தக்க சொற்கள் எவையேனும் வந்து விடுமோ என்று அஞ்சினுர். இரவு மணி பத்தா யிற்று. சாப்பாட்டுக் கடைக்காரன் முத்தையனை நோக்கி, "என், அப்பா, முத்தையா! மணி பத்துக்குமேல் ஆகிறதே! படுத்துக் கொள்கிறதுதானே?" என்ருன்.

அப்பொழுது, முத்தையன் இடது பாதத்தின்மேல் ஒரு பல்லி விழுந்து ஓடியது. "இதென்னையா, கால்லே பல்லி வியுது" என் ருன் முத்தையன்.

சாப்பாட்டுக்கடைக்காரன் "எந்தக் காலில்?" என்று வினவ. "இந்தக் காலில்" என்று முத்தையன்தன் இடதுகாலைக் காட்டினுன்.

"இடதுக்காலில் பல்லி விழுந்தால் 'துக்கம்' என்பார்கள். அது கிடக்கிறது, ஈசன் இருக்கிறான். நீபோய் படுத்துக்கொள்" என்றான் சாப்பாட்டுக் கடைக்காரன்.

முத்தையன் சிறிது முகம் வாடி "என்னமோ, எது வந்தாலும் அனுபவிச்சு தானே யாகணும். கண்ணுக்குக் கண்ணான என் பொண் சாதியைப் பறிகொடுத்தேன். அத்தோடவா ஒரு துக்கம் எனக்கு இனிமேலே வரப்போவுது?" என்றான்.

"விதி யாரைவிட்டது? அதை நினைத்து நீ துக்கப்படாதே. என்னமோ போனவள் ஒரு குழந்தையை வைத்துவிட்டுப் போனாளே. அதன் முகத்தைப் பார்த்து ஆறி இரு" என்றான் சாப்பாட்டுக் கடைக் காரன்.

"அது மெய்தான். அந்தக் கொழந்தையால்தான் நான் என் உயிரெ வைச்சிருக்றேன். என் ஆசையெல்லாம் இப்போ அதும் மேல் தான்."

"அப்படி அதன்மேல் அதிக ஆசைவையாதே, அப்பா. ஆசை வைத்தால்தான் தெய்வங்கொண்டுபோய் விடுகிறதே!"

முத்தையன் உடல் நடுங்கிற்று. அவன் திடுக்கிட்டு சாப்பாட் டுக் கடைக்காரனை நோக்கி "ஐயா, அந்தவார்த்தெ சொல்லவாணும், அதைக் கேட்டதும் எம்மனம் கலங்குது" என்றான்.

அப்பொழுது அன்பானந்தர் அவனை நோக்கி, "ஐயா, யோசி யாமற் சொல்லிவிட்டார். அதை நினைத்து நீர் வருந்தாதீர். கடவுள் உமக்கு யாதும் குறைசெய்யமாட்டார்" என்றார்.

"ஆம், ஐயா. யோசியாமற் சொல்லி விட்டேன்" என்றான் சாப் பாட்டுக்கடைக்காரன்.

"அது சர்தான். அதைப்பத்தி எனக்கு ஒண்ணும் வருத்த மில்லே. பல்லி விழுந்ததும் அதக்குத் தோதா நீ சொன்னதும் மனசுக்குக் கொஞ்சம் கஷ்டங்கொடுத்திச்சு. வேறொண்ணு மில்லே நேரமாச்சி படுத்துக்கலாம்" என்று கூறி எழுந்தான் முத்தையன்.

"நல்லது செய். நான் கதவடைத்து விடட்டுமோ?" என்று கேட்டான் சாப்பாட்டுக் கடைக்காரன்.

"அடைத்துடு" என்றான் முத்தையன். சாப்பாட்டுக் கடைக் காரன் கதவடைத்துவிட்டுப் போய்விட்டான். கடையின் புறந்திண் ணையில், படுத்துக் கொள்வோர்க்கு அனுகூலமாகச் சுவரோரமாய் நீண்ட தலையணைபோற் கல்லினால் கட்டப்பட்டிருந்தது. முத்தை யன் தன் மேலாடையைக் கீழ்விரித்து அக் கற்றலையணையில் தலை வைத்துப் படுத்துக்கொண்டு அன்பானந்தரை நோக்கி "ஐயா, நீயும் இப்டிப் படுத்து நல்லாத் தூங்கு. காலம்ப்ர களைப்பில்லாமெ பூடும். நானு காலங்காத்தாலே பூடுவேன். அதுக்கோசம் இப்பொவே சொல்லிக்கிறேன். சாயந்திரமாய் எங்கூருக்குத் திரும்புவேன். அப் போ உன்னை வழியிலே கண்டா பேசிக்கொள்ளலாம். இல்லாட்டா பாத்துக்குவோம்" என்றான்.

"ஐயா, உம்மைவிட்டுப் பிரிந்து போவதற்கு எனக்கு மனமில்லை. ஆனால் விஜயமங்கலம் போய் என் நண்பனைப் பார்க்கவேண்டுமென்ற ஆவல் அதிகமாயிருப்பதால், நாளைப்பகல் ஒரு பொழுது கூட தாமதிப் பது கஷ்டமாய்த் தோற்றுகிறது" என்று கூறிக் கொண்டு அன்பா னந்தர் தாமும் அவனுக்குச் சிறிது தூரத்தே அத்திண்ணையில் தம் மேற் சட்டையைக் கழற்றிக் கீழேவிரித்து அக் கல்லணையில் தலை வைத்துப் படுத்தார்.

முத்தையன் அவர்புறமாகத் திரும்பிப் படுத்துக்கொண்டு, "அதைப்பத்தி என்னையா? நீ போறபடி போ. உயிரிருந்தா என்னைக் க்கும் பாத்துக்லாம். மணியாச்சு, தூங்கு" என்று கூறித் தானும் தூங்கப்போகிறவன்போல் கண்ணை மூடிக்கொண்டான். அன்பா னந்தரும் கண்மூடினார். ஆனால் அவருக்கு உறக்கம் வரவில்லை. ஏனெ னில், பல வருஷங்களாகத் தாம் அனுபவித்துவந்த செல்வ வாழ்க் கையில் காணாத நலங்களை, இரண்டொரு நாட்களாக அனுபவித்து வரும் வறிய வாழ்க்கையிற் கண்டமையால், அவைகளைப் பற்றிய சிந்தனை அவருக்கு மிகுந்திருந்தது. மேலும், தமக்கு உரிய ராஜபோகத்தைத் துறந்து, கொடிய வனவாசத்தை மேற்கொண்ட

ஸ்ரீராமபிரான் நிலைமைக்கு இரங்கி, "கல்லணைமேற் கண்துயிலக் கற்றனையோ காகுத்தா ! கரிய கோவே!" என்று ஆன்றோர் கூறிய வாசகம் நம் அன்பானந்தருக்கும் பொருந்தும். தம்வாழ்க்கையிற்பெரும் பகுதியைத் தம் அளவிறந்த செல்வத்தால் ஏற்படக்கூடிய சகல சௌகரியங்களுடனும் கழித்த அவர், ஒரு சாதாரண மனிதனைப் போல, கற்றரையில், கல்லணையே தலையணையாகக்கொண்டு படுத்து உறங்குவது எப்படி முடியும்? ஆதலால் அவருக்கு நெடுநேரம் வரையில் உறக்கம் வரவில்லை.

மணி பன்னிரண்டாயிற்று. வண்டிக்காரன் படுக்கையைவிட்டு எழுந்து மெல்ல அன்பானந்தரை நெருங்கினான். அன்பானந்தர் விழித்துக்கொண்டேயிருந்தாராதலால், அவன் வருவதறிந்து சிறிது கண்விழித்துப் பார்த்தார். வருவது வண்டிக்காரனே யென்பது நிச்சயமாய்த் தெரிந்துகொண்டு, 'ஏன் இந்நேரத்தில் இவன் அரவப்படாமல் நம்மண்டை வருகிறான். எல்லாவற்றிற்கும் தூங்குவது போலவே இருப்போம். என்ன செய்கிறான் பார்க்கலாம்' என்றெண்ணிக் கண்ணை மூடிக்கொண்டு, அயர்ந்து நித்திரை செய்கிறவரைப் போல் பாசாங்கு செய்திருந்தார். ஒரு விநாடியில் அவர் மனத்தில் பற்பல எண்ணங்கள் தோன்றின.

"என்னவிருந்தாலும் வண்டிக்காரன் வண்டிக்காரன்தான். தெரியாமல் இவனை நம்பிவிட்டோமே. நோட்டுகளைச் சட்டையில் வைத்துத் தைத்திருப்பது அவனுக்குத் தெரிந்திருக்குமோ என்னமோ? அதைத் திருடிக்கொண்டுபோவதற்காகத்தான் நம்மை இந்த இடத்திற்குக் கொண்டுவந்தான் போலிருக்கிறது. இல்லாவிட்டால் நம்மைத் தன் வண்டியில் ஏற்றிக் கொண்டுவர இவனுக்கென்ன அவ்வளவு கவலை? நாம் கொண்டிருக்கும் தரித்திரக் கோலம், வேஷமே யொழிய உண்மையல்ல வென்பதை எப்படியோ தெரிந்துகொண்டிருக்கிறான் போலிருக்கிறது" என்று இப்படிப் பற்பல சந்தேகங்களோடு அன்பானந்தர் பொய்த்துயில் கொண்டிருக்கும்போது, முத்தையன் அவரைநெருங்கி, அவர் கீழே விரித்துப் படுத்திருந்த சட்டையின்கீழ், தான் கையில் கொண்டுவந்திருந்த ஏதோ ஒன்றை வைத்துவிட்டு,

சிறிதும் அரவப்படாமல் திரும்பவும் தன் படுக்கையில் வந்து படுத்துக்கொண்டான்.

அன்பானந்தருக்கு ஒரு பயம் நீங்கியது. தாம் சட்டைக்குள் வைத்திருந்த நோட்டுகளை அவன் தொடவில்லை. ஆதலால், நோட்டுள்ள சங்கதி அவனுக்குத் தெரிந்திராது. ஆனால் அவன் அப்படித் திருட்டுத்தனமாய்த் தாம் தூங்கும் சமயம்பார்த்து நடுராத்திரியில் தம் மருகில் என் வந்தான்? தம் சட்டையின் கீழ் ஏதோ ஒன்றைவைத்தானே, அது என்ன? இந்தச் சந்தேகங்கள் அன்பானந்தருக்கு உண்டானதால் எழுந்துசட்டையின் கீழ்வைத்த பொருள் என்னவென்று பார்க்கலாமா என்று எண்ணினர். முத்தையன் விழித்துக்கொண்டிருப்பதால், இப்பொழுது ஒன்றும் செய்யக்கூடாது என்று பேசாமலிருந்துவிட்டார்.

சற்று நேரத்திற்கெல்லாம் அவருக்கு உண்மையிலேயே உறக்கம் வந்துவிட்டது. முத்தையனும் உறங்கி விட்டான். இராப்பொழுது அமைதியாய்ச் சென்றுகொண்டிருந்தது. பகற்பொழுது வருங் காலம் நெருங்கி விட்டதென்பதை அறிவிப்பனபோல் சில கோழிகள் கூவின. "இறைவனே, சென்றநாள் வரை எம்மைக் காத்துவந்தாய். வருநாளும் எம்மைக் கா" என்று கடவுளைப் பிரார்த்திப்பனபோலக் காக்கைகள் 'கா கா' என்று கரைந்தன.

வைகறைபொழுது விட்டது; ஆனால் அன்பானந்தர் எழவில்லை. களைப்பின் மிகுதியினாலும், இரவில் நெடுநேரம், விழித்திருந்தபடியினாலும் அவர் மிகவும் அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்தார்.

சூரியன் உதித்தான். அவன் கிரணங்களால் உண்டான இளவெயில், அன்பானந்தர் முகத்தில் நன்றாய்ப்பட்டது. அவர் உறக்கந் தெளிந்துஎழுந்தார். எழுந்ததும் முத்தையன் படுத்திருந்த இடத்தைப் பார்த்தார். அவன் அங்கில்லை. வாயிலிற்கிடந்த அவன் வண்டியும் காணப்படவில்லை. 'சரிதான், நம்மிடத்திற் கூறியதுபோல அதிகாலையிலே எழுந்து போய்விட்டான் போலிருக்கிறது. நாம் என்ன இவ்வளவு நேரம் தூங்கிவிட்டோமே' என்று தமக்குள் எண்ணிக்கொண்டு, தாம்

கீழே விரித்துப் படுத்திருந்த சட்டையை எடுத்தார். அதன் கீழே ஓர் அரைரூபா பணம் இருந்தது.

அதைக் காணவும், முத்தையன் அர்த்த ராத்திரியில் திருட்டுத் தனமாய்த் தம்மிடம் வந்தது எதற்காக என்று அன்பானந்தருக்குத் தெளிவாய்ப் புலப்பட்டது. ரயிலேறிச் செல்வதற்குப் போதுமான பணம் இல்லாமையால், நண்பனைக்காண நடந்து போகும் ஓர் ஏழைக்கு இரங்கி, வயோதிக காலத்தில் நெடுந்தூரம் நடந்து செல்ல முடியாதாகையால், ரயிலேறிச் செல்வதற்கு உபயோகமாகட்டும் என்று முத்தையன் ஓர் அரைரூபா பணத்தைத் தமக்கு தர்மமாகக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறான் என்பதையும், அதை நேரில் தம்மிடம் கொடுத்தால், பிச்சையெடுத்தாவது சுகமாய் ரயிலேறிப் போவதற்கு இசையாது, மிகத் தள்ளாத காலத்தில் நெடுந்தூரம் கஷ்டப்பட்டு நடந்து செல்லும் ஒரு மானி, இலவசமாய் ஒருவர் கொடுக்கும் பொருளை மறுத்தாலும் மறுத்து விடுவான் என்று கருதியே, அவன் திருட்டுத்தனமாய் அப்பொருளைத் தம்மிடம் வைத்துவிட்டுப் போயிருக்கிறான் என்பதையும் அவர் நன்றாய் அறிந்துகொண்டார்.

இவ்விஷயங்களை அறிந்ததும் அவருக்குத் தம்மையும் அறியாமல் ஓர் ஆனந்தம் உண்டாயிற்று. “ஆ, என்ன அன்பு! என்ன அன்பு! நாம் அவனை வண்டிக்காரன் என்று கேவலமாய் மதித்து, நாம் மறைத்து வைத்திருக்கும் நோட்டுகளை அவன் திருட வருவதாகக் கருதி விட்டோமே! என்ன அபராதம் செய்துவிட்டோம். செல்வர் புத்தியால் வறியாரை மதித்த இப்பாவத்தை, ஓ, கடவுளே! நீர்தாம் மன்னிக்க வேண்டும்” என்று இவ்வாறு தமக்குள் எண்ணமுற்று, அவர் அந்த அரைரூபாயை எடுத்துக்கொண்டு சத்திரக் காரனிடம் சென்று, “ஐயா, நான் போய்வருகிறேன். இராத்திரி என்னருகே படுத்திருந்த வண்டிக்காரர் ஓர் அரைரூபாயைத் தவறிக் கீழே போட்டுவிட்டாற்போ லிருக்கிறது. அது என்னண்டை வந்து கிடந்தது. இதோ இருக்கிறது. அவர் வந்தால் கொடுத்து விடுங்கள்” என்று கூறித் தம் கையில் வைத்திருந்த பணத்தை அவனிடம் நீட்டினர்.

சத்திரக்காரன் அதை வாங்காமல் சிரித்துக்கொண்டு "ஐயா, அதை நீயே வைத்துக்கொள். முத்தையன் தவறி அதைக் கீழே விட்டுவிடவில்லை. வேண்டுமென்றுதான் உன் சட்டையின்கீழ் வைத்தான். இந்தத் தள்ளாத காலத்தில் நீ மைல்கணக்காய் நடந்து போவது அவனுக்குச் சகிக்கவில்லை. உன்கையில் ஓர் அரைரூபா யிருந்தால் நீ நடந்துபோகமாட்டாயென்பது அவன் எண்ணம. நேரில் பணங்கொடுத்தால் நீ வாங்கமாட்டாயென்று இந்த யுக்திசெய் தான். ஒருசமயம் நீ எங்கே அதை எடுத்துக்கொள்ளப் பின்வாங்கு வாயோ என்று, காலை நாலுமணிக்கு அவன் புறப்பட்டுப் போன பொழுது, என்னைக் கூப்பிட்டு என்னிடம் சங்கதியைச் சொல்லி விட்டுப் போனான். ஆகையால் நீ ஒன்றும் யோசிக்கவேண்டாம். அந்தப் பணம் உன்னுடையதுதான். அதை உன் இஷ்டம்போல் செலவழித்துக்கொள்" என்றான்.

அன்பானந்தர் இதைக்கேட்டதும் ஒன்றும் சொல்லத் தோற்றாத வராய் சற்றுநேரம் ஸ்தம்பித்துநின்றார். அவர் கண்களில் நீர் அரும் பியது. ஆ, அன்பின் தன்மையை என்னென்பது!!

" அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும் "

என்ற பொய்யாமொழியை மெய்யாகக் காட்டி நின்ற அன்பானந்தர், சிறிது நேரம் பொறுத்துச் சத்திரக் காரனிடம் விடை பெற்றுக் கொண்டு அவ்விடம் விட்டுச் சென்றார். செல்லும்போது அவர் மனத்தில் முதன்மையாயிருந்த ஓர் எண்ணமாவது, "வழியிடை நட்பாகக் கிடைத்த இந்த முத்தையனைப் போல ஒரு நண்பனாவது, என் செல்வவாழ்க்கையில் எனக்குக் கிட்டவில்லையே" என்பதுதான்.

---

# IX

## பெரும் புதுப் பைசாசம்.

சாப்பாட்டுக் கடையை விட்டுச் சென்ற அன்பானந்தர், விஜய மங்கலத்துக்கு வழி எதுவென்று விசாரித்துக்கொண்டு, அவ்வழியே மெல்ல மெல்லச் சென்றார்.

இவ்வாறு சென்றுகொண்டிருந்தபோது அவர் மனத்தில், முத்தையன் உதாரகுணத்தையும், அன்பையும் பற்றிப் பல பல எண்ணங்கள் தோன்றின. ஏழைகள் குணத்தையும் செல்வர்கள் குணத்தையும் அவர் ஒப்பிட்டுச் சீர்தூக்கிப் பார்த்தார். அப்பொழுது எவ்விதத்திற் பார்த்தாலும் ஏழைகளே சிறந்தவர்கள் என்று அவருக்குத் தோற்றியது. ஆலமரத்தடியில் உறங்கிக்கொண்டிருந்த தம்மை எழுப்பி வண்டியிலேற்றிக் கொண்டுவந்த முத்தையன் செயலை ஆழ்ந்து சிந்தித்துத் தமக்குள் பின்வருமாறு சொல்லிக்கொண்டார்:

"ஒரு செல்வன் வண்டி ஒன்று வைத்திருப்பானுயின், அதைத் தன்னவ்வளவு அதிர்ஷ்டம் அடையப் பெறாத அயலான் ஒருவனுக்குச் சிறிது உபயோகப்படும்படி செய்வது எவ்வளவு அருமை! ஏழ்மையுற்றவனிடம் அன்பாக ஒரு வார்த்தை கூறுவது கூடத் தன் கௌரவத்துக்குப் பழுதாகுமென்று நினைக்கிறானே! இது நான் அனுபவத்திற் கண்டதாயிற்றே! நான், ஒருமுறை என்னிடம் வேலைபார்த்துப் பிறகு அசௌக்கியத்தால் வேலையை விட்டுவிட்ட ஏழை ஒருவனுக்கு ஒரு முறை என்னுடைய மோட்டார் வண்டியை அனுப்பி அவனுக்குச் சிறிது உதவி புரியக் கருதியபோது, என்னுடைய காரியஸ்தன், தான் ஏதோ எனது நன்மையிற் கண்ணுங்கருத்துமாய் இருப்பவன் போல 'எஜமானவர்கள், அந்த வேலைக்காரனுக்குத் தங்கள் சொந்த வண்டியை அனுப்புவது நன்றாயிராது. அவன் தாங்கள் வண்டியனுப்பியதைப் பற்றி தங்கள் பால் நன்றிபாராட்டமாட்டான். இப்படிப்பட்டவர்களுக்குக் கொஞ்சம் இடங்கொடுத்தால் தலைக்குமேல் ஏறிவிடுவார்கள்.' என்று எனக்குப் புத்தி புகட்டியது நன்றாய் ஞாபகத்தில் இருக்கிறது. நானும்—அந்தச் சமயம் அக்காரியஸ்தன் சொல்லைக்

கேட்டு, என் எண்ணத்தை யாற்றிவிட்டேன்! என்னுடைய மூட மதியை என்னென்பது? என்னிடத்தில் உதவிபெற்றுக்கொள்பவன், அந் நன்றியைப் பாராட்டினாலும் பாராட்டாவிட்டாலும் அதைப்பற்றி எனக்கு ஆகவேண்டியதென்ன? செய்யவேண்டுவது உதவி; அதனால் கிடைக்கும் பலன் எதுவாயிருந்தால் என்ன?"

"இப்பொழுது, இந்த முத்தையனிடத்தில் மோட்டார் வண்டி இல்லை; சாதாரண சவாரி வண்டியும் இல்லை. அவனுக்குள்ளது கேவலமான ஒரு பாரவண்டி. அந்த வண்டியால், அவனிலும் ஏழையாகக் காணப்பட்ட ஒருவனுக்கு உதவிசெய்ய, அவன் எவ்வளவு தர்ம சிந்தையோடு முன்வந்தான்! தள்ளாமையும் ஏழ்மையுமுள்ள ஒருவனுக்கு உதவிபுரியவேண்டுமென்று எழுந்த இரக்கத்தைத் தவிர வேறு எவ்விதமான சிந்தனையும் அவனுக்கு உண்டாகவில்லை! தான் செய்யும் உதவிக்குப் பிரதிபலன் என்னகிடைக்கும் என்று அவன் ஒரு சிறிதும் யோசிக்கவில்லையே! இது எவ்வளவு உயர்ந்த உத்தமமான குணம்!— 'பெரிய மனுஷர்கள்' என்று சொல்லப்படும் அவர்களிடத்தில், இந்தப் பெருந்தன்மையான குணத்தை நான் இதுவரையிற் கண்டதில்லையே!

உலகத்தில் எவ்வளவு சூதும், வஞ்சனையும், வெளிவேஷமும் இருக்கின்றன வென்று தெரிந்து கொண்டேன். தெரிந்தென்ன செய்வது? என் வாழ்நாள் குறுகிவிட்டது. எனக்கு ஆனவர்கள், என்மீது அன்புடையவர்கள், என்னிடத்துப் பிரதிபலனை நோக்காது என்மீது பட்சங் காட்டுபவர்கள், என்னுடைய அந்தஸ்தையும் எனக்குள்ள திரண்ட செல்வத்தையும் கவனியாது, என் மாட்டு நட்புப் பாராட்டுபவர்கள் எவர் உளர்?"

இவ்வாறெல்லாம் சிந்தித்துக்கொண்டே அன்பானந்தர் சுமார் நாலைந்து மைல் தூரம் நடந்துவிட்டார். அவர் கால்கள் நொந்தன. எங்காவது சிறிது தங்கலாமா என்று யோசித்தார். சற்று தூரத்தில் ஒரு சிறு கிராமம் தென்பட்டது. அங்குச் சென்று தங்கலாமென்று தீர்மானித்துக்கொண்டு, அவர் பின்னும் சிறிது தூரம் சென்று, அந்தக் கிராமத்தை அடைந்தார்.

அங்கே, சாலையோரமாக ஒரு சத்திரம் இருந்தது. அன்பானந்தர் அந்தச் சத்திரத்துக்குச் சென்றார். சத்திரத்தின் ஆளோடியில், ஒருவன், வெற்றிலை, பாக்கு, பொடி, சுருட்டு, ரொட்டி முதலியவைகள் விற்கும் ஒரு சிறு கடை வைத்திருந்தான். அன்பானந்தர் அவனிடத்தில் ஓர் அணா கொடுத்து இரண்டு ரொட்டிகள் வாங்கிக் கொண்டுபோய்த் திண்ணையில் உட்கார்ந்து அவைகளைத் தின்ன ஆரம்பித்தார். அதைப்பார்த்திருந்த கடைக்காரன், அவரை நோக்கி "என் ஐயா, வெறும் ரொட்டியைத் தின்கிறாயே; தாளை கோவாதா?" என்று கேட்டான்.

" குற்றமில்லை. ரொட்டி மெதுவாய் இருக்கிறது. தின்பது கஷ்டமல்ல" என்றார் அன்பானந்தர்.

"ரொட்டி புது ரொட்டி. மெதுவாய் இருக்கும, மெய்தான். இருந்தாலும் வயதான காலத்தில் வெறும் ரொட்டியைத் தின்பதென்றால் கஷ்டமாய்த்தானிருக்கும்" என்று கூறிக் கடைக்காரன் ஒரு காகிதத்தில் கொஞ்சம் சர்க்கரையும், தனக்குக் குடிப்பதற்கென்று கொண்டு வந்துவைத்திருந்த ஜலத்தில் ஒரு 'டம்ளர்' ஜலமும் கொண்டுபோய் அன்பானந்தருக்குக் கொடுத்தான். அவர் மிகவும் வந்தனத்தோடு அதை வாங்கிக்கொண்டு, ரொட்டியைத் தண்ணீரில் தோய்த்து சர்க்கரையில் தொட்டுக்கொண்டு தின்று, தண்ணீரையும் குடித்துவிட்டுக் களையோடு அந்தத் திண்ணைமீதே படுத்தார்.

கடைக்காரன் அவரை நோக்கி, "என், ஐயா, நீ எங்கே போகிறதாக வருகிறாய்?" என்று கேட்டான்.

'நான் விஜயமங்கலம் போகவேண்டும். இன்னும் எவ்வளவு தூரம் இருக்கும்?" என்றார் அன்பானந்தர்.

"இன்னும் பத்துப் பன்னிரண்டு கல்லிருக்கும்" என்று அவர் வினவிற்கு விடையளித்துவிட்டு, "நீ இந்த வெயிலில் நடக்கவேண்டியதில்லை. களைதீர நன்றாய்த் தூங்கிவிட்டு, சாயந்திரம் நாலு மணி சுமாருக்கு புறப்பட்டால் போதும். விளக்கு வைத்து ஐந்தாறு நாழிகைக்கெல்லாம் விஜயமங்கலம் போய்ச் சேர்ந்துவிடலாம்" என்றான் கடைக்காரன்.

மாலை மணி நான்காயிற்று. அன்பானந்தர் உறக்கம் நீங்கி எழுந்தார். வெயிலின் வெப்பம் தணிந்திருந்தது. தமது பயணத்தைத் தொடரலாமென்று கருதி அவர் கடைக்காரனிடம் பயணம் சொல்லிக்கொண்டார். "நல்லது. நீ எழுந்தது சரியான சமயந் தான். போய் வா. இரண்டு மூன்று கல் போனால் வழியில் ஒரு அன்ன சத்திரம் இருக்கிறது. ஏதாவது தாகத்துக்குச் சாப்பிடுவதென்றால் அங்கே சாப்பிடலாம். அந்த சத்திரத்துப் பார்ப்பான் ரொம்ப நல்லவன். யாரிடத்திலும் இனிமையாய்ப் பேசுவான்" என்றான் கடைக்காரன்.

"அப்படியா, மிகவும் சந்தோஷம். போய்வருகிறேன்" என்று சொல்லிக்கொண்டு அன்பானந்தர் அவ்விடம் விட்டுப் போய்விட்டார்.

அன்பானந்தர் சுமார் இரண்டு மூன்று மைல் தூரம் நடந்திருப்பார். வெயிலின் உஷ்ணம் மிகவிரைவாய்க் குறைந்து கொண்டே வந்தது. மணி ஐந்துக்குமேல் ஆய்விட்டது. அப்பொழுது, மோட்டார் வண்டி ஒன்று தமக்குப் பின்னால் வரும் சத்தம்கேட்டு, அவர் சாலையின் ஓரமாய் ஒதுங்கி நின்றார். அடுத்த விநாடியே அவ்வண்டி அவரிருந்த இடத்தைக் கடந்து போய்விட்டது. மணிக்கு இத்தனை மைல் வேகத்துக்கு மேற்படாமல் போகவேண்டும் என்று விதித்திருக்கும் ராஜசட்டத்தை மீறி அவ்வண்டி, எவ்வளவு வேகமாய்ப் போகக்கூடுமோ, அவ்வளவு வேகமாய்ப் போயிற்றாதலால், அந்த வண்டியின் நம்பரைக் கவனித்துப் போலீஸ் அதிகாரிகளுக்குத் தெரியப்படுத்த வேண்டுமென்ற எண்ணத்துடன், அன்பானந்தர் அதன் 'நம்பரைக்' கூர்ந்து நோக்கினார். ஆனால், 'நம்பர்' தெரியவில்லை. வண்டியின் ஓட்டம் அளவு கடந்த வேகமாயிருக்குமானால், அவ்வண்டியின் 'நம்பரைப்' பார்ப்பதெப்படி? போதாக் குறைக்கு, அது செல்லும் வேகத்தால் அதன் பின்னால் எழுகின்ற புழுதிப்படலம், சிறிது தெரியும் 'நம்பரை'யும் தெரியவொட்டாமல் மறைத்துவிடுகிறது. "எதற்காக, மோட்டார்வண்டிகளில் உள்ள 'நம்பர்கள்' முக்கியமாய் உபயோகப் படவேண்டுமோ, அதற்கு அவை ஒரு சிறிதும் உபயோகப்படுகிறதில்லை. இந்த வண்டியைச் செலுத்துகிறவன், தப்பித்தவறி யாராவது குறுக்கிட்டால் அவர்கள் உயிர்தப்புவது அரிது என்று தெரிந்

தும், இவ்வளவு வேகத்தில் வண்டியைச் செலுத்துவது என்ன அகம்பாவம்? என்ன இரக்கமற்றசிந்தை!" என்று தமக்குத் தாமே சொல்லிக் கொண்டு சென்றார்.

அன்பானந்தர் சிறிது தூரம் சென்றபிறகு, வழியோரத்தில் ஒரு நாய், காலில் ஏதோ காயத்தினுல் ஓடமுடியாமல் நொண்டி நொண்டி வருந்துவதைக் கண்டு அதனருகே சென்று அதை எடுத்து மார்போடணைத்துக்கொண்டார். அந்த நாயின் கழுத்தில் ஒரு பித்தளைப் பட்டி அணியப்பட்டிருந்தது. அதில் "என் பெயர் சூரன்" என்று எழுதப்பட்டிருந்ததைக் கண்ட முதியவர் அதைத் தட்டிக் கொடுத்து "நீ சூரனு! உன் காலில் இந்தக் காயம் இல்லாவிட்டால், நீ சாலை நடுவே ஓடியிருப்பாய். நீ என்ன சூரனுயிருந்த போதிலும், சற்று முன் இச் சாலையைக் கிழித்துக் கொண்டு சென்ற 'மோட்டார் வண்டி' என்னும் பெரும் புதுப் பைசாசம் உன்னைக் கொன்றிருக்கும். ஏதோ, உன்நல்ல காலம் நீ சாலையினடுவே இல்லை; சாலையின் நடுவே ஓடியிருக்கக்கூடிய உன்காலும் ஓடச் சக்தியற்றதாயிருந்தது" என்று சொல்லி, அதை அன்பாய் அணைத்துக் கொண்டு சென்றார்.

## X

## பார்ப்பனியின் நோக்கம்; பழிக்குப்பழி.

சூரன், தன்னுடைய பரிதாபகரமான நிலைமையைக் கண்டு இரக்க முற்றுத் தன்னை எடுத்து அணைத்து ஆதரிக்க முன்வந்த நண்பனுக்குத் தனது நன்றியறிதலைத் தெரிவிப்பதுபோல வாலைக்குழைத்துக் கொண்டு, அன்பானந்தர் உடம்பை நக்கியது. அதை உணர்ந்த பெரியவர், உள்ளம் மகிழ்ந்து, "சூரா, நீ நன்றிமறவாத உத்தம குணமுடையவன் என்பதை நான் அறிவேன். உன்னை நான் கைவிடமாட்டேன். உன்னை வளர்த்தவர்கள் எவ்வளவு நெஞ்சீரமில்லாதவர்களாயிருந்தால், நடுவழியில் நொண்டிக்கொண்டு திரியும்படி உன்னை விட்டிருக்கவேண்டும்! நான் என்ற அகம்பாவத்தால் மனிதர்கள் நாயென்று உன்னை அலட்சியமாயும் கேவலமாயும் மதிக்கிறார்களே

யொழிய, உன்னுடைய உத்தமமான குணத்தில் ஒரு காற்பங்குகூட அவர்களிடத்துக் காணப்படுவது அருமையாயிருக்கிறதே! நான் இருக்கிற கோலம், ஏழைக்கோலமாயினும், எனக்குள்ள திரண்டசெல்வம் வேறு எவர்க்கும் இல்லை. ஆனால், அந்தத் திரண்டசெல்வத்தையெல்லாம் கொடுத்தாலும், உன்னவ்வளவு நன்றியறிதலுள்ள ஒரு நண்பன் எனக்குக் கிடைக்கமாட்டான். நீயே எனக்குச் சிறந்த நண்பன். என் உயிருள்ளளவும் நான் உன்னைவிட்டுப்பிரியமாட்டேன்" என்று சொல்லிக்கொண்டே வழிநடந்தார்.

சுமார் ஒரு மைல்தூரம் சென்ற பிறகு, சிறிது தூரத்தே ஒரு மோட்டார்வண்டி நிற்பது அன்பானந்தர் கண்ணிற்குத் தெரிந்தது. "அது சற்றுமுன் அதிவேகத்தோடு நம்மைக் கடந்துசென்ற வண்டியாகத்தான் இருக்கவேண்டும். என்ன காரணத்தால் இங்கு நிற்கிறதோ தெரியவில்லை" என்று தமக்குள் எண்ணிக்கொண்டு, அவர் அவ்விடத்தை நெருங்கியபோது, அங்கே ஒரு சிறு கற்கட்டடம் இருந்தது. அதன் வாயின் முகப்பில்,

அன்ன சத்திரம்.

இங்கே சாப்பாடு கிடைக்கும்.

| | | | |
|---|---|---|---|
| முதல்தரமான சாப்பாடு | அணா | ... | 4. |
| சாதாரணச் சாப்பாடு | அணா | ... | 3. |

இட்டலி, தோசை, உப்புமா, வடை
முதலிய பலகார வகைகளும்
விற்கப்படும்.

என்று பெரிய எழுத்துக்களில் எழுதப்பட்ட பலகை ஒன்று தொங்கியது.

"அந்தக் கடைக்காரன் சொல்லிய அன்ன சத்திரம் இது தான் போலிருக்கிறது" என்று எண்ணிக்கொண்டு அப்பெரியார் அந்தச் சத்திரத்துக்குள் நுழைந்தார். தன் சத்திர வாயிலில் மோட்டார் வண்டி ஒன்று வந்து நின்ற காரணமென்ன வென்றறிய வெளியே வந்து நின்ற சத்திரப்பிராமணன், அன்பானந்தர் சத்திரத்துள் நுழைவதைக் காணவும், அவரை நோக்கி, "ஐயா, என்னவேண்டும்?" என்று கேட்டான்.

"ஏதாவது பலகாரம் கிடைக்குமா ?" என்றார் அன்பானந்தர்.

"ஆகா, கிடைக்கும். உள்ளேபோய்க் கேளும்" என்று சொல்லிவிட்டு பிராமணன் மோட்டார் வண்டியைக் கவனித்துக்கொண்டிருந்தான்.

மோட்டார் வண்டியில் வந்தவர்கள் இருவர்—சாரதியும் எஜமானனும். வண்டியின் இயந்திரத்தில் ஏதோ தவறு உண்டாகி வண்டி நின்று விட்டமையால், அந்தத் தவற்றைக் கண்டுபிடித்துச் சரிப்படுத்துவதற்காக, எஜமானனும் சாரதியும் படாதபாடும் பட்டுக்கொண்டிருந்தார்கள். வெகுநேரம்வரையில் கஷ்டப்பட்டும் இயந்திரம் சரிப்படாமையால், களைப்பும் சலிப்புமுற்று வண்டிக்கு உரியார் சத்திரத்துத் திண்ணையில் வந்து உட்கார்ந்தார். உடையாலும், முகக்குறி முதலியவற்றாலும், வண்டியின் எஜமான் இன்னானென்பதை அறிந்துகொண்ட சத்திரத்துப் பிராமணன், "நம்முடைய அதிர்ஷ்டந்தான் மோடார்வண்டி பழுதாகி இங்கே வந்து நிற்கும்படி ஆயிற்று. நம் சத்திரத்தில் தங்கியிருக்கும் இந்தப் பணக்காரன், குறைந்தது ஒரு கால் ரூபாய்க்காவது பட்சணங்கள் வாங்கிச் சாப்பிடாமலா போய்விடுவான்?" என்று தனக்குள் எண்ணமிட்டுக்கொண்டு வண்டிக்கு எஜமானனை நோக்கிப் புன்னகை புரிந்துகொண்டு வணக்கமாய் நின்று, அவரோடு சம்பாஷிக்கத் தொடங்கினான்.

பிராமணன்.—"வண்டியில் என்னபழுது வந்து விட்டது?"

செல்வன்.—"அது தானே தெரியவில்லை."

பிராமணன்.—"ஆனல், இப்பொழுது—எப்படிப் போவீர்ள்?"

செல்வன்.—"வண்டியை சரிப்படுத்திக் கொண்டுதான் போக வேண்டும். அதை யார் விடப்போகிறார்கள். கொஞ்சம் களையாயிருக்கிறது. அதனால், சற்று இளைப்பாறுவோம் என்று உட்கார்ந்தோம்"

பிராமணன்.—"ஆனால், கொஞ்சம்—தாகத்துக்குச் சாப்பிடுகிறீர்களா?"

செல்வன்.—"தாகத்துக்கு என்ன இருக்கிறது? காப்பி யிருக்குமா?"

பிராமணன்.—"காப்பி இங்கே விலையாகாது, போடுகிற தில்லை.—சுக்குத்தண்ணி கிடைக்கும். பலகாரம், எது வேண்டுமானாலும் கிடைக்கும்."

செல்வன்.—"சுக்குதண்ணியா! நான்சென்ஸ்! கஷாயம் போல, அதை யார் குடிக்கிறது!"

பிராமணன்.—"எஜமான் அப்படி சொல்லிவிடக்கூடாது. சாப்பிட்டுப் பார்த்தால் தெரியும். காப்பி அவ்வளவு கசப்பு இதற்கு இல்லை"

செல்வன்.—"என்ன ஓய், காட்டுப்புறத்தான் போல் பேசுகிறாய்! காபியின் டேஸ்ட் (Taste) என்ன, ப்ளேவர் (Flavour) என்ன! அதைச் சாப்பிட்டு வழக்கமான வாய்க்கு சுக்குத் தண்ணீர் பிடிக்குமா? அது வேண்டாம். வேறுபலகாரங்கள் என்ன வைத்திருக்கிறாய்?"

பிராமணன்.—"பகோடா, ஓமப்பொடி, காராப்பூந்தி, மசால் வடை, வாழைக்காய்பஜ்ஜி எல்லாம் இருக்கிறது. தித்திப்புச் சரக்கில்" பூந்தியும், ஜிலேப்பியும் இருக்கிறது.

செல்வன்.—"எல்லாம் நெய்யில் செய்ததா?"

பிராமணன்.—"தங்களிடத்தில் பொய் சொல்லக்கூடாது. நெய்யிற் செய்தால் நான் விற்கிறவிலைக்குக் கட்டாது. நல்லெண்ணெய்யில் தான் எல்லாப் பலகாரங்களும் செய்கிறது. தித்திப்புச் சரக்குக்குமாத்திரம் கொஞ்சம் நெய் கலக்கிறதுண்டு."

செல்வன்.—"போமையா, சுத்தப்பிச்சைக்காரப் பார்ப்பானாயிருக்கிருய். உம்முடைய பலகாரம் ஒன்றும் நமக்குவேண்டாம். சுத்தஜலம் கொஞ்சம் கொடும், போதும்."

பிராமணன்—"ஆகா, இதோகொண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டு, மிகவும் முகவாட்டத்துடன் சத்திரத்துக்குள் சென்ருன்.

அன்பானந்தர் சத்திரத்துக்குள் சென்றவர் வெளியில் வரவே இல்லை. ஏனெனில் தென்னிந்தியாவிலுள்ள பணக்காரர்களுக்கெல்லாம் தம்மைத் தெரியுமாதலால், இப்பொழுது திண்ணையில் உட்கார்ந்திருக்கும் செல்வவந்தனுக்கும் தம்மைத் தெரிந்திருக்கலாமென்று அஞ்சினர். ஆதலால் சத்திரத்துப் பார்ப்பனியிடம், ஓர் அணுவுக்குப் பலகாரங்கள் வாங்கி அவற்றை ஒரு மூலையில் உட்கார்ந்து மெதுவாய்த் தின்று கொண்டேயிருந்தார். அவர் இருந்த விடம் அதிக வெளிச்சமில்லாமலும், வாயிற்புறம் மிகவும் வெளிச்சமுடையதாகவும் இருந்தமையால், திண்ணையில் உட்கார்ந்திருந்தவர்கள் அன்பானந்தருக்கு நன்ருய்த் தெரியும்படியும், திண்ணையில் இருந்தவர்களுக்கு அன்பானந்தர் இருப்பது தெரியாமலும் இருந்தது. ஆகையால், வாயிற்புறத்தில் நடப்பதையெல்லாம் நம்முதியார் கவனித்துக் கொண்டு தாம் கொண்டு வந்த நாயுடன் பலகாரஞ் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

உள்ளே சென்ற பிராமணன் சற்று நேரத்தில், ஒரு பாத்திரத்தில் தண்ணீர் எடுத்துக்கொண்டு வெளியே வந்து அதை மோட்டார் வண்டிக்குச் சொந்தக்காரரான செல்வரிடம் கொடுத்தான். அவர் அதை வாங்கிப் பருகிக்கொண்டிருக்கும்போது, நல்ல தேகக்கட்டுடைய ஒருவன், கையில் 'ரஜாய்' மெத்தையைச் சுருட்டிக் கட்டியது போல், துணியினுல் சுருட்டிக் கட்டப்பட்ட ஒரு மூட்டையை எடுத்துக்கொண்டு அங்கே வந்தான். அவன் முகம் குடிவெறியினுல் தன்னை மறந்திருப்பவன் முகம்போலப் பார்ப்பவர்க்கு அச்சத்தைத் தரத்தக்கதாக இருந்தது. அவன், தண்ணீர் பருகிக்கொண்டிருந்த செல்வவந்தரையே கூர்ந்து நோக்கிக்கொண்டு, அவர் அமர்ந்திருந்த திண்ணைக்கு எதிர்த்திண்ணையில் வந்து உட்கார்ந்தான்.

அச்சமயம், அச்சத்திரத்தை அடுத்துள்ள பெருந்துறை யென்னும் சிற்றூரிலுள்ளார் சிலர் தம்மூர்ச் சத்திரவாயிலில், 'மோட்டார் வண்டி' ஒன்று வந்து நிற்கும் அதிசயத்தைக் கண்டு, அதை வேடிக்கை பார்க்க அங்கே வந்து கூடினர்.

அப்படி வந்து கூடியவர்கள், மோட்டார் வண்டியைச் சுற்றி நின்று, அதன் ஒவ்வொரு பாகத்தையும் பார்த்துப் பார்த்துத் தமக்குள் அதிசய முற்றுத் தமக்குத் தோன்றியவாறெல்லாம் அதன் அபூர்வ சக்தியையும், அதைக் கண்டுபிடித்த வெள்ளைக்காரர்களின் அதிசய சாமர்த்தியத்தையும் பற்றிப் பேசிக்கொண்டார்கள். அவர்களுள் சற்று அறிவு மிகுந்த இருவர், செல்வவந்தர் இருந்த திண்ணைக்கருகே நின்று பின் வருமாறு சம்பாஷித்துக்கொண்டார்கள் :

ஒருவன்—"இந்த மோட்டார் வண்டி எற்பட்டது பல விஷயங்களில் நல்லதுதான்; ஆனால், இதனால் உண்டாகும் ஆபத்துக்கள் எவ்வளவு தெரியுமா ?"

மற்றவன்—"அது மெய்தான். எதில் தான் ஆபத்தில்லை ?"

முன்னவன்—"ஆபத்திருந்தால் அதற்குத் தகுந்த பாதுகாப்பும் இருக்கவேண்டும். ஜனங்கள் போகிற வருகிற சாலையில் இந்த வண்டிவருகிற வேகத்தைப்பார்த்தால் குலையெல்லாம் நடுங்குமே! அவ்வளவு வேகத்தில் வரும்போது தப்பித்தவறி யாராவது குறுக்கே வந்துவிட்டால் அவர்கள் கதி என்ன ஆகும் ?"

மற்றவன்—"அது சரிதான். சர்க்கார் ரோட்டு நமக்கு எப்படிப் பாத்தியமோ, அப்படியே பணக்காரர்களுக்கும் பாத்தியந்தானே. அந்தப் பாத்தியப்படி அவர்கள் அதில் தம் வண்டியை ஓட்டி வருகிறார்கள். அதை நாம் தடுக்கமுடியுமோ ?"

முன்னவன்—"ஐயா, நீர் தெரியாமற் பேசுகிறீர். நம் நாட்டிலாகட்டும் வேறெந்த நாட்டிலாகட்டும் பணக்காரர் எத்தனை பெயரிருப்பார்கள் ? நூற்றுக்கு ஒன்று தேறுவது கூட கஷ்டம். அந்த ஒருத்தருக்காக ராஜாங்கமா, மற்ற தொண்ணூற்றொன்பது பேருக்காக ராஜாங்

கமா? ஒருவன் தன் குதூஹலத்தால், தன் மனம்போனபடி ஆபத்தை விளைக்கக் கூடிய ஒரு வண்டியை நடுத்தெருவில் அதிவேகமாய்ச் செலுத்தி வருவது, மற்ற தொண்ணூற்றொன்பது பேரும் அதில் அகப்பட்டுச் சாவவேண்டியது போலிருக்கிறதே! நன்றாயிருக்கிறது நியாயம்!''

மற்றவன்—"அப்படியா எல்லாருஞ் செத்துப்போகிறார்கள்? தப்பித்தவறி இரண்டொரு ஆபத்து நேர்ந்துவிடுகிறதுண்டுதான்; அதற்கு என்ன செய்கிறது?''

முன்னவன்—"செய்கிறதா? அந்த விதமான ஆபத்து ஒன்று கூட நேராமற் செய்யவேண்டும். உயிர் என்றால் எல்லாருக்கும் அருமையானது தான். பணக்காரன் உயிர் மாத்திரம் உயர்ந்தது, ஏழை உயிர் தாழ்ந்ததா? நாமெல்லாம் ஏழைதான். ஆனால், நாம் செத்தால் நம் மனைவி மக்கள் வருந்துகிற அவ்வளவு, ஒரு பணக்காரன் செத்தால், அவன் மனைவி மக்களாகட்டும் வேறு எவராகட்டும் வருந்தமாட்டார்கள்.''

மற்றவன்—''ஆமாம். அதற்கு மோட்டார் வண்டி வைத்திருப்பவர்கள் என்ன செய்யக்கூடும்?''

முன்னவன்—"என்ன செய்யக்கூடுமாவது, என்ன செய்ய வேண்டும் என்று கேளும். 'நம்முயிரைவிட ஏழைகள் உயிர் அருமையானது; அவர்கள் உயிர்க்கு ஆபத்து நேரிடும்'' என்று அஞ்சி வண்டியை, சுமாரான வேகத்திற் செலுத்தவேண்டும். அல்லது, இப்பொழுது ரயில்வண்டி ஆபத்தை விளைக்கக் கூடியதென்று அதற்காகத் தனியே ஒரு சாலை ஏற்பட்டிருக்கிறதே, அப்படியே தங்கள் மோட்டார் வண்டிக்கென்று தனியே ஒரு சாலை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். நடுச்சாலையில் அளவு கடந்த வேகமாய் வண்டியை ஓட்டி வருவதால் எவ்வளவு ஆபத்துக்கள் உண்டாகின்றன, தெரியுமா? இதோ இந்த மோட்டார் வண்டிக்குச் சொந்தக் காரரைக் கேட்டுப்பார்'' என்றுசொல்லி, அவன் செல்வவந்தரை அணுகி, "என் ஐயா, நீங்கள் இந்த வண்டியில் வேகமாய்ச் சென்றால் வழியில்வரும்

பல உயிர்களுக்கு ஆபத்து நேருகிறது உண்டல்லவா?" என்று கேட்டான்.

செல்வவந்தர் சிரித்துக்கொண்டு, "அதெல்லாம் ஓட்டுகிறவர்கள் சாமர்த்தியத்திலிருக்கிறது. ஆனால், என்ன சாமர்த்தியமாய் ஓட்டிவந்தாலும், சிலசமயம் ஏதாவது ஓர் உயிர் சேதம் உண்டாகிறதுண்டு. இப்பொழுது இந்த வண்டியை நானே ஓட்டி வந்தேன். மணிக்கு நாற்பது மைல் வேகத்தில் வந்தேன். இடை வழியில் ஒரு கோழி குறுக்கே வந்து சக்கரத்தில் அகப்பட்டு இறந்தது; அதற்கு யார் என்ன செய்கிறது? அதெல்லாம் கவனித்தால் மோட்டார் வண்டியே வைத்திருக்க முடியாது" என்றார்.

அச்சமயம், கையில் ஒரு மூட்டையுடன் திண்ணையில் வந்துட்கார்ந்திருந்தவன் கண்கள் இரத்தம்போற் சிவந்தன. அவன் தோற்றம் பார்வைக்கு பயங்கரமாயிருந்தது. அதுவரையில் அவனைக் கவனியாதிருந்த சத்திரத்துப் பிராமணன், இப்பொழுது அவனைக் கவனித்து, மிகவும் ஆச்சரியத்தோடு "என்ன, முத்தையா, நீ எப்பொழுது வந்தாய்? என்ன ஒருவகையாயிருக்கிறாய்?" என்றான்.

முத்தையன் காதில் பிராமணன் கேட்ட கேள்விகள் ஒரு சிறிதும் ஏறவில்லை. அவன் கவனமெல்லாம் வேறெங்கேயோ சென்றிருந்தது. அவன் பார்வை, அவனுக்கு எதிரே உட்கார்ந்திருந்த செல்வவந்தர் மீது பாய்ந்திருந்தது. தெருவில் நின்றவர்களோடு உரையாடிக்கொண்டிருந்த அச்செல்வர் பார்வையோ, தம்மெதிரே தம்மை உறுத்துநோக்கிக்கொண்டிருந்த முத்தையன் மீதும் செல்லவில்லை; தமக்கயலே தம்மோடு உரையாடிக்கொண்டிருந்தவர்கள் மீதும் செல்லவில்லை. வேறு எங்குதான் சென்றதெனில், அச்சத்திரத்து வாயிற் கதவருகே நின்ற ஓர் உருவத்தின் மீது செல்வதும் மீள்வதுமாயிருந்தது.

சத்திரத்துப் பிராமணன் சம்சாரம் இளமையும், சரீரக்கட்டும் கண்டாரைக் காமுறச்செய்யும் கவின்பெறும் இனிய தோற்றமும் உடையவள். இவ்வம்மையின் அழகும், முகவசீகரமும், குழலிசையில் மயங்கும் பாம்பைப்போலத் தன்னுரையில் எவரையும் மயக்கத்

தக்க உரைவன்மையும் உடனிருந்து உதவிபுரியாவிட்டால், ஐயர் செய்யும் பலகார வியாபாரம் பலன் பெறாது. ஆயினும், தன் உதவியில்லாவிட்டால் ஒன்றும் நடவாதே என்ற தற்பெருமையால் அவ்வம்மை ஐயரை அலட்சியமாகக் கருதுவதில்லை. கொண்டானுக்கு மனையாள் செய்யவேண்டிய மரியாதையில், அவள் ஒருசிறிதும் குறைவு செய்வதில்லை. ஐயரும் அந்த மரியாதையைக் காப்பாற்றிக்கொள்ளும் வகையில் நடந்து வருவார். ஆகவே ஐயரும் அம்மையும் பரஸ்பர நேசமுடைய தம்பதிகளாகவும், எல்லோரும் தம்மை விரும்பி நேசிக்கத் தக்க இனிய குணமுடையவர்களாகவும் இருந்து, தம் ஜீவனத்துக்கென்று கைக்கொண்ட வியாபாரத்தை லாபகரமாகவே நடத்திவந்தார்கள். சிற்சிலர் 'மானங்கெட்ட பார்ப்பான்' என்று ஐயரையும், 'வெட்கங்கெட்ட வேசி' யென்று அம்மையையும் புறங்கூறுவதுண்டு. ஆனால் ஐயரும் அம்மையும் அதைச் சிறிதும் காதில் வாங்குவதில்லை.

ஐயர் அநேகமாய் சத்திரத்துத் திண்ணையில்தான் இருப்பார். உள்ளேபலகாரஞ் செய்வது, பலகாரம் வாங்க வந்தவர்களை உபசரிப்பது முதலியவெல்லாம் ஐயர் சம்சாரத்தைப் பொறுத்தன. யார் பலகாரம் வாங்க வந்த போதிலும், ஐயர் அவர்களை அம்மாளிடம் அனுப்பிவிடுவார். அந்த வழக்கப்படியே நமது அன்பானந்தரையும் உள்ளனுப்பியதை வாசகர்கள் அறிவார்கள். செல்வரோ, வறியரோ, வயோதிகரோ, வாலிபரோ யாராயிருந்தாலும் அவர்களிடத்தில் இனிமையாய்ப் பேசி, அவர்கள் மனங்களிக்க அவர்களை உபசரிப்பது அவ்வம்மைக்கு இயல்பு என்பதை முன்னமேயே சொல்லியிருக்கிறோம். ஆனால் ஒன்று: அவ்வின்னுரையும் நல்லுபசாரமும் எல்லோரிடத்திலும் ஒரேவகையா யிராமல், அவ்வவர் மனத்துக்குத் திருப்தி தருவதாய் மட்டும் இருக்கும். உதாரணமாக, அம்மையின் *கண்ணோட்டம் வயோதிகர்களுக்குத்திருப்தியைத் தரும்; †கண்ணோக்கம் வாலிபர்களுக்குத் திருப்தியைத் தரும்; இனிமையான வார்த்தைகள் ஏழைகளைத்

---

* கண்ணோட்டம்—தாட்சண்யம். † கண்ணோக்கம் —கண்ணின் பார்வை.

திருப்தி செய்யும்; ‡இணக்கமான வார்த்தைகள் செல்வரைத் திருப்தி செய்யும்.

நமது அன்பானந்தர், வயோதிகப்பருவமும், எழ்மைக் கோலமும் உடையவராயிருந்தபடியால், ஐயர் மனைவி அவரிடத்தில் கண்ணோட்டங் காட்டி, இனிமையான வார்த்தைகளால் அவரை உபசரித்து அவர் கேட்ட பலகாரங்களைக் கொடுத்தாள். அந்தப் பலகாரங்களை அன்பானந்தர் யாருடன் சேர்ந்து எங்கமர்ந்து புசிக்கலானார் என்பதை முன்னமேயே கூறியுள்ளோம்.

அன்பானந்தருக்குப் பலகாரங்கள் கொடுத்துச் சிறிது நேரம் ஆன பிறகு, நம் ஐயர் அருமை மனைவி, தன் அருமை கணவர் யாருடன் பேசிக் கொண்டிருக்கிறார் என்று பார்ப்பதற்கு வெளியே வந்தாள். திண்ணையில் செல்வராகக் காணப்பட்ட வாலிபர் ஒருவர் இருக்கக் கண்டு, நாணங் கொண்டு சற்றுப்பின்வாங்கி, அவருக்கு எதிரே, வாயிற்கதவைப் பிடித்துக்கொண்டு நின்றாள். அச்சமயந்தான் முத்தையன் செல்வந்தரை உறுத்து நோக்கியது. ஆனால், செல்வந்தர் அதைக் கவனிக்கவில்லை, ஏனெனில் அவர் கவனம் கதவடியிற் சென்றிருந்தது. கதவடியில் நின்ற அம்மையும், தனக்கு முத்தையனை நன்றாய்த் தெரியுமாயினும், இப்பொழுது அவன் திண்ணையிலுட்கார்ந்திருப்பதைக் கவனிக்கவில்லை. ஏனெனில், அவள் கவனமும் கண்ணோக்கமும் செல்வர் மீது சென்றிருந்தன.

செல்வவந்தர் அம்மையை நோக்கியபோது, அம்மையின் பார்வை அவரை வரவேற்று உள்ளழைத்துச் செல்வதுபோல, அவரைநோக்கி மீண்டு, கடைக்கண் வழியே சத்திரத்துட் சென்றது. அவள் புன்னகை அரும்பி, முகம்மலர்ந்து நின்றாள். செல்வர் அவளை நோக்கநோக்கத் தம்முணர்வு மயங்கலானார். அது வரையில் உள்ளடங்கியிருந்த பேரானந்தப் பெருங்கடல் ஒன்று பொங்கிப்பெருகி வெளிவந்துவிட்டது போலவும், பார்ப்பனி யென்னும் ஒரு தெப்பத்தின் உதவி கொண்டு தாம் அவ்வெள்ளத்தில் மிதப்பதாகவும் அவருக்குத் தோற்றியது. 'கரைகாட்டவந்த காரிகையே! என்னைக் கரையேற்றி ஆட்கொண்டருளாய்' என்று அம்மையின் காலடியில் வீழ்ந்து வேண்டு

‡இணக்கமான—எதிரியின் விருப்பத்துக்கு இணங்குவதைக் காட்டும்.

வதுபோல, செல்வவந்தர் கண்கள் அவள் பாதங்களிற் படிந்து, பின்னர் மேலெழுந்து அவள் முகத்தை நோக்கின. 'அஞ்சாதே' என்று அபயஸ்தங் கொடுத்து அணைத்தெடுத்து ஆதரிப்பது போல அவள் பார்வை, அவர் பார்வையைத் தழுவியது. இருவர் கண்களும் சந்தித்து உரையாடின.

இச்சமயத்தில் தாம் இடையூருய் இடையே நிற்கக் கூடாதென்று, ஐயர் முத்தையனை நெருங்கி, "என்ன முத்தையா, நான் கேட்டதற்கு ஒன்றும் சொல்லாதிருக்கிருயே. ஏதோ ஒரு வகையாக இருக்கிருயே, என்ன சமாச்சாரம் ?" என்று வினவினர்.

* "ஒன்றுமில்லை நீர் இப்படி உட்காரும்" என்று கூறிப் பிறகு, தன் எதிரேயிருந்த செல்வரைச் சுட்டிக்காட்டி, "இவர்தான் இந்த மோட்டார் வண்டிக்கு சொந்தக்காரோ ?" என்று வினவினுன் முத்தையன்.

"ஆம்" என்ருர் ஐயர்.

'மோட்டார் வண்டி' என்ற சொல் காதில் விழவும், செல்வவந்தர் முத்தையனைத் திரும்பிப் பார்த்தார்.

உடனே முத்தையன் அவரை நோக்கி, "உங்களுடைய வண்டி தானே இது?" என்று தெருவே இருந்த மோட்டார் வண்டியைச் சுட்டிக் கேட்டான்.

"ஆம்" என்று கூறிவிட்டுச் செல்வர்தாம் முன்னேக்கி யிருந்த இடத்தை நோக்கினுர்.

முத்தையன் எழுந்து செல்வரை நெருங்கிப் பிறகு, கதவருகில் நின்றிருந்த பார்ப்பனியை இகழ்ச்சிக் குறிப்போடு நோக்கி, மீட்டும் செல்வரை நோக்கினுன். செல்வர் அலட்சியமாய் அவனைத் திரும்பிப் பார்த்தார்.

முத்தையன் அவரை நோக்கி, "மணிக்கு நாற்பது மைல் வேகத்துக்கு அதிகமாக இதை ஓட்டிவந்தது தாங்கள்தானே ?" என்று வினவினுன்.

---

* வண்டிக்கார முத்தையனின் வார்த்தைகளை கொச்சையாயிருப்பதால், ஈண்டு திருத்தி எழுதுகிருேம்.

செல்வர்—“ஆம்.”

முந்தையன்—“என், வண்டி யோட்டுவதற்கென்று தனியே ஒரு சாதி இல்லையோ ?”

செல்வர்—“ஓ, இதோ இருக்கிறான். தமாஷுக்காக நான் ஓட்டிவந்தேன்.”

முந்தையன்—“அவ்வளவு வேகத்திற் போவதில் தங்களுக்கு அச்சந் தோன்றவில்லையா ?”

செல்வர்—“என்ன அச்சம் ?”

முந்தையன்—“ஏதாவது ஆபத்து நேரிடக் கூடுமென்ற அச்சந் தான் வேறென்ன ?”

செல்வர்—“நீ சொல்கிறது எனக்கு விளங்கவில்லையே, ஆபத் தென்றால்—யாருக்கு நேரும் ஆபத்தைக் குறிக்கிறாய் ?”

முந்தையன்—“உங்களுக்கென்றுதான் வைத்துக் கொள்ளுங்க ளேன்.”

செல்வர்—“வண்டியில் உட்கார்ந்திருக்கும் எனக்கு ஆபத் தென்னவாப் போகிறது?”

முந்தையன்—“அப்படியா, அவ்வளவு வேகமாய்ப் போகும் பொழுது வண்டி எதிரில் உள்ள எதிலாவது மோதக்கூடும்; சாலை யைத்தவறி அடுத்தாற்போல் இருக்கக் கூடிய குண்டுகுழிகளில் விழக் கூடும், இன்னும் பலவகையிலும் ஆபத்து நேரக் கூடுமல்லவா ?”

செல்வர்—நீ சொல்வது சரிதான். ஆனால், அவ்விதமான ஆபத் துக்கள் ஒன்றும் நேராமல், ஜாக்கிரதையாய் வண்டியை ஓட்டுவோம்.”

முந்தையன்—“என்ன ஜாக்கிரதை! வழியில் ஒரு கோழி உங் கள் வண்டியில் அகப்பட்டு உடல் வேறு குடல் வேறாய்ப் போய்விட்ட தாக நீங்களே சொன்னீர்கள்!”

செல்வர்—“மெய்தான். அதற்கென்ன செய்வது!? அதெல்லாம் ஓர் ஆபத்தா?”

முத்தையன்—"அல்லவா?"

செல்வர்—"நன்றாய்ச் சொன்னாய்! வழியில் போம் பொழுது கோழி, ஆடு, மாடு முதலிய மிருகங்கள் தம் இச்சை போல் திரிந்து கொண்டிருக்கும். இவைகளுக்காக வண்டியை மெதுவாய்விட்டுக்கொண்டு போவதா? அல்லது, அவைகளில் ஒன்று குறுக்கிட்ட போதெல்லாம் வண்டியை நிறுத்துவதா? இதென்ன மூடத்தனம்! எங்கே போகிறோம், பின்னால் என்ன வருகிறது, முன்னால் என்னவருகிறது என்று ஏறெடுத்துப் பாராமல், ரஸ்தாவில் மிருகங்களாகட்டும் மனிதர்களாகட்டும் சென்றுகொண்டிருந்தால், அதற்கு மோட்டார்க்காரன் என்ன செய்வான்?"

இவ்வாறு முத்தையனிடம் கூறிய பிறகு, செல்வர், சத்திரப் பிராமணனை நோக்கி, "இதைக் கேளும் ஐயரே, இப்பொழுது நான் இந்த வண்டியைச் செலுத்தி வந்தபோது, சமீபத்தில் தான், ஐந்தாறு வயதுப் பையன் ஒருவன் ஒரு மூங்கிற் கொம்பை வண்டிக் கெதிரே நீட்டிக் கொண்டு சாலையில் நின்றான். என்ன போக்கிரித்தனம் பாரும். அதிவேகத்தில் வரும் வண்டியை அவனுக்காக நிறுத்துவதென்றால் சாத்தியமான காரியமா ?" என்றார்.

"அப்புறம், அந்தப்பையன் எப்படிப் போனான்?" என்று ஐயர் திடுக்கிட்டு வினவினார்.

"எப்படிப்போகிறது. ஏதோ நல்லவேளை வண்டி அவன் ஓரமாய்ப்போனது. சக்கரத்துச் சேறுதாங்கி (Mud-guard) பையனை மோதிக் கீழே தள்ளிவிட்டது" என்றார் செல்வர்.

இதைக் கேட்ட ஐயர் மனைவி, "போகிறது. அந்தக் குழந்தைக்கு ஒன்றும் ஆபத்து நேரவில்லையே?" என்று ஆவலோடு கேட்டாள்.

"ஓ, அதெல்லாம் ஒன்றுமில்லை. பயல் குட்டிக்கரணம் போட்டுக் கொண்டு ஒரு மரத்தடியிற் போய் விழுந்துவிட்டான். ஆனால், அவன் உயிர்தப்பியதுமட்டும் ஆச்சரியந்தான்" என்றார் செல்வர்.

முத்தையன், செல்வரை இமைகொட்டாமல் உறுத்து நோக்கி ஞன். இரண்டொருமுறை பேச நாவெடுத்தான். நா எழவில்லை. பிறகு, மிகவும் கஷ்டத்துடன் பேசத்தொடங்கி, "நீர்—நீர் வண்டியை நிறுத்தித் திரும்பிப்போய் அந்த— அந்தப் பிள்ளையின் கதி—என்ன வாயிற்றென்று பார்த்தீரா?" என்று மாறுபட்ட குரலுடன் கேட்டான்.

செல்வர் அவனை வெறுப்புடனும், அலட்சியத்துடனும் நோக்கி, "வண்டியை நிறுத்துவதா? திரும்பிப்போய்ப் பார்ப்பதா? எதற்காக? பைத்தியக்காரா! குறித்த நேரத்தில் குறித்த இடத்துக்குப் போய்ச் சேரவேண்டுமென்று நான் எவ்வளவு அவசரமாய் வந்தேன், அந்த அவசரத்தில், அதற்கெல்லாம் நேரம் எது? மேலும் அந்தப் பயல் தப்பிப் பிழைத்து விட்டான்" என்ருர்.

முத்தையன் மிகவும் கோரமான குரலில், செல்வரை வெறித்து நோக்கி, "உமக்கு நிச்சயமாய்த் தெரியுமா? நிச்சயமாய்—உமக்கு—தெரியுமா?" என்று கேட்டான்.

செல்வந்தர் சிறிது அச்சத்துடனும் கோபத்துடனும் அவனை நோக்கி "நிச்சயமாயா? பின்னை என்ன? நிச்சயமாய்த் தெரியாமலா சொல்கிறேன்? என்னை யாரென்று நினைத்து நீ இந்தக் கேள்விகளெல்லாம் கேட்கிருய்? அவன் பிழைத்தது நிச்சயமாய் எனக்குத் தெரியவேண்டு மென்பதென்ன? எவனே ஒரு பிச்சைக்காரப்பயல் பெற்றுத்தெருவில் அலையவிட்டிருக்கும் ஒரு துஷ்டக் குழந்தை எப்படிப்போனுல் எனக்கென்ன வந்தது! அந்த விதமான பொடியன்களுக்குக் கணக்கே இல்லை. தடிப்பயல்கள் குடிக்கக் கூழில்லாவிட்டாலும், பன்றி குட்டி போட்டாற்போல, வதவதவென்று பிள்ளைகளைப் பெற்றுத் தள்ளிவிடுகிருர்கள். எங்குபார்த்தாலும் இந்தப் பிச்சைக்காரக் குட்டிகளாய்த்தான் இருக்கிறது. இந்தப் பாழும் பசங்கள் நடுரோட்டில் திரிந்து கொண்டிருக்கிறது, மோட்டாரில் போகிறவர்களுக்கு எவ்வளவு நியூஸன்ஸாக (Nuisance) இருக்கிறது தெரியுமா? இவைகளில் இரண்டொன்றுவண்டியிலகப்பட்டுசெத்தால் தான் இப்பொழுது என்ன நஷ்டமாய்விட்டது?" என்று இவ்வாறு

சொல்லிவந்தவர் திடீரென்று "ஏய்! ஏய்!! அடே! என்ன இது! என்ன இது!! எட்டிப்போ! எட்டிப்போ" என்று கூவினார்.

ஏனெனில், அவர் சொல்லிவந்ததைக் கேட்டுக்கொண்டு நின்ற முத்தையன் திடீரென்று அவர் மீது பாய்ந்து சீற்றங் கொண்ட சிறுத்தைபோல், உக்கிரத்துடன் அவர் கழுத்தைப் பிடித்துக் கீழே தள்ளி, அவர் மார்பில் ஏறி உட்கார்ந்து கொண்டு அவர் தொண்டையை நெரித்தான்.

செல்வவந்தர், மூச்சுத் திணற, "ஐயோ, ஐ—யோ! கொல்—று—னே!" என்று கூவினார்.

சுற்றி நின்றவர்கள் எல்லோருக்கும் முத்தையனை நன்றாய்த் தெரியும். அவர்கள் முத்தையன் செயலைக் கண்டு அச்சமும், ஆச்சரியமுங் கொண்டவர்களாய் இன்னது செய்வதென்று தோன்றாமல் திக்பிரமை கொண்டிருந்தார்கள். ஐயர்மட்டும் உடம்பெல்லாம்நடுங்க, வாய் குழற, சற்று எட்டிச் சென்று நின்று கொண்டு, "அப்—பா—முத்— தையா" என்று கூறி மேல் ஏதும் கூறுவதற்கு முடியாமல் விழித்தார்.

முத்தையனோ ஆவேசங் கொண்டவனைப் போல், தன் சுவாசத்தை அடக்கி தன் முழு பலத்துடனும் செல்வரை அழுத்திக் கொண்டு, தடித்தகுரலில், "அடா, பாவி, உனக்குத் தண்டனையை தெய்வம் கொடுக்கும்! இதோ உன்னை யமபுரத்துக்கு அனுப்புகிறேன்" என்று சொல்லித் தன் இடக்கரத்தால் அவர் கழுத்தைக் குரங்குப் பிடியாய்ப் பிடித்து அழுத்திக்கொண்டு, வலக்கரத்தால் தன் இடையிற் செருகியிருந்த கத்தியொன்றை உருவி, ஆச்சரியப்படத் தக்க விரைவுடனும் ஆவேசத்துடனும், அவர் தொண்டையில் அழுந்த ஓங்கி, பின்வரும் பெரும் பலனை ஒரு சிறிதும் லட்சியம் செய்யாத கொடிய கோபாவேசத்துடன், இரத்தம் பீறிட்டுப் பார்க்கப் பயங்கரமாய்த் தரையில் ஆறுபோல் ஓடும் வரையிற் குத்தினான்.

இவ்வளவு செயல்களும் ஓர் அரை நொடியில் நிகழ்ந்துவிட்டன. சுற்றியிருந்த ஜனங்கள், அதுகாறும் மந்திரத்தாற் கட்டுண்டவர்கள்

போல், பிரமையால் மரங்களென நின்றிருந்தனராயினும், இரத்தப் பெருக்கைக் காணவும் தங்கள் பிரமையெல்லாம் நீங்கி, உடல் நடுங்கி, உள்ளங்கலங்கி, "ஐயோ! ஐயோ! இதென்ன கோரம்!" என்றும், "கொலை! கொலை!" என்றும், இன்னும் பலவாறாகவும் கூச்சலிட்டு ஆரவாரஞ் செய்தார்கள். செல்வருடன் வந்த சாரதி, தானும் அவருடன் வந்ததால் தனக்கும் அவர்கதி வந்துவிடுமோ என்றஞ்சினவனாய், போலீஸ்காரரை அழைத்து வருவதற்காக, அவ்விடம் விட்டு ஓடிவிட்டான். சத்திரப் பிராமணர் மூர்ச்சையாகிக் கீழே விழுந்துவிட்டார். கதவடியில் நின்று கண்வலை வீசிச் செல்வரை வசப்படுத்த வந்த பார்ப்பனி, அவர் முத்தையன் கைவசப்பட்டுப் படும் பாட்டைக் காணவும், நடுநடுங்கி உடல் சிலிர்க்க,முகம் வியர்க்க, "ஐயோ,தெய்வமே! ஐயோ, தெய்வமே!" என்று அலறிக்கொண்டு உள்ளே ஓடிவிட்டாள். முத்தையன் வந்தது முதல் அவன் செயல்களைக் கவனித்துக் கொண்டு உள்ளிருந்த அன்பானந்தர், மிகவும் வருத்தமும் கலக்கமுமுற்றாராயினும், வாயைத் திறவாமலும், தம் மறைவிடத்தை விட்டு வெளிவராமலும், குரங்கை மடியில் வைத்து அணைத்துக் கொண்டு சிந்தாக்கிராந்தராய் சுவர்மீது சாய்ந்து சோக முற்றிருந்தார்.

சில நிமிஷங்களுக்குள் சத்திரத்து வாயிலில் ஜனங்கள் மிகுதியாய் வந்து கூடிவிட்டார்கள். 'முத்தையன்! வண்டிக்கார முத்தையன்' என்று மிகவும் அச்சத்துடன் இரகசியமாய் ஒருவர்க் கொருவர் சொல்லிக் கொண்டார்கள். அப்போது அக்கூட்டத்தாருள் சிலர், மனத் துணிவுடன், இன்னும் செல்வரை இறுகப் பிடித்திருந்த முத்தையனைக் கட்டிப் பிடித்துக்கொண்டு, செல்வர் கழுத்தைப் பிடித்திருந்த அவன் பிடியை மிகவும் கஷ்டத்துடன் விடுவித்து அவனை அப்புறத்தில் இழுத்து வந்தார்கள். செல்வர் உடலம் பிணமாய்க் கீழே விழுந்தது! முத்தையன் குத்திய முதற் குத்திலேயே அவர் உயிர் போய்விட்டது.

முத்தையன், செல்வர் பிடியை விடுவித்து, இப்பாற் கொண்டு வரப்பட்ட பிறகு, ஆவேசம் அடங்கியவனைப்போல் அமைதியுற்றானாயினும், பிணமாய் விழுந்து கிடக்கும் செல்வர் முகத்தையே உற்று நோக்கிக் கொண்டிருந்தான். அச்சமயத்தில், கொலையுண்ட செல்வ

ரின் சாரதி இரண்டு போலீஸ் சேவகர்களோடு அவ்விடத்திற்கு வந்தான். சேவகர்களைக் காணவும், ஜனங்களுக்குள் ஆரவாரம் சிறிது அடங்கி, ஒருவகையான அமைதி பிறந்தது. முத்தையனைப் பிடித்திருந்தவர்களும், அவனைத் தம் பிடியினின்று விடுவித்தார்கள். என்னை விட்டு விடுங்கள்' என்று சொல்வது போலத் தன் இருகைகளையும் நீட்டி, அவர்களை எதிர்கொண்டுசென்று, "இதோ, நான் தயாராயிருக்கிறேன். நான்தான் கொலை செய்தவன்" என்றான்.

அவர்கள் இருவரும் அவனை உற்று நோக்கினார்கள். அவர்களில் ஒருவன் முன்ஜாக்கிரதையாக, முத்தையன் நீட்டிய கைகள் இரண்டையும் சேர்த்து விலங்கு பூட்டினான். மற்றவன் திண்ணையிற் கிடந்த பிணத்தைக்கண்டு, அக்கோரக் காட்சியைக் காணச்சகியாமல், முகத்தை வேறுபுறமாகத் திருப்பிக்கொண்டு "அதன்மேல் ஏதையாவது போட்டு மூடுங்கள்" என்றான். அந்தப்படியே, சிலர், சற்றுமுன் மனிதனயிருந்து, இப்பொழுது மனிதப் பிணமாய்க்கிடக்கும் உடலைத் துணியால் மூடி மறைத்து விட்டார்கள்.

பிறகு, பிணத்தை மூடும்படிசொன்ன சேவகன், தன் சட்டைப் பையில் இருந்த ஒரு நோட்டுப் புஸ்தகத்தையும் பென்ஸிலையும் எடுத்துக்கொண்டு, சட்டப்படி தான் கேட்கவேண்டிய கேள்விகளைக் கேட்கத் தொடங்கி, "இந்தக் கொலை எப்படி நேரிட்டது?" என்று வினவினான்.

அநேகர், ஆவலோடு அக்கேள்விக்கு விடைசொல்ல முன்வந்தார்கள். ஆனால், செல்வவந்தருடைய சாரதி அவர்களையெல்லாம் கையமர்த்திவிட்டு, இறந்துபோனவர் இன்னாரென்பதைம், அவர் மோட்டார்வண்டியில் இன்ன இடத்துக்குப் போவதாக வந்தாரென்பதையும், மோட்டார் இடைவழியில் பழுதுபட்டுப் போய்விட்டபடியால் இச்சத்திரத்தில் தங்கும்படி நேர்ந்தது என்பதையும், சத்திரத்துத் திண்ணையில் உட்கார்ந்து சத்திரத்துப்பிராமணரோடு வார்த்தையாடிக் கொண்டிருந்ததையும், அச்சமயம் கொலைசெய்து இப்பொழுது கைதியாய் விலங்கிடப்பட்டு நிற்பவன் ஒரு மூட்டையோடு அங்கு வந்து தன் எஜமான் எதிரே உட்கார்ந்ததையும், அவன் தன் எஜமானேடு

வார்த்தையாடத் தொடங்கியதையும் இன்னும் தனக்குத் தெரிந்த பிற வாலாறுகளையும் விவரமாய்க் கூறினன். அவன் கூறிய யாவற்றை யும் சேவகன் தன் புத்தகத்தில் எழுதிக்கொண்டான்.

பிறகு, அச்சேவகன் "சத்திரத்துப் பிராமணர் எங்கே?" என்று கேட்டான். கொலை நடந்ததால் உண்டான ஆரவாரத்தில், ஒருவரும் மூர்ச்சையுற்று விழுந்திருந்த பிராமணரைக் கவனிக்கவில்லையாகை யால், அவர் விழுந்தவிடத்திலேயே கிடந்தார். சேவகன் அவரைப் பற்றிக்கேட்ட சமயத்தில்தான் அவருக்குச் சிறிது மூர்ச்சை தெளி ந்து பிரக்ஞை வந்தது. அவர் கீழே கிடப்பதைக்கண்ட சிலர் "இதோ, இருக்கிறார்! இதோ இருக்கிறார்!" என்று சொல்லி, அவரரு கிற்சென்று "சாமி, சாமி! எழுந்திருங்கள். ஐயா கூப்பிடுகிறார்" என் ரார்கள்.

ஐயர் மெல்ல எழுந்து, "யார், யார் கூப்பிடுகிறது?" என்றார்.

"இப்படி வாரும், ஐயரே! நான் தான் கூப்பிட்டேன்" என்றான் சேவகன்.

முத்தையன் விலங்கிடப்பட்டு நிற்பதையும், அவனுக்கருகே இரண்டு சேவகர்கள் நிற்பதையும், ஜனங்கள் கும்பலாய்க் கூடியிருப் பதையும் காணவும், ஐயருக்குக் கொலை நடந்தது ஞாபகத்திற்கு வந் தது. சேவகர்கள் தம்முடைய வாக்கு மூலத்தைக் கேட்கக் கூப் பிடுகிறார்கள் என்பதும், அவருக்கு நன்றாய் விளங்கியது. இந்தக் கொலை சம்பந்தமாகத் தம்மையும் கச்சேரிக்கு இழுப்பார்கள் என்ற எண்ணம் தோன்றவும், அவருக்கு அச்சம் உண்டாய்விட்டது. குளிர் மிகுதியால் நடுக்கம் உண்டாவதைப்போல், அவருக்கு நடுக்கம் உண் டாயிற்று. திரும்பவும் மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்து விடுவார் போ லிருந்தது. ஆனால், அருகே இருந்தவர்கள், அவரைவிழ வொட்டாமற் பிடித்துக்கொண்டார்கள்.

சேவகன் அவரை நோக்கி, "ஐயரே! நீர் ஏன் பயப்படுகிறீர், உமக்கு ஒன்றும் கெடுதல் நேரிடாது. இந்தக் கொலை சம்பந்தமாக உமக்குத் தெரிந்ததை மட்டும் சொல்லிவிடும். அவ்வளவுதான்" என் றான்.

ஐயர் தமக்குத் தெரிந்ததை யெல்லாம் கூறிவிட்டு முடிவில், "முத்தையனை எனக்கு வெகுநாளாய்த் தெரியும். எனக்கு மட்டுமல்ல, இவ்வூரில் அவனைத் தெரியாதவர்கள் ஒருவருமில்லை யென்றே சொல்லலாம். அவன் இந்தக் கொலையைச் செய்திருப்பான் என்று, கண்ணாற் கண்டவர்கள் தவிர வேறு எவரும் சொல்ல மாட்டார்கள். அவன் அவ்வளவு யோக்கியன். என்னமோ, அவனுடைய கெட்ட காலம் இப்பொழுது இப்படிச்செய்து விட்டான்" என்றும் கூறினர்.

அப்பால், சேவகன் முத்தையனை நோக்கி, "நல்லது, நீ இப்பொழுது எங்களுடன் போலீஸ் கச்சேரிக்கு வரவேண்டும்" என்றான்.

"ஆகா, அப்படியே வருகிறேன். உங்களுக்கு ஏதும் தொந்திரவு கொடுப்பேனென்று நினைக்கவேண்டாம். நீங்கள் எங்கே கூப்பிடுகிறீர்களோ அங்கேவாச் சித்தமாயிருக்கிறேன். ஆனல் நான் வருவதற்கு முன் இங்குள்ளவர்களுக்கு ஒரு விஷயம் சொல்லிவிட்டு வரவேண்டும்" என்றான் முத்தையன்.

சேவகன் அவனைக் கடிந்து நோக்கி, "அதெல்லாங் கூடாது. இப்பொழுது நோய் எங்களுடன் வரவேண்டும்" என்றான்.

முத்தையன் தலையை அசைத்துக்கொண்டு "இல்லை, நான் சொல்ல விரும்பியதைச் சொல்லிவிட்டுத்தான் வருவேன்" என்று சேவகனை நோக்கிக் கூறிவிட்டுத் தன்னைச் சூழ இருந்த ஜனங்களைச் சுற்றி நோக்கி, "நீங்கள்—நீங்கள் எல்லாரும்—அதோ" என்று மூடப்பட்டுத் திண்ணையிற் கிடந்த பிரேதத்தைக் கோபத்துடன் நோக்கிச் சுட்டிக்காட்டி, "அதோ,—பிணமாய்க் கிடக்கும் அந்த மனிதனை—யாதொரு காரணமுமில்லாமல்—நான்—கொன்றதாக நினைக்கிறீர்கள். அது தவறு. நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுவாகநிற்கும் தெய்வம் அறியச் சொல்கிறேன்—அவனைக் கொன்றதற்குக் காரணம் உண்டு. அந்தக் காரணமும்—நியாயமான காரணம்!—கொடிய காரணம்! என் நெஞ்சைப் பிளக்கத்தக்க காரணம்! நான் கொலைகாரன் என்பது மெய்யே. ஆனல், அதோ பிணமாய்க் கிடக்கும் அந்தப் பாவியும் ஒரு படுகொலைகாரப் பாதகன் தான். இதோ பாருங்கள்" என்று

சொல்லி, விலங்காற் பிணிக்கப்பட்ட தன் கைகளை நீட்டி, மற்றொரு திண்ணைமீது, தான் வரும்போது தன்னோடு கொண்டு வந்து வைத்த மூட்டையைக் காட்டி, "இதோ இதைப் பாருங்கள். பார்த்துவிட்டுப் —பிறகு—நான் காரணமில்லாமல் கொலை செய்தவனா, அல்லவா என்று சொல்லுங்கள்" என்றான்.

சேவகர்களுள் ஒருவன், அவன் காட்டிய மூட்டையைக் கண்டு, அதனருகே சென்று, மிகவும் பரபரப்புடனும் அச்சத்துடனும் அதன்மேற் சுற்றியிருந்த துணியை மெல்ல நீக்கினான். உடனே அவன் "ஆ!" என்று திடுக்கிட்டு அதை அப்படியே விட்டு விட்டு எட்டிச் சென்று, தன் கண்களைக் கையால் மூடிக்கொண்டான். அதைக் கண்ட எல்லோரும், அவன் பிரித்த மூட்டையுள் இருப்ப தென்னவென்று நோக்கியபோது, இறந்துபோன ஒரு குழந்தை— வட்டமுகமும், சுருண்ட தலைமயிரும் உடைய ஓர் அழகிய சிறுவன் தன் சிறு வாயில் புன்னகை தவழ்ந்தபடி, தன் சிறுவிரல்களால் ஒரு சிறு மூங்கிற்கோலைப் பிடித்தபடி—உறங்குவதுபோலக்—கிடக்கக் கண்டார்கள். அவர்களுள் பலர் அக்குழந்தையை அறிவார்களாதலால், "ஐயோ, பாவமே! முத்தையன் குழந்தையல்லவோ அது!" என்ற மொழிகள் பலர் வாயிலிருந்து வந்தன. பின்னர், சிறிது நேரம் அவ் விடத்தில் ஆழ்ந்த அமைதி பரவியிருந்தது. எல்லோரும் மிகுந்த விசனமுற்று நின்றார்கள். சிலர் கண்களில் நீர் அரும்பியது; சிலர் தம் முகத்தைக் கையால் மூடிக்கொண்டு பொருமினார்கள்; சிலர் பெரு மூச்செறிந்தார்கள்.

வெளியில் நடக்கும் அனைத்தையும் உள்ளிருந்து பார்த்துக் கொண்டிருந்த அன்பானந்தர், முத்தையன் குழந்தையின் பிரேதத் தைப் பார்க்க முடியாவிட்டாலும், முத்தையன் குழந்தை பிரேதமாய்த் திண்ணையில் இருக்கிறது என்பதை அறிந்துகொண்டார். அதை அறிந்தவுடன் அவருக்கு அடங்காத் துயரம் உண்டாயிற்று. தம்மை எவராவது அடையாளங் கண்டுபிடித்துக் கொள்ளக் கூடும் என்ற அச் சம் இல்லாவிட்டால், அவர் வெளியே ஓடிவந்து அப்பிள்ளையைக் கட் டியணைத் தெடுத்து முத்தமிட்டுப், பெண்மக்கள் போல வாய்விட் புலம்பிப் பரதவிப்பார். அவ்விதம் செய்ய முடியாமையால், அவர்

உள்ளத்துண்டான துயரமெல்லாம் நீராய் உருகி, அவர் இருவிழிகளின் வழியே அருவிபோல் ஒழுகியது.

ஒருநாள் கட்டில், தன்மீது மிகுந்த அன்புகொண்டு, இப்பொழுது, இறந்துபோன தன் பிள்ளையைப் பாராதிருந்தும், அப்பிள்ளை இறந்ததைக்குறித்து மனம் வருந்திக் கண்ணீர் பெருக்கும் அன்பானந்தர் உள்ளிருக்கிறார் என்பதை ஒரு சிறிதும் அறியாத முத்தையன் தன்னைச் சூழ, அமைதியுடனும் துயரத்துடனும் நிற்கும் ஜனங்களை ஒரு முறை சுற்றி நோக்கிய பிறகு, துயரத் தீயால் நீர் அறவற்றிய தன் கண்களால், தன் அருமைக்குழந்தையின் தாமரை மலர்போல் மெல்லிய இளைய சிறிய உடலும் உயிரின்றிப் பிணமாய்க் கிடப்பதை, அளவு மீறிய அருந்துயரத்தோடு சிறிது நேரம் இமைகொட்டாமற் பார்த்திருந்து, பின்னர் மீட்டும் தன்னைச் சூழ இருந்த ஜனங்களைச் சுற்றி நோக்கி, "இப்பொழுது எல்லாம் விளங்கிவிட்டதல்லவா?—நீங்கள் அனைவரும் நன்றாய் அறிந்துகொண்டீர்களல்லவா?—இந்த மோட்டார் வண்டி என் சிறுவனைக் கொன்றுவிட்டது!—அவன் சாலையில் விளையாடிக்கொண்டிருந்தான். அப்பொழுதுதான், அவனுக்குச் சிறிது தூரம் பின்னாக, என் பாரவண்டியை ஓட்டிக்கொண்டு வந்தேன்.—இந்தப் பாழும் மோட்டார் வண்டி என் வண்டியைக் கடந்து, சொல்ல முடியாத வேகத்திற் செல்லுவதைப் பார்த்தேன். விளையாடிக்கொண்டிருந்த சிறுவனை, தூரத்தில் வரும்போதே கவனித்து வந்தேன். ஆதலால் மோட்டார் வண்டி சென்ற வேகத்தில், எங்கே என்மகன் அதில் அகப்பட்டுக் கொள்ளுகிறானோ என்று அஞ்சி; வண்டி வேகமாய்ப் போகாதென்று அதை ரோட்டிலேயே விட்டு விட்டு, நான் கீழே குதித்து என் மகனைக் காப்பாற்ற ஓடோடியும் வந்தேன். நான் குழந்தையிருந்த இடத்திற்கு வருவதற்குள், கொலை பாதக மோட்டார் வண்டி என் கண்ணுக்கு எட்டிய தூரத்துக்கு மேற் போய்விட்டது. நான் பையன் அருகே செல்லும்போது 'அப்பா' என்று கூவி அவன் தரையில் ஒரு முறை புரண்டான். அப்பொழுதே எனக்குப் பாதிப்பிராணன் போய் விட்டது. தெய்வத்தை வேண்டிக் கொண்டு நான் ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து மகனைக் கையில் எடுத்தேன். ஆ! தெய்வம் என்னைக்

கைவிட்டு விட்டது! கையிலெடுத்த மகன் பிணமாயிருந்தான்! அவன் இனிய் குரல் ஓய்ந்து போயிற்று! பார்த்தாற் பசிதீரும் அவன் அழகிய முகம் நகை இழந்தது. என் உயிரும் என் அன்பும், என் இன்பமுமா யிருந்த அவன், உயிரற்ற பாவைபோல் என் கைகளில் இருந்தான்—" என்று சொல்லி வரும்போது அவன் உடல் நடுங்கிற்று. சற்று நேரம் அவன் பேசாமல் இருந்த பிறகு தான் சொல்லி வந்த வரலாற்றைத் தொடர்ந்து, "அப்பொழுது என் மனம் பட்ட பாட்டை ஈசன் அறிவான். அதற்கு மேல் நான் என்ன செய்வேன்? பிரேதத்தை என் மேல்துண்டினால் சுற்றிக் கையில் எடுத்துக்கொண்டு அதைக் கொன்ற மோட்டார் வண்டியை—அது எங்குச் சென்றிருந்தா லுஞ் சரி—எத்தனை காதம் போயிருந்தாலும் சரியே—கண்டு பிடிப்பதென்று தீர்மானித்து, அது சென்ற வழியைத் தொடர்ந்து சென்றேன்—இரண்டு மூன்று மைல்தூரம் வந்தபிறகு இச்சத்திர வாசலில் அவ்வண்டி நிற்பதைக் கண்டேன். அதனால், துயரம் பொங்கி வழிந்து கொண்டிருக்கும் அச்சமயத்திலும் என் மனத்தில் ஒரு வகை மகிழ்ச்சி தோன்றியது. இவ்வளவாவது கடவுள் நமக்கு உபகாரம் செய்தாரே என்று கருதி அவரை ஸ்தோத்தரித்து விட்டு, என் பிள்ளையைக் கொன்றவன் எவனாயிருந்தாலும் அவனைக் கொன்று பழிக்குப்பழி வாங்கி விடுவதாக எனக்குள் சபதம் செய்து கொண்டு விரைந்து வந்தேன்—வந்து சபதத்தை நிறைவேற்றி விட்டேன்" என்று சொல்லி முடித்துச் சிறிது நேரம் மௌன முற்றிருந்து பிறகு தன் கைகளை சேவகனெதிரே நீட்டி "தயவு செய்து—நான் செல்வதற்கு முன்—என் மகனைக்கையிலெடுத்து—ஒரு முத்தமிட உத்திரவு கொடுப்பீர்களா?" என்று கேட்டான்.

சேவகர்கள் இருவரில் தலைமையானவன், 'அப்படியே செய்யலாம்' என்று சொல்வதற்குப் பதிலாகத் தலையை அசைத்தான். ஏனெனில்,அவனால் பேசமுடியவில்லை. ஆயினும். தலையை அசைத்ததோடு நில்லாமல், அவன் கைகளைப் பிணித்திருந்த விலங்கைக் கழற்றிக் கீழே எறிந்து விட்டான்.

விலங்கினின்று விடுபட்டவுடன் முத்தையன், உடல் தள்ளாடத் தன் குழந்தை யிருந்த இடத்தை நோக்கி மெல்ல நடந்தான். குழந்-

தையைச் சுற்றி நின்றவர்கள் அவன் வருவதையறிந்து விலகி வழி விட்டு நின்றார்கள். அவன் தன் குழந்தை அருகிற் சென்று முழங்கா லிட்டு உட்கார்ந்து, தன் இடதுகையை மெல்ல அக்குழந்தையின் பிடரியிற் கொடுத்து அதன் சிரத்தைச் சற்று உயர்த்திக் கொண்டு, அதை நோக்கி ஒரு முறை பெருமூச் செறிந்து, பிறகு, அந்நிலையிலேயே ஜனங்களைநோக்கி, "ஐயா, நீங்கள் எல்லாம் மனிதர்கள் தானே! பெற்ற பிள்ளை மேல் பெற்றவனுக்கு உள்ள பிரியம் எவ்வளவென்று உங்களுக்குத் தெரியாதா! என் மகன்—இம் மகன்—உடம்பெல்லாம் இன்ப வடிவாயிருந்தான். ஆ, மழலைமாறு அவன் பேச்சுகளும் எப்பொழுது பார்த்தாலும் சிரித்தவடிவாயிருக்கும் அவன் முகமும்—ஆ, இனி நான் கேட்பதெப்போது? காண்பதெப்போது? கேட்டார் மனங்களிக்கும் அவன் மழலைச் சொற்களும், பார்த்தால் கண்குளிரும் அவன் தாமரை முகமும், பாழும் மோட்டார் வண்டியின் சக்கரத்துக்குள் மறைந்து போயினவே" என்று கூறிச் சிறிது நேரம் மௌனமாய் அக்குழந்தையைத் திரும்பிப் பார்த்திருந்து, மீண்டும் ஜனங்களை எறிட்டு நோக்கி, "அன்பர்களே! நாம் ஏழைகள், கூலிக்காரர்கள், இன்னும் இப்படிப்பட்ட தாழ்ந்த நிலையில் உள்ளவர்கள்! நம்மேல் ஏறிச் சவாரி செய்யும் பணக்காரர்களை—செல்வர்களை—அந்தஸ்து வாய்ந்தவர்களை—எதிர்க்க நம்மால் ஏலாது! நமக்கு நியாயம் இல்லை—ஏனென்றால் நியாயத்துக்குக் கொடுக்க நம் கையிற் பணமில்லை! நியாயவாதிக்குக் காணிக்கை கொடுக்கவாவது, நியாயாதிபதிக்கு விருந்தளிக்கவாவது, நம்மால் முடியாது. பணமுடையவர்கள் பலவும் செய்ய முடியும். அவர்கள், தம் இஷ்டம்போல், தங்கள் பைசாச மோட்டார் வண்டியின் கீழ் நம்மைப் போட்டு நசுக்கிக்கொண்டு போகலாம்! நமக்கு நேரிடும் நஷ்டமும், கஷ்டமும், துன்பமும், துயரமும், மரணமும் மற்ற இடுக்கண்களும் 'எதிர்பாராமல் நேர்ந்தன' 'வேண்டுமென்று செய்தனவல்ல' என்று அலட்சியமாய்த் தீர்ப்புச் செய்து, அவர்களை ஆதரிக்கும் நியாயசபைகளிருக்கின்றன — நியாயாதிபதிகளிருக்கின்றனர்! ஆனால், பணம் படைத்த அவர்கள் தம் இஷ்டம் போல் கொலை செய்யக் கூடுமானால்,—தெய்வமே!—பலம்படைத்த நாம் நம் இஷ்டம் போல் கொலை செய்யக் கூடாதா? கூடும்! நம் குழந்தைகளைக் கொல்லும் அவர்களை, ராஜநியாயம் கொல்லாது விடு

மாயின், அந்நியாயத்தை நாம் கைப்பற்றிக்கொண்டு அவர்களைக் கொன்று நியாயத்தைச் சமநிலைப்படுத்த வேண்டும்—ஆம், அதனால் தூக்கு தண்டனைக்கு ஆளானால்தான் என்ன!'' என்று கூறிச் சற்று நின்றான்.

கூடியிருந்த ஜனங்களில் ஒருவராவது வாய்திறக்கவில்லை. எல்லோரும் சித்திரப் பதுமைகள் போல், முத்தையன் முகத்தையே நோக்கிக்கொண்டிருந்தார்கள். முத்தையன் மறுபடியும் பேசத் தொடங்கி, தன் குழந்தையின் பிரேதத்தைச் சுட்டிக் காட்டி,

"இதோ இச் சிறுவன் கிடப்பதைப் பாருங்கள்! ஐந்து வயது நிரம்பாத சின்னஞ் சிறுவன்! பால்மணம் மாறாப் பச்சைப் பாலகன்! வினையறியா விளையாட்டுப் பையன்! மரத்திற் பூக்கும் புஷ்பங்களையும், வானத்திற் பறக்கும் பறவைகளையும் கண்டு குதூஹலிப்பான்! காக்கை குருவிகளுக் கெல்லாம் அவனிடத்தில் பிரியம் அதிகம்! அவைகள் அவனோடு விளையாடும்! 'கொக்காக்கோ' என்று கூவிக்கொண்டு கோழிகளைத் துரத்தித் துரத்தி விளையாடுவான்! வெட்ட வெளியில் புற்றரையில் படுத்துக்கொண்டு, வானத்திற் பாடிப் பறக்கும் வானம் பாடிப் பறவையோடு தானும் பாடுவான்! நிலாக்காலத்தில், மரக்கிளையொன்றில் ஏணைகட்டி, அதில் அவனைக் கிடத்தி, நான் ஊசலாட்டுவேன்,—அப்பொழுது அவன் வானத்தில் தவழும் அம்புலியைச் சுட்டிக்காட்டி, 'அம்மா அங்கே இருக்கிறாள்! அம்மா, வா, வா! அம்புலி வா, வா!' என்பான்! ஐயோ! இனி, அவனுக்கு நான் எந்த மரக்கிளையில் ஏணை கட்டப் போகிறேன்! எந்த ஏணையில் அவனைக் கிடத்தப் போகிறேன்!'' என்று கூறிப் பின்னும் குழந்தையை நோக்கி "என் செல்வா! என் கண்ணே! தெய்வங் கொடுத்த தெவிட்டாத் தேனே! கொலையுண்டாயே! படுகொலைக் காளானாயே! என்னைத் திரும்பிப் பாராமல் ஓடி யொளித்தாயே! காண்பேனோ நான் இனி என் கண் மணியை! கடவுளே! கடவுளே!'' என்று கதறினான்.

பிறகு அவன், அக்குழந்தையை இருகையாலும் வாரியெடுத்துக் கையில்வைத்து, மார்பில் அணைத்து, அதன் இருசிறு கன்னங்களையும், மெல்லிய உதடுகளையும், அழகிய கண்களையும் மாறி மாறி, மாறி

மாறி முத்தமிட்டான். அப்பால் அதைத் தன் மார்போடு இறுகத் தழுவிக்கொண்டு, திரும்பவும் ஜனங்களை நோக்கி,

"ஆ, என்ன வேளையில் வீட்டை விட்டு வெளிப்புறப்பட்டேனே! திரும்பவும் வீட்டிற்குள் நுழைவதற்கில்லாமல் போய் விட்டது! இன்றெல்லாம், ஏதோ என்னை அறியாமல் என் மனத்தில் ஒரு வகைக் கலக்கம் ஏற்பட்டிருந்தது! 'அவன்மீது அதிக ஆசை வைக்காதே. ஆசை வைத்தால்தான் தெய்வங் கொண்டுபோய் விடுகிறதே' என்று யாரோ சொன்னார்கள்.—ஆம், நேற்றிரவு, ஈரோட்டில் சாப்பாட்டுக்கடைக்காரன் சொன்னான். ஆமாம், நன்றாய் ஞாபகம் வருகிறது ! அவன் என்ன செய்வான் பாவம்! வேண்டு மென்று சொல்லவில்லை.—பிறகு அதைப்பற்றி அவனே விசனப்பட்டான்! அவன் மேல் குற்றமில்லை—பின்னால் வரும் விபரீதம் முன்னால் அவனை அவ்வாறு கூறச்செய்தது!—எச்சரிக்கையாகக் கூறச் செய்தது! பாவி நான் அதை அறியாமற் போய்விட்டேன்! அறிந்திருந்தால் சந்தைக்குப் போகாமல் நேரே வீட்டுக்கு வந்திருப்பேன்! இப்படி வருமென்று நினைக்கவில்லை! கடவுளை நம்பியிருந்தேன்—கடவுள் மோசம் செய்து விட்டார்" என்று கூறித் தன் மார்பில் அணைத்திருந்த பிரேதத்தைக் கையில் எடுத்து வைத்துக்கொண்டு ஊசலாட்டி, "செல்வா! தாயை உரித்துக்கொண்டு பிறந்த தவப் புதல்வா!—உன்னை என்னிடம் ஒப்புவித்துவிட்டுப்போன அந்தப் புண்ணியவதி, உன் தாயைப் போலவே, மூக்கும், விழியும், முகமும் உடையவனாய், அவளை நினைத்து நான் வருந்தியபோதெல்லாம், நீ உன் முகத்தைக் காட்டி அவ்வருத்தத்தை ஆற்றிவந்தாயே! கண்ணைத் திறந்து என்னைப் பாராயா! தூங்கிவிட்டாயா?—அதற்குள்ளாகவா!—வேண்டாம், விழித்துக்கொள்!—விழித்து எனக்கு ஒரு முத்தம் கொடு!—ஒரே ஒரு முத்தம்!—செல்வா!" என்று புலம்பினான்.

இதுகாறும், கண்ணீர் சிந்தாதிருந்தவர்களும், இப்பொழுது இவன் படும்பாட்டைக் கண்டு, கலகலவென்று கண்ணீர் உதிர்த்தார்கள். முத்தையனைக் கைதிசெய்யவந்த போலீஸ் சேவகர்களும் கண்ணீர் அரும்பினார்கள். சத்திரத்துப் பிராமணர், தேம்பித் தேம்பி அழுதுகொண்டு, "முத்தையா! முத்தையா! வேண்டாம்!" என்றார்.

உடனே முத்தையன் அவரைத் திரும்பி நோக்கி, "அது யார்? முத்தையனு? ஆம். முத்தையன் நான்தான்! ஆனால் முன்னிருந்த முத்தையனல்ல—அந்த முத்தையன் போய்விட்டான்! எல்லாரிடத்திலும் அன்போடு, எல்லாருக்கும் நல்லவனாய், சதா சந்தோஷ சித்தனாய் இருந்தானே, அந்த முத்தையன் போய்விட்டான். இப்பொழுதுள்ள முத்தையன் பாவி முத்தையன்!—பித்தம் பிடித்த முத்தையன்!—பிள்ளையற்ற முத்தையன்!—கொலைகார முத்தையன்! இவனை என் கூப்பிடுகிறீர்கள்!" என்று சொல்லிவிட்டுக் குழந்தையின் பிரேதத்தைப் பார்த்து, "வா, வா, குழந்தாய்! வா! நேரமாயிற்று! வீட்டுக்குப் போகவேண்டுமல்லவா? போய்த் தூங்க வேண்டாமா? எத்தனை நாழி விழித்துக் கொண்டிருக்கிறது" என்று பித்தங் கொண்டவனைப் போல் புலம்பிவிட்டு, ஜனங்களை நோக்கி, "நண்பர்களே, போய் வருகிறேன்! உத்திரவு கொடுங்கள். உங்கள் அனைவரையும் எனக்குத் தெரியும்! என்னையும் உங்களுக்குத் தெரியும்! உங்களுக் கெல்லாம் நியாயத்தில் தானே விருப்பம்? எல்லோருக்கும் சமமான நியாயந்தானே நீங்கள் அனைவரும் விரும்புவது? பணக்காரர்களுக்கு ஒரு நியாயம், ஏழைகளுக்கு ஒரு நியாய மல்லவே நீங்கள் கோருவது! பாரபட்சமற்ற நியாயம்! நடுநிலைமையான நியாயம்!" என்று சொல்லி வரும் போது அவன் குரல் மாறுபட்டது! அவன் உதடுகளில் இரத்தம் தோன்றியது! அவன் முகம் வெளுத்தது! பருமரமொன்று முறிந்து விழுவது போல, அவன் மயக்க முற்று விழுந்தான்! ஆனால், அச்சமயம் அவன் அருகே இருந்த போலீஸ்சேவகருள் ஒருவன் அவனைத் தாங்கிக் கொண்டு, கண்களைக் கண்ணீர் மறைக்க, உரைகுழற "முத்தையா, என்ன இது! வருத்தப் படாதே! எழுந்திரு. இதுவா ஆண்பிள்ளைக்கு அழகு! விதியைத் தடுப்பவர் யார்! நீ இப்படி தைரியங் குறையலாமா! குழந்தையை இப்படிக் கொடு, நான் வைத்துக் கொள்கிறேன்" என்றான். ஏனெனில் முத்தையன் முகம் ஒருவகையான கோர மாறுதலை அடைந்து கொண்டு வந்தது. மூச்சுவிட முடியாமல் அவன் வாயைப் பிளந்து கொண்டு கஷ்டப்பட்டான்.

ஆனால், அந்நிலையில் அவன், "வேண்டாம்—வேண்டாம்! என் செல்வனை எடுத்துக்கொண்டு போய்விடாதே! அவன்—என்னுடனே

யே—இருக்கட்டும். கடவுள் நல்லவர்—மிகவும் நல்லவர்—எங்களைப் பிரியவிடமாட்டார்!' என்றான்.

அவன், திடகாத்திர தேகத்தின் உச்சி முதல் உள்ளங்கால் வரை ஒரு வகை வலிப்பினால், குலுங்கியது. அவனைத் தாங்கியிருந்த சேவகன், அமைதியாய் நின்ற ஜனங்களை நோக்கி உதட்டைப் பிதுக்கித் தலையை அசைத்தான்.

"ஆ, என்ன—என்ன அது?" என்று பலர் ஆவலோடு கேட்டார்கள்.

"என்ன அது! மரணந்தான்! அவன் இருதயம் உடைந்து போயிற்று!" என்று சேவகன் பதிலுரைத்தான்.

"அடடா! அடடா! என்ன காலம்! என்ன காலம்!" என்று துக்கித்துக் கொண்டு பலர் முத்தையனைச் சூழ நெருங்கி வந்தார்கள். சற்று முன் அங்கிருந்த அமைதி கலைந்து போயிற்று,

முத்தையன் உயிருக்கு ஏதோ ஆபத்து வந்து விட்டதென்பதை உணர்ந்த அன்பானந்தர், அதற்குமேல் உள்ளிருக்க மனம் பொறாதவராய், சூலைக் கையில் எடுத்துக் கொண்டு, 'வருவது வரட்டும்' என்று துணிந்து கதவைத் திறந்து கொண்டு வெளியே விரைந்து வந்து கூட்டத்தில் ஒருவராய்க் கலந்து முத்தையன் முகத்தைப் பார்த்தார்.

முத்தையன் பட்ட மரணாவஸ்தை யெல்லாம் முடிந்தது. அவன் முகம் சாந்த மடைந்தது. மரண அமைதி அவன் மீது பரவியது. ஆவி ஒடுங்கி விட்டது! முத்தையன், கொல்லப்பட்ட தன் குழந்தையோடும், தான் கொன்று பழிக்குப் பழி வாங்கிய தனவந்தரோடும், அவர்களைப் போலத் தானும் மோட்டார்வண்டிக்கு உயிர்ப்பலியாகி செல்வர் என்றும் வறியரென்றும், உயர்ந்தாரென்றுந் தாழ்ந்தாரென்றும் வேறுபாடு கொள்ளாது, எல்லாரையும் ஒப்பநாடி, அவரவர் செய்த வினைகளுக்குத் தக்க தண்டனையை அவரவர்க்கு விதிக்கும் யமபுரத்துக்குச் சென்றான்.

ஒரு கால், அங்குள்ள தெய்வ நியாயத்தில், தற்கால நாகரிகம் என்ற பெரும் போர்வையைப் போர்த்துக் கொண்டு அந்தஸ்தும் செல்வமும் உடைய பலர், தம் சுகத்தையும், தம் நலத்தையும், தம் பெருமையையுமே பெரிதாய்க்கொண்டு செய்து வரும் கொடிய செயல்கள், கொலைபாதகர் செய்யும் கொலைகளினும் கொடியனவாக மதிக்கப் படவும் கூடும்!

## XI

### பெருமழையும் புயற்காற்றும்.

ஒரு சிறுபொழுதில், மூவுயிர் கொலையுண்டு கிடக்கும் கொடுங்காட்சியைக் கண்ணுற்று நின்ற அன்பானந்தருக்கு, இப்பொழுது ஒரே ஒரு எண்ணம் முற்பட்டிருந்தது. அதாவது, கண்கொண்டு காணச் சகியாத கொடிய சம்பவங்கள் நிகழ்ந்த அவ்விடத்தைவிட்டு உடனே அகலவேண்டும் என்பதே அந்தப்படியே அவர் நெருங்கியிருந்த கூட்டத்தை மெல்ல விலக்கிக்கொண்டு தெருவுக்குப் போய்விட்டார்.

செல்லும் போது, இறந்துபோன சரீரங்களை அப்புறப்படுத்தும் படி சேவகர்கள் கட்டளையிட்டது அவர் காதிற் கேட்டது. ஜனங்கள் இன்னும் பலர், கொலை நடந்த விஷயத்தைக் கேட்டுச் சத்திரத்தை நாடி எதிரே வருவதையும் அவர் கண்டார். சிறிதுதூரம் செல்லவும், வேறு இரண்டு போலீஸ் சேவகர்கள் கொலை நடந்த இடத்தை நாடி விரைந்து செல்வதையும் பார்த்தார். எத்தனை சேவகர்கள் போய் என்ன! முத்தையன்—உத்தம குணமுடைய முத்தையன் இறந்து போய்விட்டான். பத்திரிகைகளுக்குச் சமாசாரம் அகப்பட்டது. என்ன பத்திரிகைகள்! காற்றடிக்கும் பக்கமாய் எல்லாம் பறக்கும்! ஒரு குழந்தை தற்செயலாய் இன்னார் மோட்டார்வண்டியில் அகப்பட்டு இறந்துபோய்விட்டது, அப்பிள்ளையின் தகப்பன் மூர்க்கதனமாயும் மூடத்தனமாயும் மோட்டார்வண்டிக்குச் சொந்தகாரராகிய இன்னாரைக் கொன்றுவிட்டுத் தானும் இறந்துபோய்விட்டான். கொல்லப்பட்ட தனவந்தர் மிகவும் உபகாரி, அவர் இறந்துபோனது

நம் நாட்டுக்கு ஒரு பெரியநஷ்டம். அவர் குடும்பத்தாருக்கு எமது அனுதாபத்தைத் தெரிவிக்கிறோம். தவிர இச்சம்பவம் பிள்ளைகள் உடைய பெற்றோர்களுக்கு ஒரு சிறந்த படிப்பினை ஆயிற்று. பிள்ளைகளைத் தம் மனம் போலத் தெருவில் விளையாட விடுவது மிகவும் தவறு' என்று முழ நீளம் சமாசாரம் வந்துவிடும்" என்று இவ்வாறுசிந்தித்துக் கொண்டு சென்றார்.

ஆனால், அவர் மனத்தை மிகவும் வருத்தியது, விதியின் கொடிய செயலே! நேற்று இரவுதான், நம்மைப்போல் ஒரு மனிதன், நம்மிடத்து உண்மை அன்பு காட்டப் பார்த்தோம். அந்த ஒரு மனிதன் இன்றிரவு முடிவதற்குள் இறந்துவிட்டானே! என்ன விதி! என்ன விதி! ஒரு நாய் அந்த வண்டியில் அகப்பட்டுச் சாவாமல் காப்பாற்றிய ஒரு கடவுள், பலருக்கு அன்பனாய், நல்ல குணமும் நல்ல எண்ணமும் உடையவனாய் இருந்த ஒரு மனிதனையும், ஒரு பாவத்தையும் அறியாத அவன் குழந்தையையும்,அகால மரணத்துக்குள்ளாக்கி விட்டாரே! இது என்ன கொடுமை! இது நியாயமா?—இவ்விதமான கொடுஞ்செயல்கள், விதியே காரணமாக நிகழலாமா?—எல்லாம் வல்ல கடவுள் இவற்றைத் தடுக்க முடியாதவரா? முடிந்தும், அவ்வாறு செய்ய அவர் முன்வரவில்லையென்றால், அவரைப் பெருங்கருணைக் கடவுள் என்று சொல்வது எப்படி? இத்தகைய கொடிய அக்கிரமங்கள் நிரம்பிய உலகத்தில் இருந்துகொண்டு, கடவுள், சர்வஜீவ தயாபரர் என்று நம்புவதெப்படி? என்ற இவ்விதமான எண்ணங்கள் பல எழுந்து அவர் மனத்தைக் கலக்கியது. அவர் அறிவு சுழற் காற்றில் அகப்பட்ட துரும்பைப்போல் சுழன்றது. சத்திரத்திற் கண்ட இரத்தப்பெருக்கு தம்மைப் பின் தொடர்ந்து ஓடி வருவது போல அவருக்குத் தோன்றியது. அதைவிட்டு அது தம் கண்ணுக்கு மறையும்படி சென்று விடவேண்டு மென்று அவர் விரைந்து நடந்தார்.

இரவு அமைதியாய் இருந்தது! ஆகாயத்தில் பூரணச் சந்திரன் பால்போல் நிலவொளி வீசிப் பிரகாசித்தது. காற்று மெல்லென்று குளிர்ந்து வீசியது. சிறிது தூரத்தில் ஏதோ ஒரு சிற்றாறு சலசல வென்று ஓடிவந்தது. ஆனால், அது ஓடிவரும் சத்தம், துன்பத்தில் ஆழ்ந்த ஓர் உயிர் பரிதாபகரமாகப் புலம்புவதுபோல் அன்பானந்தருக்குத்

தோற்றியது. சாலையில் ஜனங்களின் நடமாட்டம் காணப்படவில்லை. எங்கும் ஒரே வெட்ட வெளியாகத் தோன்றியது. உலகம் முழுவதும் பாழ்பட்டுக் கிடப்பது போல் காணப்பட்டது. அடர்ந்த இலைகளோடு கூடிய மரங்கள் காற்றில் மெல்ல அசைவது, கொடிய பைசாசங்கள் தலைமயிரை விரித்துத் தலையை ஆட்டிக் கொண்டு நிற்பதுபோல் இருந்தது. சாலையின் இருபுறத்திலும் காட்டானைகள் படுத்துக் கிடப்பது போன்று, உயரமும் பருமனும் உடைய கற்பாறைகள் சில காணப்பட்டன.

இவற்றைப் பார்த்துக்கொண்டு அன்பானந்தர் செல்லும்போது, காற்றின் இயல்பு மாறுவதாகத் தோன்றியது; அவர் உடம்பில் குளிர்ந்து வீசியது. வரவரக் காற்றின் வேகம் அதிகமாயிற்று. தன்னோடு விளையாடிக்கொண்டிருந்த நண்பன் சிறிது உரமாகத் தோளில் தட்டினால், 'சீ, சீ' என்று அவனை வைது தன் தோளைத் தடவிக்கொள்ளும் ஒருவனைப்போல, காற்றால் அடியுண்ட மரங்கள் 'சய் சய்' என்று சத்தமிட்டுத் தங் கிளைகள் ஒன்றோடொன்று உராயும்படி ஆடின. பால் போல் பிரகாசித்துக் கொண்டிருந்த நிலவின் வெளிச்சமும் மங்குவதாயிற்று. அன்பானந்தர் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தார். மேகக் கூட்டங்கள் திரண்டுவந்து கொண்டிருந்தன. அண்ணாந்து நோக்கிய அன்பானந்தர் கீழே குனிவதற்குள், சிறிதிருந்த நிலாவெளிச்சமும் மறைந்துவிட்டது.

ஆ, இயற்கையின் விந்தையே விந்தை! சற்றுமுன், மெல்லிய இனியகாற்று இடைதவழ, வெண்ணிலவின் ஒளியில், கம்பீரமாய் கண்ணைக் கவரும் அழகிய பூக்கள் இடை யிடையே தோன்ற, பச்சிலைகள்அடர்ந்து பார்ப்பதற் கின்பந்தரும் தோற்றத்தோடு நின்ற பரு மரங்கள் முதலியவற்றோடு விளங்கிய அந்நிலப் பகுதியின் இயற்கைக் காட்சி எவ்வளவு சீக்கிரத்தில் மாறுதலடைந்து விட்டது!

எங்கு பார்த்தாலும் இருள்நிறைந்திருந்தது. காற்று வரவர மும்முரமா யடிக்க ஆரம்பித்தது. சற்றுமுன் காற்றின் அடியை அலட்சியமாய்க் கருதினபோல் அசைந்து கொடுத்த மரங்களெல்லாம், இப்பொழுது அதன் அடியைத் தாளமாட்டாமல் ஓ வென்று பெருஞ் சத்தமிட்டு அலறித், தம்மைத் தரையோடு பிணித்திருந்த வேர்க்கட்டு

களை அறுத்துக்கொண்டு, ஓடிப் பிழைக்க முயல்வன போல அல்லாடி அவதியுற்றுத் தத்தளித்தன.

அன்பானந்தர் 'தன்னந்தனியாய் இடைவழியில் அகப்பட்டுக் கொண்டோமே! இப்பொழுது என்ன செய்கிறது? அருகில் ஏதாவது ஓர் ஊர்தென்பட்டாலும் அங்கே விரைந்து சென்று ஒருவீட்டுத் திண்ணையில் தங்கியிருக்கலாம். கற்பாறைகள் பல இங்கே காணப்பட்டனவே! அவற்றுள் ஒன்ருவது இப்பொழுது கண்ணுக்குத் தென்பட்டால், அதன்மீதேறி எங்காவது சமீபத்தில், விளக்கு வெளிச்சந் தோன்றுகிறதா என்று பார்க்கலாம்' என்று ஆலோசித்துக் கொண்டிருந்த போது அவர், மார்பில் அணைத்திருந்த நாய், காற்ருலும் குளிராலும் நடுங்கி, தன் உடல் முழுவதையும் நன்ருய் ஒடுக்கிக் கொள்வதைக் கண்டு, "சூரா, அஞ்சாதே! உன்னை நான் காப்பாற்றுவேன். இப்பொழுது உன்னைக் கீழே விட்டால் நீ எங்காவது ஓடி, இந்தக் காற்றுக்கும் மழைக்கும் தப்பித்துக்கொள்வாயாளுலும், உன்னை அப்படி விட்டு விட எனக்கு மனமில்லை. உன் கால் இன்னும் நன்ருய்க் குணப்படவில்லை. அதற்குள் ஓடுவாயாளுல், காயம் அதிகமாகித் துன்பஞ்செய்யும்" என்று சொல்லி அதைத் தம் மார்பில் இறுக அணைத்துக் கொண்டார். அப்பொழுது பளிச்சென்று ஒரு மின்னல் தோன்றி மறைந்தது. அவ்விதம் தோன்றி மறைந்த மின்னல், முன்னிருந்த இருளை இன்னும் அதிகமாகத் தோற்றச்செய்ததாயினும், அன்பானந்தருக்கு ஒருவகையில் உதவி புரிந்தது. அதாவது, சற்றுமுன் கற்பாறை ஒன்றைக் காண விரும்பிய அவருக்குத் தன் வெளிச்சத்தால் ஒரு கற்பாறையைக் காட்டியது.

அன்பானந்தர், மின்னல் வெளிச்சத்தில் தோன்றிய கற்பாறையையும், அதற்குச் செல்லும் வழியையும் கவனமாய்ப் பார்த்துக் கொண்டு, அவ்வழியே சென்று கற்பாறையைக் குறுகினுர். அப்பொழுது ஒரு மின்னல் மின்னியது. அதனுல் கற்பாறை அன்பானந்தர் கண்ணுக்குத் தெளிவாய்ப் புலப்படவே, அவர் அதன்மீது ஏறி நின்று கண்ணுக்கெட்டிய தூரஞ் சுற்றிப்பார்த்தார். அப்போது, தமக்கு வடபுறத்தே ஒரு சிறு வெளிச்சம் தோன்றியது. அவ்வெளிச்சம், ஒரு கோவிலின் கோபுரத்தில் வைக்கப்பட்ட விளக்கின் வெளிச்சமாகவும்

அக்கோவில் மிகச்சமீபத்தில் இருப்பதொன்ருகவும் காணப்பட்டன. ஆகையால், அவ்விடத்தை நாடி விரைந்துசெல்வதே யுசிதமென அன்பானந்தர் கருதினுர்.

அத்தருணத்தில், பயங்கரமான இரைச்சலுடன், உலகத்தையே சுழற்றி எறிந்து விடுவது போல, காற்று புயலாக மாறி வீசியது. மரங்கள் பல வேரோடு குலுங்கின! சில முறிந்தும் வீழ்ந்தன! இக்கடும் புயலை எதிர்த்து நிற்பதற்கு, வயோதிகரான அன்பானந்தருக்கு எவ்வாறு இயலும்? அந்தோ! அவர் கடுங்காற்ருல் தள்ளுண்டு, தம் மார்போடணைத்திருந்த நாயுடன், கற்பாறையினின்று கீழே விழுந்துவிட்டார்! விழுந்த அதிர்ச்சியால் மூர்ச்சையாய்விட்டார்.

அடுத்த இரண்டொருநிமிஷங்களுக்கெல்லாம், அன்பானந்தரைக் கீழ்வீழ்த்திய கொடிய புயற்காற்று தன் வேகம் அடங்கி ஒடுங்க ஆரம்பித்தது. ஆனல், போர்க்களத்தில் முன்னணிகளைத்தால் பின்னணி போர்செய்யப் புகுவதுபோல, கடுங்காற்று ஓயவும் பெருமழை தோன்றி, இடைவிடாது சொரியும் அம்புக் கூட்டங்களையொப்ப, கருங்கல்லையும் துளைக்கத் தக்க வேகத்துடன் நீர்த்தாரைகளை வீசியது.

அன்பானந்தர் கீழே விழவும், அவர் கையினின்று தப்பிய சூரன் மழையின்வேகத்தைக் கண்டு அஞ்சியதேனும், தன்னை ஆதரித்து அணைத்துவைத்திருந்த அன்பானந்தர் உணர்வற்றுக் கிடப்பதை நோக்கி, மிகவும் கவலையுற்று, செயலற்று, அவர் அருகே, மழையில் நனைந்தவண்ணம், உடலை ஒடுக்கிக் கொண்டு நின்றது.

சுமார் அரைமணி நேரம் சென்றபிறகு, வலியுடன் பெய்த பெருமழையும் வலியடங்கி ஓய்ந்தது. காற்று இயல்பாக வீசுவது போல மெல்லென்று வீசியது. ஆரவாரம் முற்றும் அடங்கி எங்கும் அமைதியுண்டாயிற்று. இருள் சிறிது சிறிதாக நீங்கியது. வானம் தெளிவுற்றது. திரையை விலக்கி முகத்தைக் காட்டும் பெண்மகள்போல், மேகப்படலம்நீங்க விண்ணடுவே தண்மதியம் தலைகாட்டியது.

அமைதி நிறைந்து விளங்கிய அத்தருணத்தே, அவ்விடத்தே, தெளிந்த வானத்திடை ஒளிர்ந்த ஒண்மதியத்தின் தண்கதிர் காட்டிய

வெளிச்சத்தால், பளிச்சென்று மின்னும் நீர்நிலைகளும், பட்ட துன்பத்தை நினைந்து கண்ணீர்போலச் சொட்டும் நீர்த்துளிகளோடு கூடிய பருமரங்களும், பெயர்த் தெறிய வந்த பெருங்காற்றோடு எதிர்த்துநின்றதால் உடல் வியர்த்திட்டாற்போல் நீரால்முற்றும் நனைந்த கற்பாறைகளும், இவை போன்ற இயற்கைப் பொருள்களும் விளங்கித்தோன்றின. ஆனால், கண்ணுச்செட்டியமட்டில் உயிருடைய பிராணியாகக் காணப்பட்டது, உணர்வற்றுக் கிடந்த அன்பானந்தருக்கருகே உணர்வோடு நின்ற சூரன் ஒன்றே!

# XII

## பெருந்துறையிற் கண்ட பெண்ணரசி

பெருந்துறை என்பது, அன்பானந்தர் குறித்துச்சென்ற விஜயமங்கலத்துக்குச் சமீபத்திலுள்ள ஒரு சிற்றூர்; சுமார் பத்துப் பன்னிரண்டு தெருக்களும், இருநூறு இருநூற்றைம்பது வீடுகளும், ஒரு சிவன் கோவிலும், காளியம்மை கோவில் ஒன்றும் உடையது. தெள்ளிய நீரோட்டமுடைய சிற்றாறு ஒன்று அவ்வூரின் ஊடே பாய்ந்து சென்று அதற்கு அழகும் வளமும் கொடுக்கிறது. சிவன் கோவிலுக்குப் பின்னால், நாற்புறமும் மதிலும் படித்துறைகளுமுடைய தாமரைத் தடாகம் ஒன்றும் உண்டு. தெருக்கள் யாவும் மிகவும் விசாலமானவை. வீடுகள், பட்டணத்து வீடுகளைப்போல உப்பரிகை முதலிய ஆடம்பரங்களோடு கூடியனவாயில்லையாயினும், அழகாகவும், விசாலமாகவும், சுகாதாரத்துக்கு ஏற்றவாறும் கட்டப்பட்டிருந்தன. கூரைவீடுகளே அதிகம்: ஓடு வேய்ந்த வீடுகள் சில; மாடிவீடுகள் இல்லவே இல்லை.

இவ்வூரில், சென்ற அத்தியாயத்திற் கூறிய நிகழ்ச்சிகள் நிகழ்ந்த தினத்திற்குச் சுமார் ஒரு மாதத்திற்குப் பிறகு, ஒருநாள் இரவு, சற்றேறக் குறைய பன்னிரண்டு மணிக்குக், கூரைவீடு ஒன்றின் கூடத்தில், மூங்கிற் கட்டில் ஒன்றின்மீது ஒரு வயோதிகர் படுத்திருந்தார். அவர் நோயாளியாகக் காணப்பட்டார். அவருக்கருகே, அவர் முகத்தை விளக்கு வெளிச்சத்தில் உற்று நோக்கியபடி அழகிய யௌவனப்பெண்மணி ஒருத்தி நின்றுகொண்டிருந்தாள்.

அவளுக்குச் சுமார், பதினெட்டு வயதிருக்கும். ஆனால் அவள் அவ்வயதில் தற்காலத்துச் சிறுமியர் பலரைப்போல வளர்ச்சியும் தேக வளமும் குன்றி மரப்பாவைபோலில்லாமல், பக்குவமுற்ற சுகசரீரி யான பெண்களுக்கு இயல்பாக இருக்கவேண்டிய கம்பீரமான தோற் றமும், தேக காந்தியும், முகதேஜசும் உடையவளாயிருந்தாள். கைவல் லான் எழுதிய ஓவியம்போல் கண்டவர் கண்களைக் கவர்ந்து, மனத் தைச் செம்மைப்படுத்தி ஆனந்த சாகரத்தில் அழுத்தவல்ல அற்புதப் பேராற்றல் வாய்ந்த தெய்வ அழகு நிரம்பிய அவள் முகம், நோயாளி யாய்ப் படுத்திருக்கும் வயோதிகரின் நிலைமையை நினைத்துப்போலும், விசனத்தால் வாட்டமுற்றிருந்தது.

நோயாளர் தம் உணர்ச்சியில்லாமல், பொருத்தமற்ற வார்த்தை களை அடிக்கடி புலம்பிக்கொண்டிருந்தார். அவர் கண்கள் மூடப்பட் டிருந்தன. அருகே யிருந்த பெண்மணி, அவர் அர்த்தமில்லாமல் ஏதேதோ புலம்பிய பொழுதெல்லாம் அவர் முகத்தை மிகவும் கவலை யுடன் உற்று நோக்கினாள். ஆனால், தான் சிறிதும் வாயைத் திறப்ப தில்லை. தன் மொழிகளைக் கேட்டால், எங்கே அவர் உறக்கம் கலைந்துவிடுமோ என்று அஞ்சினாள் போலும்.

இப்படி அவள் நின்று கொண்டிருந்த போது, நோயாளி திடீ ரென்று கண்விழித்தார். ஆனால் அருகே நிற்கும் பெண்மணியைப் பார்க்கவில்லை. வீட்டின் மேற்கூரையை நோக்கி மிரள மிரள விழித்தார். அப்பெண்மணி கீழே வைத்திருந்த ஒரு சிறு பித்தளைப் பாத்திரத்தைத் தன் கையில் எடுத்துக்கொண்டு, நோயாளியின் கா தருகே குனிந்து, மெல்லிய இனிய குரலில் “கொஞ்சம் கஞ்சி சாப்பிடு கிறீர்களா?” என்று கேட்டாள்.

நோயாளி உடனே தன்பார்வையைத் திருப்பி அப்பெண் மணியைப் பார்த்தார். ஆனால் அவள் கேட்டதற்கு யாதொரு மறு மொழியும் கூறவில்லை. சுமார் ஐந்து நிமிஷ நேரம் அவளை உற்று நோக்கியபடி இருந்தார். அவர் பார்வை, ‘இவள் யார்? அந்தரத்தி லிருந்து இறங்கி வந்த தெய்வமகளா?’ என்று தமக்குள் ஆச்சரிய முற்று வினவுவது போலிருந்தது.

கட்டழகுடைய் அக்காரிகை அவரைக் கனிந்து நோக்கியபடி நின்ருள். ஐந்து நிமிஷமாக அவளை ஆச்சரியத்துடன் உற்றுநோக்கிக் கொண்டிருந்த நோயாளி, தன் பார்வையை மீட்டும் வீட்டுக் கூரை மீது செலுத்தினர்; பிறகு தம் உடம்பைக் குனிந்து முற்றும் நோக்கினர்; தாம் உடுத்தியிருந்த உடையைத் தொட்டுப் பார்த்தார்; தாம் படுத்திருந்த விடத்தைச் சுற்றி நோக்கினர்; பிறகு, தம் நெற்றியைப் பிடித்துக்கொண்டு ஏதோ ஒன்றைச் சரியாக நினைவுக்குக் கொண்டுவர முயல்பவர்போல் காணப்பட்டார்; அப்பால் இரண்டொரு நிமிஷம் கழிசதுத் தம் அருகே நின்றவளை நோக்கி "நீ—யார்?" என்று வினவினர்.

"நான் கலாவதி" என்ருள் அந்த ரூபாவதி.

வயோதிகர் சிறிது நேரம் யோசித்துவிட்டுப் பிறகு "யார்? கலாவதியா?—கலாவதி யென்ருல் யார்?" என்ருர்.

"நான்தான். உங்களுக்கு ஞாபகமில்லையா? நீங்கள், ஒரு நாள் இரவு, காற்றிலும் மழையிலும் அகப்பட்டு மூர்ச்சையுற்றுக் கிடந்தீர்களே, அப்பொழுது உங்களை மூர்ச்சைதெளிவித்து இங்கே அழைத்து வந்தேனல்லவா?" என்ருள் கலாவதி.

வயோதிகர் சற்று யோசித்தார். பிறகு, "ஆம், ஆம். முத்தையன் இறந்து போனனே, அன்றைக்கு. ஆம், ஞாபகம் வருகிறது. நான் கற்பாறையிலிருந்து விழுந்து விட்டேன். வெகு நேரம் எனக்குப் பிரக்ஞையில்லை. பிரக்ஞை தெளிந்த பொழுது, ஒரு பெண் என்னைத் தூக்கித் தன் தோள்மீது சார்த்தியபடி என்னை நடத்திக்கொண்டு எங்கேயோ போனள். அவளை நான் 'நீ யார்?' என்று கேட்டபோது அவள், 'என் பெயர் கலாவதி' என்ருள். இப்பொழுது எல்லாம் ஞாபகத்துக்கு வருகிறது" என்ருர்.

"அந்தக் கலாவதிதான் நான்" என்ருள் அப்பெண்மணி.

"சூரன் எங்கே?" என்று வினவினர் வயோதிகர்.

"சூரனு?"

"ஆம், என் அள்புள்ள நாய், சூரன் எங்சே?" என்று மறுபடியும் வினவினர் வயோதிகர்.

உடனே கலாவதி அவர் யாரைப்பற்றி—அல்லது எதைப் பற்றி—வினவுகிறார் என்பதை நன்கறிந்து கொண்டு, "ஓ, அந்த நாயா? அது பத்திரமாயிருக்கிறது. அதன் பெயர் சூரனா? எனக்கு இதுவரையும் தெரியாது" என்று கூறிவிட்டு "சூரா! சூரா!" என்று கூப்பிட்டாள்.

அக்கணமே, வீட்டு வாயிற் கதவருகே படுத்திருந்த நாய் ஒன்று குதித்தோடி வந்து, கலாவதியை நோக்கி வாலை ஆட்டிக்கொண்டு சிறிது நேரம் நின்று, பிறகு கட்டிலின் மீது பாய்ந்தேறி வயோதிகர் உடம்பை நக்கியது. வயோதிகர் அதைத் தன் கையால் தடவிக்கொண்டிருந்தார்.

கலாவதி என்னும் பெண்மணியால் உபசரிக்கப்பட்டுக் கட்டிலின் மீது படுத்திருந்த முதியவர், நம் அன்பானந்தரே என்பதை வாசகர்கள் இப்பொழுது அறிந்து கொண்டிருக்கலாம். இந்தக் கலாவதி என்பவள் யார்? அவள் நம் அன்பானந்தர் மூர்ச்சையுற்றுச் சாலையருகே தன்னந் தனியாய்க் கிடப்பதை எப்படிக் கண்டாள்? கண்டவள் அவரை இவ்வளவு கவலையுடன் தன் வீட்டில் வைத்துப் பாதுகாத்துவரக் காரணமென்ன? என்ற இவ்விவரங்களை வாசகர்கள் அறியவேண்டுவது அவசியமாதலால், அவைகளை ஒருவாறு சுருக்கமாகக் கூறிவிட்டுப் பிறகு கலாவதியோடு நாமும் நம் கதாநாயகர் தேகஸ்திதியைக் கவனிப்போம்.

நமது கதை தொடங்கிய காலத்துக்குச் சிறிது முன்னே, பெருந்துறையில், அமிழ்தினுமினிய நம் தமிழ்மொழியில் உள்ள அரும் பெரும் நூல்களை ஆர்வத்துடனே துறைபோகக் கற்று, அக்கல்விக்கேற்ற நுட்பமதியும், நற்குணங்களும் நிரம்ப வாய்ந்து, தம்மைச் சூழ்ந்தோர்களால் அன்புடனும் மரியாதையுடனும் பாராட்டப்பட்ட செந்தமிழ்ப்புலவர் ஒருவர் இருந்தார். அவர் பெயர் மாசிலாமணி. அவர், பெருந்துறையிலுள்ள சிவன்கோவில் மேல்விசாரணைக்காரராக இருந்து, அதற்குப் பிரதியுபகாரமாக, கோவில் பஞ்சாயத்தார் அளித்துவந்த பொருளைக்கொண்டு இல்லறம் நடத்தி வந்தார். அவருக்கு ஒரே ஒரு பெண் குழந்தை உரிய காலத்தில் பிறந்தது. அதை மிகவும் அருமையாக வளர்த்துக் கல்விக்குரிய பருவம் தொடங்கவும், தாம் கற்ற தமிழ்நூல்

களை முறையாய்க் கற்பித்துவர, இயற்கையாகவே நல்லறிவு வாய்ந்த அப்பெண்குழந்தை, நாளடைவில் அறிவிலும் உருவிலும் வளர்ந்து, தனது பதினாறுவது வயதில் தன் தந்தையைப்போலவே தமிழ்ப் புலமை நிரம்பப்பெற்று விளங்கியது. இங்ஙனம் தம் அருமை மகள், தாம் விரும்பியது போலக் கல்வியிலும் நற்குணத்திலும் சிறந்தது கண்டு மாசிலாமணி மனமகிழ்வெய்தினாராயினும், அவள் கல்விக்கும் குணத்துக்கும் எற்ற ஒரு வாலிபனைத் தேடி அவளுக்கு மணம்புரி விக்க வேண்டுமே என்ற கவலைக்குள்ளாயினர். கடலில் முத்தும், மலையில் மணியும் எளிதிற் கிடைக்கின்றன. ஆனால், அந்தோ! விரிந்து பரந்த இவ்வுலகில், கல்வியும் குணமும் ஒருங்கமைந்த நன்மக் களைக் கண்ணுற் காணுவதும் எவ்வளவு அரிதாயிருக்கிறது! மாசிலா மணியின் மனத்துக்கேற்ற மணவாளன் ஒருவனும் கிடைக்கவில்லை.

அதை நினைத்து அவர் வருந்திக் கொண்டிருக்கும்போது, அம் மனநோயே அவருக்கு ஓர் உடல் நோயை உண்டு பண்ணிவிட்டது. மதியின் மிக்க மாசிலாமணி பாயும் படுக்கையுமாய் விட்டார். அந் நோயினின்று தாம் பிழைப்பது கடின மென்று தோற்றியதால் அவர் ஒரு நாள் தம் மகளை அழைத்து அருகே உட்காரவைத்துக்கொண்டு பின் வருமாறு அவளுக்குச் சில புத்திமதிகள் கூறுவாராயினர்:

"குழந்தாய்! இந்நோயினின்று நான் பிழைப்பேனென்று எண் ணுவதற்கு இடமில்லை. என் ஆயுள் முடிவதற்குள் உன் கல்விக்கும் குணத்துக்கும் எற்ற ஒருவனை உனக்குக் கணவனாக மணஞ் செய்து வைத்து விடவேண்டுமென்பது எனது விருப்பம். ஆனால், என் விருப்பத்துக்கேற்ற வாலிபன் ஒருவனும் கிடைக்கவில்லை. ஆதலால் உன்னைக் கன்னிகையாகவே வைத்துவிட்டு நான் இறக்கவேண்டிய வனாகிறேன். ஆயினும், தக்க வரன் ஒருவனைத் தேடி உனக்கு மணம் புரிவிக்க உன் தாயிருக்கிறாள்; நம் நண்பர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்கள் உனக்கு மணம்புரிவிப்பார்கள். ஆனால் அவர்கள் உனக்கு மணம்செய்விப்பதற்கு முன்னம், உனக்கு மணவாளனாகத் தெரிந் தெடுக்கப்பட்டவன் கல்வியும் நற்குணமும் உடையவனா என்பதை நீ கவனித்துத் தெரிந்துகொள். அவை இரண்டும் இல்லாதவனாயிருந் தால், எத்தனைபேர் கூடி அவனை மணஞ்செய்து கொள்ளும்படி

உன்னை வற்புறுத்தினாலும் நீ அதற்கு இணங்காதே. கல்வியும் ஒழுக்கமும் இல்லாத ஒருவனோடு வாழ்வதைக்காட்டிலும், கன்னியாகவே உன் காலத்தைக் கழிப்பது உத்தமம். கன்னியாய் இருப்பது பழிச் சொல்லுக்கு இடமாகுமென்று அஞ்சாதே. இறைவனிடத்தில் பக்தியும், அயலாரிடத்து அன்பும், உலகத்தார் எல்லார்க்கும் ஒப்பான நல்லொழுக்கமும் இருக்குமானால், யார் என்ன சொல்லியபோதிலும் அதனால் உனக்கொன்றும் பழுதில்லை."

இவ்வாறு தந்தை கூறிய புத்தி மதிகளைக் கேட்ட மகள், "அப்பா, அப்படியே நடப்பேன்" என்று அவர்க்குக் கூறிவிட்டுத் தன் தந்தையின் தேக நிலையை எண்ணத் தன் மனத்தில் எழுந்த வருத்தத்தால், கண்களில் சுரந்த நீரை அவர் காணாமல் மறைப்பதற்காக அவ்விடத்தை விட்டு எழுந்துபோய்விட்டாள்.

பின்னும் சிலநாட்களுக்கெல்லாம் மாசிலாமணி மரித்தார். அவர் அன்பாய் வளர்த்த மகள், தந்தையின் பிரிவாற்றாமையால் பெரிதும் வருந்தினாளாயினும், தன் கல்வியறிவால் சில நாட்களில் தன் துயரத்தை ஆற்றிக் கொண்டு, வயோதிகநிலையில் உள்ள தன் தாயின் ஆதரவில் இருந்துவருவாளாயினள். தந்தை சொன்னதுபோலத் தக்கவரன் கிடையாமையால், கன்னியாகவே இருக்கும் அவளே நம் அன்பானந்தரை ஆதரித்துவரும் கலாவதி.

இவள் ஒவ்வொருநாளும் விளக்குவைத்த பிறகு, தன் தந்தையின் மேற் பார்வையிலிருந்த சிவன்கோவிலுக்குச் சென்று, சுவாமிதரிசனை செய்துவிட்டுவருவது வழக்கம். கோவிற் குருக்கள் முதலிய யாவரும், இவள் தந்தைமீது கொண்டிருந்த அபிமானத்தாலும், இவள் உயர்ந்த குணங்களாலும், இவளை மிகவும் மரியாதையுடனும் அன்புடனும் பாராட்டிவந்தார்கள். தன் வழக்கப்படி இவள் ஒரு நாள் கோவிலுக்குச் சென்று திரும்புங்காலையில், காற்றும் மழையும் மும்முரமாக அடிக்கத் தொடங்கவே, அவை அடங்கிய பிறகு வீட்டுக்குச் செல்லலாமென்று கோவிலிலேயே தங்கியிருந்தாள். காற்றும் மழையும் சிறிது நேரம் தம் பலத்தையெல்லாம் காட்டிப் பின் ஒடுங்கிவிட்டன. நிலவும் புறப்பட்டுவிட்டது. 'இனி நாம் வீட்டுக்குப் போகலாம்' என்று அவள் கோவிலை விட்டு வந்தாள்.

வரும் வழியில் ஜனநடமாட்டம் ஒரு சிறிதும் இல்லை. மழைக்கும் காற்றுக்கும் அஞ்சி எல்லோரும் தத்தம் வீட்டில் ஒடுங்கியிருந்தார்கள். கலாவதி தனியே செல்வதை ஊரார் எவரேனும் கண்டிருப்பார்களானால், அவள் வீடு சேரும் வரையில் அவளுக்குத் துணையாக உடன் சென்றிருப்பார்கள். அவ்வாறில்லாமையால் அவள் தன்னந்தனியளாக வரவேண்டியிருந்தது. ஆயினும் அப்படி வந்ததில் அவளுக்குச் சிறிதும் அச்சந் தோன்றவில்லை. அதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் உண்டு: முதலாவது, அப்பொழுது பொழுதுபட்டு அதிக நேரமாகவில்லை—மணி எட்டுக்கு மேலிராது; நிலா வெளிச்சத்தால் இருளும் நீங்கியிருந்தது. இரண்டாவது, மாசிலாமணி மகளென்ற மதிப்பால் யாரும் அவளுக்கு எக்காலத்திலும் எவ்விதமான இடையூறும் செய்யத் துணிந்ததில்லை யாதலாலும், தன் கல்வியறிவாலும் ஒழுக்கத்தாலும் பேய்பைசாசங்களால் தனக்கு யாதொரு துன்பமும் உண்டாகாதென்ற திர உணர்ச்சி உடையவளாதலாலும், இரவில் தனித்துச் செல்வது ஆபத்துக்கிடமென்ற எண்ணங்கூட அவள் மனத்தில் தோன்றவில்லை. பாம்பு முதலிய விஷ ஜந்துக்களையும் அஞ்சாது பிடிக்கச் செல்லும் சிறு குழந்தைகளுக்குள்ள தைரியம் அவளுக்கும் இருந்தது.

இங்ஙனம் கலாவதி அச்சம் என்பது ஒரு சிறிதுமின்றி, இரவில் வழிநடந்து வரும்போது, ஒரு நாயொன்று குரைத்துக்கொண்டு அவள் எதிரே ஓடிவந்தது. அந் நாய் நமது சூரனே. அது, தன்னை வளர்த்து வந்த அன்பானந்தர் செயலற்றுப் பிணம்போற் கிடப்பதைக் கண்டு, மிகவும் கவலைக்குள்ளாகி, யாராவது ஒருவரை அவர் கிடக்குமிடத்திற்கு அழைத்துவந்தால், அவர் உதவியால் அன்பானந்தர் எழுந்திருக்கக் கூடும் என்று எண்ணி மனித உதவியைத்தேடி, அன்பானந்தர் விழுந்துகிடந்த இடத்திற்கு அடுத்தாற்போல் மிக அருகேயிருந்த பெருந்துறை என்னும் ஊருட் சென்றது. அப்போது முதன்முதல் அதன் கண்ணிற்குப்பட்டது கலாவதியின் உருவமே. அவளைக் கண்டதும் அது குரைப்பதை நிறுத்தி அவள் காலடியில் வாலைக் குழைத்து முனகிக்கொண்டு சென்றது. பழகிய நாய்போல் அது தன்னிடத்தில் ஆசைகாட்டி வருவதையறிந்த கலாவதி, மேற்செல்லாமல் நின்றாள். உடனே சூரன் அவள் முகத்தைப் பார்த்துச் சிறிதுதூரம் எதி

ரோ ஓடியது; மீண்டும் வந்து அவள் முகத்தைப் பார்த்துவிட்டு முன் போலவே ஓடியது; மீண்டும் வந்தது; திரும்பி ஓடியது. இவ்வாறு இரண்டு மூன்று முறை ஓடி ஓடி வந்ததைக் கண்ட கலாவதி 'எங்கே. யோ ஓரிடத்திற்கு நம்மை அழைக்கிறது' என்று உணர்ந்துகொண்டு அதைத் தொடர்ந்து சென்றாள்.

சூான் வழிகாட்டிக்கொண்டு முன்சென்றது. கலாவதி அதைத் தொடர்ந்து சென்று சிறிது நேரத்தில் அன்பானந்தர் விழுந்துகிடந்த இடத்தை அடைந்தாள். சூான் நாவைத் தொங்கவிட்டுக்கொண்டு, பிணம்போற்கிடந்த அன்பானந்தர் முகத்தையும், அவரை ஆச்சரியத்துடனும் அனுதாபத்துடன் நோக்கிக்கொண்டு நின்ற கலாவதியின் முகத்தையும், மாறி மாறிப் பார்த்தது. கலாவதி குனிந்து அன்பானந்தரைத் தொட்டுப்பார்த்தாள்; அவர் நாசியிற் கைவிரலைக் காட்டிப் பார்த்தாள்: உடம்பிற் சூடிருந்தது; நாசியில் சுவாசம் வந்து கொண்டிருந்தது. பிறகு, அவரை எவ்விதம் வீட்டுக்கழைத்துக் கொண்டு போகலாம் என்ற கவலை மிகுந்தவளாய், கலாவதி சிறிது நேரம் யோசித்துப் பார்த்து விட்டு, "ஐயோ, இந்த வயோதிக காலத்தில்—தலையெல்லாம் நரைத்துப்போய் விட்டது! உடல் தளர்ந்து விட்டது!—இவ்வளவு தள்ளாமையில் இவர் தனியே வரவும், இவ்விடத்தில் காற்றிலும் மழையிலும் அகப்பட்டு இப்படி ஸ்மரணைதப்பிக் கிடக்கும்படியுமாயிற்றே! இவரைப் பார்த்தால் என் தந்தையின் ஞாபகம் வருகிறது. நல்ல உள்ளமுள்ளவர் என்பது முகத்திலேயே விளங்குகிறது. இவரை மெல்ல வீட்டுக்குக்கொண்டுபோய் இவர் உடம்பைத் தேற்றிவிடுவேன். பிறகு என் தந்தையைப்போல் என் வீட்டிலேயே இருக்கும்படி இவரை வற்புறுத்தி இருக்கச்செய்து போஷித்துவருவேன். என் எண்ணம் ஈடேறும் வண்ணம், எல்லாம் வல்ல இறைவனே! நீ தான் துணைசெய்யவேண்டும்" என்று தனக்குள் கருதி வானத்தை நோக்கிக் கைகூப்பி நமஸ்கரித்து விட்டு, தன் முன்றானையால் அவருடம்பை நன்றாய்த் துடைத்துவிட்டு,அவர் உடைகளில் ஊறியிருந்த நீரையும் பிழிந்துவிட்டு, அவர் தலையை மெல்லத் தூக்கித் தன் மீது சாத்திக்கொண்டு அவரை உட்காரவைத்தாள். சிறிது நேரம் பொறுத்து அன்பானந்தர் மெல்லக் கண்விழித்துப் பார்த்தார். அதைக் காணவும் காலாவதியின் முகம் மலர்ந்தது.

"மெல்ல எழுந்திருக்கிறீர்களா?" என்று அவள் அன்பானந்தரைக் கேட்டாள்.

அன்பானந்தர் ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவரால் பேச முடியவில்லை போலிருக்கிறது என்று எண்ணி, கலாவதி அவரைத் தன் முழுபலத்துடனும் அணைத்துத் தூக்கிக்கொண்டு எழுந்தாள். அன்பானந்தர் அவள் முயற்சிக்கு அனுகூலமாகத் தன்னாற் கூடிய மட்டும் எழுந்திருக்க முயன்றார். ஆதலால், அவரைத் தூக்குவது அவளுக்குச் சிரமமாகத் தோற்றவில்லை. அவர் எழுந்த பிறகு, அவள் அவரைத் தன் தோளில் சாய்ந்துகொள்ளச்செய்து, தன் வலது கையால் அவரை அணைத்துப் பிடித்துக்கொண்டு மெல்ல நடந்தாள். அன்பானந்தரால் நடக்கவே முடியவில்லை. கலாவதி அவரைத் தன் தோளில் தாங்கி நகர்த்திக்கொண்டு சென்றாள் என்றே சொல்லவேண்டும். அவ்விதம் சென்றது அவளுக்கு மிகுந்த சிரமம் கொடுத்திருக்கும் என்பதில் ஐயம் இல்லை. ஆனால், அவள் அன்பானந்தர் நிலைமையை எண்ணி மனத்திற்கொண்ட அனுதாபத்தால் அந்தச் சிரமம் அதிகமாக அவளுக்குத் தோன்றவில்லை. அடிமேல் அடிவைத்து அன்பானந்தரோடு மெல்ல மெல்லத் தன் வீடுபோய்ச் சேர்ந்தாள். சூரனும் அவர்களைத் தொடர்ந்து சென்று, கலாவதியின் இல்லத்தை அடைந்தது.

கலாவதி, அன்பானந்தர் உடுத்தியிருந்த நனைந்த உடைகளைக் களைந்துவிட்டு வேறு உடை உடுத்துக்கொள்ளச்செய்து, அவரைக் கட்டிலின்மேற் படுக்கவைத்து விட்டுத் தன் தாயிடம் நடந்தவற்றைத் தெரிவித்து, அவ்வயோதிகருக்குக் கஞ்சி காய்ச்சிக் கொண்டுவரும்படி சொல்லிவிட்டுத், தான் அன்பானந்தர் கட்டிலருகே உட்கார்ந்தாள். சூரனும் அவளருகே உட்கார்ந்து, அவள் பாதத்தை நக்கிக்கொண்டிருந்தது. காலாவதி அதன் முதுகை அன்போடு தடவிக்கொண்டு "உன்னால் இவ்வயோதிகர் பிழைத்தார்.

" நன்றி மறப்பது நன்றன்று; நன்றல்ல
தன்றே மறப்பது நன்று'

என்ற வேதவாக்கியப்படி நடப்பது நீயும் உன் இனத்தவருந்தான்," என்றாள்.

"உன்னைப் போன்றவர்கள் புகழ்வார்கள் என்று கருதி, புகழ்ச்சி விருப்பால், நாங்கள் நன்றிமறவாக் குணத்தை மேற்கொண்டில்லை. அது எங்கள் இயற்கை. ஆதலால் நீ புகழ்ந்தாலும் இகழ்ந்தாலும் எனக்கு மகிழ்ச்சியுமில்லை வருத்தமுமில்லை" என்று தனக்குள் எண்ணிக் கொள்வது போல, சூான் அவள் கூறிய மொழிகளைக் கேட்டு மௌனமுற்றிருந்தது.

கலாவதியின் தாய் சற்று நேரத்தில், கஞ்சி காய்ச்சி, அதை ஒரு பாத்திரத்தில் கொண்டுவந்து கலாவதியிடம் கொடுத்தாள். கலாவதி அதை வாங்கி வயோதிகருக்குப் புகட்டினாள்.

கஞ்சியைக் குடித்த பிறகு அன்பானந்தருக்கு முகம் சிறிது தெளிவுற்றது; சற்று தைரியம் உண்டாயிற்று. அப்பால் அவர் கலாவதியைத் திரும்பிப் பார்த்து. "அம்மா, நீ யார்?" என்று வினவினார்.

"ஐயா, என் பெயர் கலாவதி. மாசிலாமணி என்ற தமிழ்ப் புலவரின் மகள். என் தந்தை இறந்து ஆறுமாதமாயிற்று" என்றாள் கலாவதி.

"அப்படியா? நீ என் என்னை இங்கே கொண்டு வந்தாய்?" என்று அன்பானந்தர் வினவினார்.

அதற்கு விடையாகத் தான் கோவிலிலிருந்து வந்ததையும், நாய் தன்னை எதிர் நோக்கிவந்து அழைத்துச் சென்றதையும் விவரமாகக் கூறினாள் கலாவதி. அவள் கூறியவற்றைக் கேட்டபிறகு அன்பானந்தர் "இது என்ன ஊர்?" என்று வினவினார்.

கலாவதி—"பெருந்துறை"

அன்பானந்தர்—"விஜயமங்கலம் இங்கிருந்து எவ்வளவு தூரம் இருக்கும்?"

கலாவதி—"ஐந்தாறு மைல் இருக்கும். என் கேட்கிறீர்கள்?"

அன்பானந்தர்—"அங்கே நண்பர் ஒருவரைப் பார்க்கவேண்டும். அதற்காகத்தான் நான் ஈரோடிலிருந்து வந்தேன். வழியில் மழையில் அகப்பட்டுக் கொண்டேன்.

கலாவதி—"நடந்தா வந்தீர்கள்?"

அன்பானந்தர்—"ஆம்"

கலாவதி—"யாராவது ஒருவரைத் துணையாகவாவது அழைத்து வரக்கூடாதா?"

அன்பானந்தர்—"துணையாக என்னுடன் வரக்கூடிய நண்பராவது சுற்றத்தராவது ஒருவருமில்லை.

இதைக் கேட்டுக் கலாவதி மிகவும் மனம் உருகி 'நாதியற்ற பரம ஏழை போலிருக்கிறது' என்று தனக்குள் நினைத்துக்கொண்டு ஒன்றும் பேசாமல் இருந்தாள்.

அன்பானந்தரும் சிறிது நேரம் பேசாமலிருந்து, பிறகு கலாவதியை நோக்கி "என்னுடைய சட்டை எங்கே?" என்று கேட்டார்.

கலாவதி-"அது ஈரமாயிருக்கிறது. உலரவைத்துத் தருகிறேன்"

அன்பானந்தர்—"உடனே உலரவைத்து விட்டால் நல்லது. நான் காலையில் புறப்பட்டுப் போகவேண்டும்"

கலாவதி—"எங்கே?"

அன்பானந்தர்—"விஜயமங்கலத்திற்கு"

கலாவதி—"தங்கள் உடம்பு மிகவும் பலஹீனமாய் இருக்கிறது. உடம்பை நன்றாய்த் தேற்றிக் கொண்டபிறகு தங்களிஷ்டம்போற் செய்யலாம். முன்பின் 'அறியாத ஒருவர்வீட்டில் எப்படியிருக்கிறதென்று நினைக்கவேண்டாம். என் தந்தையைப்போலத் தங்களை நான் பாராட்டிவருவேன். தாங்களும் தங்கள் மகளாக என்னைக் கருதி இங்கேயே இருங்கள். தங்கள் உடம்பு தேறும் வரையில் தாங்கள் இங்கிருக்கவேண்டியது கட்டாயம். அதன் பிறகு இங்கிருப்பது தங்கள் விருப்பத்தைப் பொறுத்தது"

அன்பானந்தர், அவள் கூறியதற்கு மறுமொழியாக எதுவும் சொல்லாமல் "சட்டை பத்திரமாயிருக்கட்டும். அதில் சில கடிதங்களும் கொஞ்சம் பணமும் இருக்கின்றன" என்றார்.

''அதற்கென்ன? அதில் உள்ள தொன்றையும் நான் தொட வில்லை. அப்படியே பிழிந்து உலரவைத்து, உலர்ந்த பிறகு அதைத் தங்கள் தலைமாட்டிலேயே கொண்டுவந்து வைத்துவிடுகிறேன். அதைப்பற்றிக் கவலை வேண்டாம். நேரமாயிற்று, தூங்குங்கள். காலையில் பேசிக்கொள்ளலாம்'' என்றாள் கலாவதி.

''சரி, நான் தூங்குகிறேன். குழந்தாய்! தயவு செய்து என் நாயைப் பத்திரமாய்ப் பார்த்துக்கொள்'' என்றார் அன்பானந்தர்.

''அதைப் பற்றிக் கவலை வேண்டாம். தன்னையும் பத்திரமாகக் காப்பாற்றிக்கொண்டு, நம்மையும் 'பத்திரமாய்ப் பார்த்துக்கொள்ள அதற்குத் தெரியும்'' என்று புன்னகையுடன் கூறிவிட்டுக் கலாவதி எழுந்துவிட்டாள்.

தாம் பெருதுறையிற் கண்ட பெண்ணரசி யாகிய கலாவதியின் பரோபகார சிந்தையையும் செயலையும் எண்ணி ஆனந்தத்தில் ஆழ்வது போல, அன்பானந்தர் உறக்கத்தில் ஆழ்ந்தார். கலாவதி வீட்டுக்குள் சென்று தன் தாயுடன் உணவுண்டு, ஞானுக்கும் உணவிட்டுப் பிறகு படுக்கைக்குச் சென்று, அன்பானந்தரை வீட்டுக்குக் கொண்டு வந்ததை, இறந்துபோன தன் தந்தையை எமபுரத்திலிருந்து மீட்டுக் கொண்டு வந்துவிட்டது போல எண்ணி, அகமகிழ்வுற்று நித்திரை போயினள். ஞான், உணவு கொண்ட பிறகு, அன்பானந்தர் படுத்திருந்த கட்டிலருகே வந்து படுத்துக்கொண்டு நிர்ச்சிந்தையாய்த் தூங்கி விட்டது.

அன்றிரவு கழிந்தது.

மறுநாள் காலை, கலாவதி படுக்கையைவிட்டு எழுந்ததும் அன்பானந்தரை வந்து பார்த்தாள். முதல் நாள் இரவு மழையில் நனைந்து வெகுநேரம் தண்ணீரிலேயே கிடந்தமையால் அவருக்குச் சுரம் கண்டிருந்தது. உடனே கலாவதி, அவ்வூர் வைத்தியர் ஒருவரைப் போய் அழைத்துவந்து அவருடம்பைப் பார்க்கச் சொன்னாள். வைத்தியர் நோயாளியின் கையைப் பார்த்து விட்டுச் 'சுரம் மிகக்கடுமையாயிருக்கிறது, சௌக்கியமாக நாள் செல்லும்' என்று சொல்லி, ஔஷதம் கொடுத்து விட்டுப் போனார். அன்பானந்தருக்கு அணுவளவும் பிரக்

னே என்பதில்லை. கலாவதி, அடிக்கடி வைத்தியரை வந்து பார்க்கும் படி செய்து, தான் மிகவும் கவலையுடன் வைத்தியர் சொல்லியது போல அவருக்கு வேளை தவறாமல் மருந்தும் பத்தியமும் கொடுத்து வந்தாள்.

ஒரு மாதம் சென்றது.

நாளடைவில் அன்பானந்தருக்கு நோய் குணப்பட்டு வந்ததாயினும் அது வரையில் சரியான பிரக்ஞை வரவில்லை. கலாவதி, சதா அவர் அருகில் இருந்து பெற்றமகட்குப் பதின்மடங்கதிகமாக அவர் நிலைமையில் கண்ணுங் கருத்துமாயிருந்தாள். அவர், சில சமயங்களில் முன்பின் பொருத்தமில்லாமல் ஏதேதோ பிதற்றுவார். அப்பொழுதெல்லாம் கலாவதி அவர்நோய் அதிகப்பட்டிருப்பதாகக் கருதி மனங் கலங்குவாள். வைத்தியர் கூறும் தைரியவார்த்தைகளால் மனந்தேறுவாள். நோய் கண்ட நாற்பதாவது நாள் அன்பானந்தருக்குச் சிறிது பிரக்ஞைவந்தது. அன்றைய தினந்தான், நாம் இவ்வதிகாரத் துவக்கத்திற் கூறியதுபோல, அவர் கலாவதியை முன்னம் அறியாதவர் போல "நீ யார்?" என்று கேட்டார். அவ்வாறு அவர் கேட்டதற்குக் காரணம் நாற்பது நாட்களாக நடந்தனவற்றுள் ஒன்றாவது அவர் நினைவில் இல்லாமையே. நாற்பது நாட்கள் கடந்தனவென்ற உணர்வுகூட அவருக்கில்லை.

அன்று முதல் அவர் நோய் மிகவிரைவாய்க் குணப்பட்டு வந்தது. பின்னும் ஒருவாரத்தில் அவர் படுக்கையைவிட்டெழுந்து நடமாடக் கூடிய சக்தியுள்ளவரானார். கலாவதி அவரிடத்துக் காட்டிவந்த பட்சத்தினாலும் அனுதாபத்தினாலும், அவருக்குத் தாம் அயலார் ஒருவர் வீட்டிலிருப்பதாகத் தோற்றவேயில்லை. கலாவதியின் அறிவும் குணமும் அன்பானந்தர் மனத்தைக் கவர்ந்தன. விஜயமங்கலத்திற்குச் செல்லாமலே, தன் மனோரதம் நிறைவேறிவிட்டதாக எண்ணி அவர் மனம் மகிழ்ந்தார்.

இரண்டு மாதங்கள் கடந்தன.

இப்பொழுது அன்பானந்தர் வீட்டைவிட்டு அரைமைல் ஒரு மைல் தூரம் வெளியே சென்று உலாவி வருவதற்கும் சக்தியுள்ளவரா

னர். கலாவதியின் வீடு அவர் சொந்த வீடுபோலாய்விட்டது. அந்நியர் ஒருவரை இவ்வளவு காலம் வீட்டில் வைத்துப் பாதுகாப்பது கூடாது என்று யாராவது சொல்லக்கூடுமென்று நினைத்து, அவர் தம் தந்தையின் நண்பரென்றும், அவர் இறந்தசெய்தி தெரியாமல் அவரைப் பார்க்கவந்தபோது, வழியில் மழையால் நனைந்து நோய்க்குள்ளானரென்றும் அவள்அண்டை அயலார்க்கும், வைத்தியர்க்கும் சொல்லியிருந்தாள். இவ்வாறு அவள் கூறியது பொய்யே யாயினும், அன்பானந்தர் அதை அறிந்தபோது,

> "பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கு மெனின்"

என்ற பொய்யாமொழியை நினைந்து, அவள் கூற்றை மறுக்காமல் அதற்கு இணங்கியிருந்தார்.

## XIII

### மங்கைக்கேற்ற மணளன் மணிவாசகமே!

ஒரு நாள் மாலை சுமார் மூன்று மணிக்கு, மதிவாணர் வீட்டுத் தாழ்வாரத்தில், ஒரு சாய்வான நாற்காலியில் அன்பானந்தர் படுத்துக் கொண்டிருந்தார். அவருக்கெதிரே நாற்காலி ஒன்றில் கலாவதி அமர்ந்திருந்தாள். அவர்கள் இருவரையும் பார்த்துக்கொண்டு சூரன் கீழே உட்கார்ந்திருந்தது.

அன்பானந்தரும் கலாவதியும் பலபல விஷயங்களைப் பற்றி அளவளாவிக்கொண்டிருந்தார்கள். கலாவதி அதுவரையில் விவாகம் செய்துகொள்ளாதிருப்பதற்குக் காரணமென்னவென்று அன்பானந்தர் வினவினர். அவள், அதற்குக் காரணத்தையும், தந்தையின் கட்டளையையும், தன் விருப்பமும் அதுவே யென்பதையும், விவரமாகக் கூறினள். பிறகு வேறு விஷயங்களைப்பற்றிப் பேசிவரும்போது, "நான் உனக்குப் பாரமாகி இவ்வளவு நாள் இங்கே தங்கியிருப்பது நன்றாயில்லை. என் உடம்பு குணப்பட்டு விட்டபடியால், இனி நான் இங்கிருக்கமாட்டேன்" என்றார் அன்பானந்தர்.

கலாவதி சிரித்துக்கொண்டு "தாங்கள் இருப்பது எனக்குப் பாரமாயில்லை. அதைப்பற்றிக் கவலைவேண்டாம். சிவன்கோவில் தருமகர்த்தர்கள், என் தந்தைக்குச் செய்து வந்த பொருளுதவியை அவர் இறந்தபிறகு நிறுத்திவிடவில்லை; எனக்குச் செய்து வருகிறார்கள். ஆதலால், என் தந்தை ஸ்தானத்தில் தாங்கள் இருப்பதாக நான் எண்ணி வருகிறேனேயொழிய வேறில்லை. தாங்கள் வந்தபிறகு தந்தையை இழந்த துயரம் எனக்குத் தோற்றவில்லை. இவ்வூரார் எல்லாரும் தங்களுக்குப் பழக்கமாய்விட்டார்கள்; எல்லோரும் தங்களிடத்தில் பிரியமாயிருக்கிறார்கள். தாங்கள் இவ்விடம் விட்டுப்போனால் எனக்கு மட்டுமல்ல, என் நண்பர்களுக்கும் மிகவும் வருத்தமுண்டாகும்" என்றாள்.

"ஆனால், உன் தந்தை செய்து வந்த வேலையை நான் செய்து வருகிறேனே" என்றார் அன்பானந்தர்.

அதற்குக் கலாவதி "அவர் செய்து வந்த வேலையைச் செய்ய, இந்தத் தள்ளாத வயதில், தங்களால் முடியாது" என்றாள்.

"என்னாலியன்ற வேலை ஏதாவது செய்து என் சாப்பாட்டுக்கு மட்டுமாவது சம்பாதிக்க விரும்புகிறேன். உன்னுடை பொறுமைக்கும், குணத்துக்கும், அன்புக்கும் பணங்கொடுக்க என்னால் முடியாது; அவை தெய்வீகமானவை—விலைமதிக்கத் தக்கனவல்ல—பணத்தின் மதிப்புக்கு அப்பாற்பட்டவை. ஆதலால், நீ அளிக்கும் உணவுக்கு மட்டுமாவது உனக்குப் பிரதிப் பிரயோஜனம் செய்யவிரும்புகிறேன்" என்றார் அன்பானந்தர்.

"அதைப்பற்றி இப்பொழுது என்ன கவலை. உடம்பு நன்றாய்க் குணமாகட்டும். பிறகுயோசித்துக் கொள்ளலாம்" என்றாள் கலாவதி.

சுமார் ஒருமணிநேரம் சென்ற பிறகு, அன்பானந்தர் அவளை நோக்கி, "இளவெயிலாயிருக்கிறது; நான் சிறிது தூரம் வெளியே சென்று வருகிறேன்" என்றார்.

"நல்லது, அதிகநேரம் தாமதியாமல் சீக்கிரம் வந்து விடுங்கள்" என்று கூறி, கலாவதி இருக்கைவிட்டெழுந்தாள். உடனே அன்ப

னந்தரும் எழுந்து, ஓர் லாந்தரகோலை எடுத்துக்கொண்டு வெளியே சென்றார். சூரனும் அவர் பின்னால் சென்றது.

தாம் எந்தவிடத்தில் காற்றால் அடிபட்டு விழுந்தாரோ, எந்த இடத்தில் முதன்முதல் கலாவதியைக் கண்டாரோ அந்த இடத்தைப் பார்க்கவேண்டுமென்ற அவா அவருக்கு அதிகமாயிருந்த படியால், அவ்விடத்தையே இப்பொழுது நாடிச் சென்றார் அன்பானந்தர். அவ்விடத்தை அடைந்தபோது, தாம் ஏறி நின்று கோபுரவெளிச்சத்தைக் கண்ட கற்பாறைமீது, யாரோ ஒருவன் உட்கார்ந்து தலைகுனிந்த வண்ணம் ஏதோ எழுதிக்கொண்டிருப்பதைக்கண்டு, அவனுக்குச் சிறிது தூரத்தே புற்றரையில் தாம் உட்கார்ந்து சூரனோடு விளையாடிக் கொண்டிருந்தார்.

அப்போது, கற்பாறைமேல் உட்கார்ந்திருந்தவன் கையிலிருந்து ஒரு காகிதம், காற்றாலடிபட்டுப் பறந்து வந்து அன்பானந்தருக்கருகே விழுந்தது. அவர் அதை எடுத்தார். அது, அழகாகவும், விளக்க மாகவும் எழுதப்பட்ட சிறு எழுத்துக்களால் நிறைந்திருந்தது. அதை அன்பானந்தர் என்னவென்று பார்ப்பதற்குள், அதற்குடையவன் குதித்தோடிவந்து அவரை நோக்கி, "அது என்னுடையது; கைதவறி காற்றில் விட்டுவிட்டேன். நெடுந்தூரம் பறந்துபோவதற்கு முன் நல்ல வேளையாகத் தாங்கள் எடுத்துவிட்டீர்களே, மிக்வும் சந்தோஷம்" என்றான்.

உடனே அன்பானந்தர் அக்கடிதத்தை அவனிடம் கொடுத்து விட்டார். அவன் அதை வாங்கிக்கொண்டு "சற்று முன்தான் எழுதுவதற்கு இங்கே வந்து உட்கார்ந்தேன். இதுவரையில் காற்று அவ்வளவாக இல்லை. இப்பொழுதுதான் கொஞ்சம் அதிகமாக அடிக்கிறது. இனி இங்கிருந்து எழுதமுடியாதுபோலிருக்கிறது" என்றான்.

அன்பானந்தர் அவனை அதிசயத்துடன் உற்று நோக்கினார். அவன் உருவம் கண்ணைக் கவரத்தக்கதாக விருந்தது. அவன் சுமார் இருபத்தைந்து வயதுள்ள வாலிபனாகக் காணப்பட்டான். நடுத்தரமான உயரமும், கட்டமைந்த சரீரமும், மாந்தளிர்போன்ற நிறமும், கூரிய அறிவைக் காட்டும் வட்ட முகமும் வாய்ந்த அவன் கண்கள், கன்

ளங் கபடமற்று விளங்கின. கத்தரித்துவிட்ட அவன் தலைமயிர் கறுத் தடர்ந்து சுருள் சுருளாய்ப் பார்ப்பதற்கு அழகாய் இருந்தது. அவன் குரலும் தோற்றமும் ஒழுக்கமும் அவனைக் கண்டாரையும், அவன் பேசக் கேட்டாரையும் பிணிப்பித்து, அவன் வரலாற்றை முற்றும் அறிந்து கொள்ளவேண்டுமென்ற விருப்பத்தை உண்டுபண்ணத் தக் கனவாயிருந்தன.

இவ்வாலிபன், தாம் கொடுத்த கடிதத்தை வாங்கித் தன் கையில் வைத்திருந்த மற்றக் கடிதங்களோடு இடம் பார்த்து வைப்பதை அன் பானந்தர் கவனித்திருந்து, பிறகு அவனை நோக்கி, “ஐயா, எழுதப் படிக்க நல்ல இடம் பார்த்தீர்! கற்பாறைதான் மேஜை நாற்காலி அனைத்தும் போலிருக்கிறது!” என்றார்.

“ஆம், சத்திரத்துக்குஇது எவ்வளவோ மேலல்லவா? இங்கே உள்ள அமைதி சத்திரத்திலேது?” என்றான் இளைஞன்.

“சத்திரத்திலா! ஏன், வீடில்லையா?” என்று வினவினார்.

உடனே இளைஞன் “வீடில்லை. என் நிலைமையை விளக்கமாய்ச் சொன்னால் தான் தங்களுக்குத் தெரியும்” என்று கூறி அவருக்கு அருகே உட்கார்ந்துகொண்டு பின்வருமாறு உரைக்கலாயினன். “நான் பிறந்தது தஞ்சை. என் பெயர் மணிவாசகன். சென்னையில் ஒரு தமிழ்ப் பத்திரிகைக்கு உதவிப் பத்திராதிபராயிருந்தேன். அந்த வேலை போய்விட்டது. வேறு வேலை ஒன்றுங்கிடைக்கவில்லை. தமிழ்க் கல்வியில் அளவற்ற ஆர்வங்கொண்டு அதையே பயின்று வந்த தால், தமிழ் சம்பந்தமில்லாத உத்தியோகம் எதற்கும் நான் பயன்படா தவனானேன். உதவிப் பத்திராதிபர் வேலை போகவும், வேறு உதவி யொன்றுங் கிடைக்காமல் நான் திண்டாடிய திண்டாட்டத்தில் தமிழ் படிப்பதின் பலனும், தமிழின் அருமையும் எனக்குநன்றாய் விளங்கின.

“பாரறியு மறிவினும்அப் பார்மேனின்ற
பசுஞானத் தாலுமெட்டிப் பார்க்கொணாத
பேரறிவே சிற்றறிவேற் கிருளை நீக்கும்
பேரொளியே யங்கயற்கண் பிரியாதானே!

யாரறிவார் தமிழருமை! யென்கின்றேனென்
அறிவினை மன்றேவுன் மதுரை மூதூர்
நீரறியும் நெருப்பறியும் அறிவுண்டாக்கி
நீயறிவித் தாலறியும் நிலமுந் தானே"

என்று கூறியது முற்றும் உண்மையல்ல. தமிழின் அருமை நான் அறிவேன், என்னைப்போல் அதைப் படித்துவிட்டுச் சோற்றுக்குத் திண்டாடும் புலவர்கள் அறிவார்கள்—திண்டாடிய புலவர்கள் அறிந்திருப்பார்கள்.

"கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
குடிக்கத்தான் கற்பித்தானா
இல்லைத்தான் பொன்னைத்தான் எனக்குத்தான்
கொடுத்துத்தான் இரட்சித்தானா
அல்லைத்தான் சொல்லித்தான் ஆரைத்தான்
நோவத்தான் ஐயோ! எங்கும்
பல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான்
புவியிற்றான் பண்ணினானே!"

"எண்ணான்கு முப்பத் திரண்டு பல்காட்டி இசைகூட்டிப்
பண்ணாகச் செந்தமிழைப் பாடி வரினுமிப் பாரிலுள்ளோர்
அண்ணாந்து கேட்பர் அழகழ கென்பர் அதன்பிறகோர்
சுண்ணாம்பு பட்ட இலையுங் கொடார்கவி சொன்னவற்கே."

என்றும் இன்னும் பலவாறும் பாதவித்துப் பாடியவர்கள்,
"தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
உண்டபாலனை அழைத்ததும் என்பு பெண்ணுருவாக்
கொண்டதும் மறைக்கதவினைத் திறந்ததும்"

ஆகிய 'கன்னித் தண்டமிழ்' மொழியைத் துறைபோகக் கற்ற வித்வ சிரோமணிகளே! ஆதலால் 'நாம் திண்டாடுவது ஆச்சரியமல்ல! இது தமிழருமை! இப்பொழுதுதான் நன்றாய் அறிந்துகொண்டோம்' என்று எண்ணி எனக்குள் சந்தோஷப்பட்டுக்கொண்டேன். தமிழருமை தெரிந்தவுடன் சோற்றருமையும் தெரிந்தது. இனி, சென்னையிலிருந்தால் ஆபத்தென்று கையில் இருந்த இருபது ரூபாய் பணத்துடன் வெளியூர்களைச் சுற்றி வருவோமென்று புறப்பட்டுவிட்டேன்.

புறப்படும்போதே மிகவும் அவசியமான உணவு, உடை முதலியவை களுக்குத் தவிர வேறெதற்கும் கையிலுள்ள பணத்தில் அரைக்காசு கூட செலவழிப்பதில்லை யென்று தீர்மானித்துக்கொண்டேன். வழியில் அநேக இடங்களில் தங்கித் தங்கி வந்தேன். ஆனால் இதுவரையில், என்னுடைய சொந்த இருகால் வண்டியை உபயோகித்து வந்தேனே யொழிய, வேறு எவ்வகை வண்டியின் உதவியையும் தேடவில்லை. இப்பொழுது இதோ இவ்விடத்திற்குச் சுமார் இரண்டு மைல் தூரத்திலுள்ள ஓர் அன்ன சத்திரத்தில் தங்கியிருக்கிறேன். இன்றோடு, நான் சென்னையை விட்டுவந்து இரண்டு மாதங்களாகின்றன. இதுவரையில் எட்டு ரூபாய் செலவழிந்து விட்டது. மீதம் உள்ளது பன்னிரண்டு ரூபாய். இதுவும், என்னுடைய தமிழ்ப் புத்தகங்களும், அவைகளை வைத்திருக்கும் பெட்டியுந்தான் எனக்குத் தற்போதுள்ள செல்வம்.''

இவ்வரலாற்றைக் கூறிய போது, அவன் சிறிதாவது விசனம், வெறுப்பு, சலிப்பு முதலியவைகள் இன்றி, மலர்ந்த முகத்தோடு வேடிக்கைக் கதை கூறுவது போலக் கூறினான். அவன் பேசியது இனிமையாக இருந்தமையால், அவனோடு சம்பாஷிக்கவேண்டுமென்ற விருப்புடையவராய் அன்பானந்தர் அவனை நோக்கி, "உதவிப்பத்திராதிபராயிருந்த வேலையை ஏன் ஐயா விட்டுவிட்டீர்?" என்று கேட்டார்.

மணிவாசகன்—"நான் விடவில்லை. பத்திரிகைக்குச் சொந்தக்காரர் என்னை விடுவித்து விட்டார். இரண்டு வருஷம் மாடுபோல் உழைத்துவந்தேன். ஒருநாள் என் எஜமானர் என்னைக்கூப்பிட்டு 'அரிச்சந்திராவதாரமாக வந்தவர் நீர். உம்முடைய வேலை எமக்கு வேண்டாம், உம்முடைய சம்பளத்தை வாங்கிக்கொண்டு இன்றையதினமே வேலையைவிட்டு நின்று விடும்'. என்றார். என்குற்றம் எதுவாயிருந்தாலும் மன்னித்து என்னை வேலையில் வைத்துக் கொள்ளும்படி பல்லைக் காட்டிப் பாதவித்து மன்றாட எனக்கு மனமில்லை. 'அன்றெழுதி விட்டவனுஞ் செத்து விட்டானோ' என்ற வாக்கையும்,

'மன்னவனும் நீயோ வளநாடு முன்னதோ
உன்னை அறிந்தோ தமிழை ஓதினேன்?'

என்ற கம்பர் உரையையும் எண்ணி தைரியங் கொண்டு, நான் என் எஜமானனை நோக்கி 'ஐயா, வேலையை விட்டுப் போவதற்குத் தடையில்லை. தயவுசெய்து நான் செய்த குற்றம் இன்னதென்று தெரிவிப்பீர்களா?' என்று கேட்டேன். 'நேற்றைய பத்திரிகையில் ஒரு நாவலைப் பற்றி நீர் எழுதிய அபிப்பிராயத்தில், அந்நாவிலுள்ள குற்றங்களை யெல்லாம் எடுத்துக் காட்டி விட்டீரல்லவா?' என்று அவர் வினவினர். உடனே எனக்குச் சங்கதி விளங்கிவிட்டது. அந் நாவல் மிக்க அந்தஸ்துடைய யாரோ ஒருவரால் எழுதப்பட் டிருக்கவேண்டும் என்று அறிந்து கொண்டேன். அந்தஸ்து மிக்க அந்நூலாசிரியர் பெயர் மறந்து போய்விட்டது. அவர் நூலைப்பார்த்தமட்டில் அவருக்குத் தமிழ் தெரியாதென்பதை நான் தெளிவாய் அறிந்து கொண்டேன். ஆனல் பல விஷயங்களில் அவர் சிறப்பும் பெருமையும் அந்தஸ்தும் வாய்ந்தவர் என்பதில் தடையில்லை. ஏனெனில், அவர் பட்டங்களும் பெருமைகளும் மெய்காப்பாளர்களைப்போல, அவர் பெயருக்கு முன்னும் பின்னுமாய், அவர் எழுதிய புத்தகத்தின் தலைப்பக்கத்தில் முக்காற்பகுதி அடைத்துக்கொண்டிருந்தன. அவரால்தான் நம்வேலைக்கு ஆபத்துவந்ததென்பதை நான் நன்ருய் அறிந்துகொண்டு, என் ஏஜமானர் கேள்விக்கு உத்தரமாக "நான் குற்றங்களை எல்லாம் எடுத்துக் காட்டவில்லை. எல்லாம் எடுத்துக் காட்டுவதென்ருல், நீங்கள் இடங் கொடுத்தாலும் பத்திரிகை இடங்கொடாதே" என்றேன். என் எஜமானருக்குக் கோபம் வந்துவிட்டது; 'இவ்வளவு அதிகப் பிரசங்கித்தனமாய் வார்த்தையாடும் உம்மை வைத்துக்கொண்டிருப்பது பத்திரிகைக்கே ஆபத்து; உம்முடைய சம்பளத்தைக் கொடுத்தனுப்பிவிடும்படி 'மானேஜருக்கு' உத்தரவு செய்திருக்கிறேன். சம்பளத்தை வாங்கிக் கொண்டு நல்லவேளையிற் போய்ச் சேரும்' என்று கடுமையாய்க் கூறிவிட்டு அவர் போய் விட்டார். 'ஆபத்துக்கஞ்சி உண்மையை மறைக்கும் இப்படிப்பட்ட பத்திரிகைக்கு உதவிப் பத்திராதிபராய் வேலை செய்வதைவிட பிச்சைப் பாத்திராதிபராய்ப் பிச்சையெடுத்துப் பிழைப்பது நல்லது' என்று நான் என்மனத்துள் எண்ணிக்கொண்டு சம்பளத்தைப் பெற்று வெளிவந்து விட்டேன்."

அன்பானந்தர்—"இப்பொழுது கையிலிருக்கும் பன்னிரண்டு ரூபாயும் செலவழிந்து விட்ட பிறகு என்ன செய்வீர்?"

மணிவாசகன்—" பிறகு பார்த்துக் கொள்வோம். உதவிப் பத்திராதிபர் வேலைபோன பிறகு, சாப்பாட்டுக் கவலை ஒருபுற மிருக்க, பெயரும் புகழும் பெறவேண்டுமென்ற ஆவல் ஒன்று எனக்கு உண்டாயிற்று. அந்த ஆவலால் ஒரு புத்தகம் எழுதத் துணிந்து எழுதிவருகிறேன். அநேகமாய் அதுவே என் வருவாய்க்கும் இடமாகும் என்று நினைக்கிறேன்."

அன்பானந்தர்—" நீர் கற்பாறைமேல் உட்கார்ந்து எழுதிக்கொடிருந்தது அந்தப் புத்தகந்தானே ? "

மணிவாசகன்—" ஆம் "

அன்பானந்தர்—" அது என்ன புத்தகம் ? "

மணிவாசகன்—" ஒரு நாவல் "

அன்பானந்தர்—" நாவலா ! நீர் தமிழ் மொழியில் நல்ல பயிற்சியுடையவராயிருக்கிறீர்; ஆங்கில பாஷையும் அறிந்திருக்கிறீர்; நுட்ப அறிவுடையவராயும் இருக்கிறீர். இவ்வளவு சாதனங்களுடைய நீர்கூட ஏது நாவல் எழுத முன்வந்துவிட்டீர்! இப்பொழுது வெளிப்படும் நாவல்களுக்குத்தான் கணக்கில்லையே! நீர் ஏதாவது உபயோகமுள்ள புத்தகம் ஒன்று எழுதக் கூடாதா ?"

மணிவாசகன்—" உபயோகமுள்ள புத்தகமென்றால் எனக்கு விளங்கவில்லையே; உபயோகமுள்ள புத்தகங்களுள் நாவல் ஒன்றல்லவென்பது தங்களுடைய கருத்தோ ? "

அன்பானந்தர்—"அப்படிச் சொல்லவில்லை. நாவல் யாரும் எழுதலாம். உம்மைப் போன்ற கல்வியறிவாளர்களால் மட்டும் எழுதக் கூடிய புத்தகங்கள் பல இல்லையா ? அவற்றுள் ஒன்றை நீர் எழுதலாமே யென்றேன்."

மணிவாசகன்—"ஐயா, நாவலைப்பற்றித் தாங்கள் கொண்டுள்ள அபிப்பிராயம் தவறானது. தாங்கள் சொல்வதுபோல, எவரும் நாவல் எழுதிவிடமுடியாது. வேறுவிதமான புத்தகங்கள் எழுதுவதற்கு எவ்வாறு சில திறமைகள் வேண்டுமென்று கருதுகிறீர்களோ, அவ்வாறே நாவல் எழுதுவதற்கும் சில திறமைகள் வேண்டும். இப்பொ

ழுது வெளிவரும் நாவல்களுக்குக் கணக்கில்லை யென்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால், அவையெல்லாம் நாவலாய்விடமாட்டா. 'பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ?' அதுபோலவே, நாவல் என்று பெயர் படைத்தனவெல்லாம் உண்மை நாவலாகா. கண்டவர்கள் தமிழ் நாவல் எழுதி வருவதை நான் அறிவேன். ஆனால், தமிழ் மொழியில் நல்ல பயிற்சியும் புலமையும் உடையவர்கள்தாம் தமிழ் நாவல்கள் எழுதுவதற்கு அருகர்களே அன்றி மற்றவர்கள் அருகரல்லர். ஆயினும், தமிழ்நாடு செய்த பாவம் போலும்! அத்தகையார் நாவல் எழுத முன்வருவதில்லை. வல்லினம், மெல்லினம் இவையெனத் தெரியாத பல மூடர்கள் தமக்குத் தோன்றியவற்றை, அறிவுடையோர் பார்த்தாலும் அருவருக்கத்தக்க ஆபாச நடையில் எழுதி, 'நாவல்' என்ற பட்டஞ்சூட்டி வெளிப்படுத்தி விடுகிறார்கள். தமிழ் மொழியில் இலக்கணப் பிழையின்றி நான்கு வரி சேர்ந்தாற்போல் எழுதத் தெரியாத நிபுணர்கள் சிலர், பி. ஏ., எம். ஏ., முதலிய பட்டப் பெயர்கள் தமக்கிருப்பதால், தாம் எது செய்தாலும் தகுமென்ற மூடமதியால், தமிழ் நாவல் எழுதி வெளியிட்டுவிடுகிறார்கள். பி. ஏ., எம். ஏ., முதலிய பட்டங்களுக்கும் தமிழுக்கும் என்ன சம்பந்தம்? வேறு சில வெட்கமற்ற நாவலாசிரியர்கள் இருக்கிறார்கள். தமிழில் நாவலெழுதுவதற்கு இவர்களுக்குள்ள யோக்கியதை என்ன வென்றால் சமஸ்கிருதத்தில் பாண்டித்யம்! மல்யுத்தத்தில் தனக்குள்ள வன்மையால் சங்கீதம் பாட முன்வரும் மூடனுக்கும் இவர்களுக்கும் என்ன வித்தியாசம்! இவர்களால் தமிழுக்கு நேரும் கெடுதி கொஞ்சமல்ல. சுத்தமான தமிழென்பதே இப்பொழுது அருமையாய்விட்டது. அமைந்த குணமும் அடக்கமான இனிய தோற்றமு முடைய ஒரு குலமகளுடன், "பட்டப்பகலில் வெளிமயக்கே செய்யும்" படாடோப அலங்கிருதையான ஒரு விலைமகளைச் சமமாய் வைத்தால், எதையும் ஆழ்ந்து நோக்கும் இயல்பில்லாத சாமானியர்கள் எப்படி அக்குலமகளை அலட்சியமாய்க் கருதி அவளோடிருக்கும் விலைமகளை அவளுக்குமேலான நலமுடையவளாக மதித்து மயங்குவார்களோ, அப்படியே மெல்லிய இனிய செந்தமிழ் மொழியோடு, படாடோப பாஷையாகிய சமஸ்கிருதத்தை, வரையின்றிக் கலந்தெழுதப்பட்ட புத்தகங்களைப் படிப்பதால், பாமரர்களுக்குத் தம் தாய்மொழியாகிய தமிழைவிட அயல்மொழியாகிய சமஸ்கிருதத்தில் மதிப்பு அதிகமாய் உண்டாய்விடுகிறது. இவ்வாறு தமிழ்

மொழியை அவமானப் படுத்தித் தாய்க்கொலை செய்யும் இப்பாதகர்கள் கையால் எழுதப்பட்ட நூலும் நூலாமா?"

அன்பானந்தர்—"ஆனல், தமிழைத்தவிர வேறு பாஷைகளில் பழகியவர்கள் தமிழ்ப் புத்தகங்கள் எழுதக் கூடாதென்று சொல்கிறீர்?"

மணிவாசகன்—"ஒரு பாஷையிற் புலமை உடையவர்கள் வேறு சில பாஷைகளையும் அறிந்திருப்பது நல்லதுதான். ஆனல், எந்தப் பாஷையில் ஒருவன் நூல் எழுதுகிருனே, அந்தப் பாஷையில் பூரண அறிவு அவனுக்கு இருக்கவேண்டியது அவசியமல்லவா? அது போலவே, தமிழில் நூல் எழுதுபவனுக்கு முதன் முதல் அவசியம் இருக்கவேண்டிய யோக்யதை தமிழ் மொழியில் நிறைந்த புலமை என்பதுதான் நான் சொல்வது. அதனேடு வேறுசில பாஷைகளிலும் அவனுக்குப் பயிற்சி இருக்குமானல், மிகவும் நல்லது தான்—பொன்மலருக்கு, வாசனையும் ஏற்பட்டது போலிருக்கும். பிறபாஷைகளில் தனக்குள்ள அறிவால், தமிழ்ப் பாஷையை மேம்படுத்துவோனே தமிழ்ப் புலவன்—தமிழில் ஒரு நூலுக்கு ஆசிரியனுக வெளிவரக் கூடிய யோக்கியதை உடையவன்."

இவ்வாறு அன்பானந்தருடன் சம்பாஷித்துக் கொண்டிருந்த மணிவாசகன், சூரியன் அஸ்தமிப்பதைக்கண்டு அன்பானந்தரை நோக்கி, "நேரமாயிற்று. தாங்கள் வீட்டுக்குப் போகவேண்டாமா?" என்ருன்.

"ஆம். போகலாம்," என்று அன்பானந்தர் எழுந்தார். நம் இளைஞனும் எழுந்தான். இருவருக்கும் முன்னுக, சூரன் எழுந்து சிறிது தூரம் சென்று, அவர்கள் வரவை எதிர் பார்த்து நின்றது.

எழுந்த அன்பானந்தர், நம் மணிவாசகனைக் கூர்ந்து நோக்கிய வண்ணம் சிறிது நேரம் நின்ருர். மணிவாசகனின் கல்வித் திறத்தையும், சிறிது பொழுது அவனேடு சம்பாஷித்ததினுலேயே நன்ருய் விளங்கிய அவன் உத்தம குணத்தையும், அக்கல்விக்கும் குணத்துக்குமேற்ற அவன் கட்டழகையும் நினைக்க நினைக்க அன்பானந்தர் மனத்தில், அவனைப் பார்த்த வுடனேயே உண்டான ஓர் எண்ணம்

உறுதிப்படுவதாயிற்று. அவ்வெண்ணமாவது, தன்னை ஆதரித்தவரும், நற்குண 'மங்கைக்கேற்ற மணாளன்' இவனே, என்பதே. 'கலாவதிக் கேற்றவன் கலாவல்லபனாகிய மணிவாசகனே' என்ற எண்ணம் உறுதிப்படவே, அவனைத் தன்னுடன் அழைத்துச் சென்று, இம்மணியும் அப்பெண்மணியும் ஒருவரையொருவர் சந்திக்கும்படி செய்ய வேண்டுமென்ற விருப்புடையவராய் அன்பானந்தர் பால பண்டிதரை நோக்கி, "ஐய, சிறந்த அறிவும், கல்வியும், அழகுமுடைய உம்மை இவ்வளவு சீக்கிரத்தில் விட்டுப் பிரிவதற்கு எனக்கு மனமில்லை. உமக்கு மாற் கூடுமானால், தயவு செய்து என்னுடன் என் வீட்டிற்கு—நான் இருக்கும் வீட்டிற்கு—வருவீரா? இன்னும் சிறிது நேரம் பேசியிருக்கலாம்" என்றார்.

கல்வி சம்பந்தமான விஷயங்களைப் பேசிக்கொண்டிருப்பதையே பேரானந்தமாகக் கருதின கலாபூஷணனாகிய மணிவாசகன், அன்பானந்தர் விருப்பத்திற்குத் தடை சொல்லாமல், உடனே அதற்கு இசைந்தான்.

# XIV

## "கண்ணுங் கண்ணுங் கலந்தால்?"

காதலன் பிரிவைப் பொறுக்க முடியாது உள்ளம் வருந்த உடற் பொலிவிழக்கும் காதலிபோல, சூரியன் மறையவும் நிலமகள் ஒளி மழுங்கினாள். தந்தையின் பிரிவால் தாய்படும் வருத்தத்தைச் சேய் கண்டு தன் விளையாட்டைவிட்டு ஓடி வந்து, ஒன்றுந்தோன்றாது உள்ளங் கலங்கித் தன் தாயின் மடியில் ஒடுங்கி அமைந்திருப்பதுபோல, பகற்பொழுதெல்லாம் இனத்தோடு கூடி இங்குமங்கும் திரிந்துகொண்டிருந்த புள்ளினங்கள், தத்தம் கூடுகளிற் சென்று ஒடுங்கின. துயர்கொண்டு சோகமுறும் தலைவியைத் தேற்றியாற்றிச் சோகந்தீர்க்கத் தோழியர் பலர் விசிறிகொண்டு வீசுவது போல, மரங்கள் பலவும் தம் பசுங்கிளைகளை அசைத்து மெல்லெனக் காற்றெழ வீசின. எங்கும் அமைதி பரவி வந்தது.

இரவும் பகலும் சந்திக்கும் அந்திக்காலம் என்னும், அந்தக் காலத்தின் அந்தமில்லா அழகு போதாதென்று, தன் சொந்த அழகையும்

அஜ்ஜற்குச் சேர்ப்பவள் போலத் தன் வீட்டு வாயிற்படியில், நற்பாவலர்க்கும் சொற்பாலடங்காப் பொற்பார்ந்த பொற்பாவையொன்று யொலிவுற நிற்பதேபோல், நம் கலாவதி நின்றுகொண்டிருந்தாள். அவள் கண்கள் ஒருதிசையை உற்று நோக்கிக்கொண்டிருந்தன. அத்திசை வழியாய் ஒருவர் வருவாரென்று அவள் எதிர் பார்த்துக்கொண்டிருந்தாள். சிறிது நேரத்தில் அவளால் எதிர்பார்க்கப் பட்டவர் அவள் கண்ணுக்குத் தோற்றினர். ரூபவதியும், குணவதியும், கலாவதியுமான அவளால், அவ்வளவு அன்புடனும் கவலையுடனும் எதிர்பார்க்கப்படும் அத்துணைப் புண்ணியஞ் செய்த பாக்கிய சீலர் யார்? அவரே நம் அன்பானந்தர்! தன் அன்பைக்கொண்ட அவருடன், தன் காதலைக் கொள்ளை கொள்ள ஒருவன் வருவதைக் கலாவதி முதலில் கவனிக்கவில்லை. 'பொழுதாய்விட்டதே; நான்கு மணிக்கு வெளியே சென்ற வயோதிகர் இன்னும் வரவில்லையே; நோயிலிருந்து எழுந்தவராதலாலும், தள்ளாமை மேலிட்டவராதலாலும் தொலைதூரம் சென்று திரும்பி நடந்து வரமாட்டாமல் எங்கிருந்து வருந்துகிறாரோ' என்ற கவலையுடன் கலாவதி அவர் வரக்கூடிய வழியை ஆவலோடு பார்த்துக்கொண்டிருந்தவளாதலால், அவரைப் பார்க்கும் வரையில் வேறெவரும் அவள் கண்ணிற் படவில்லை. ஆனால், அவரைப் பார்க்கவும் அவள் கவலை யொழிந்தது. அவள் முகம் மலர்ந்தாள். அப்பால், அவருக்கு முன் வந்து கொண்டிருந்த சூரன் அவள் கண்ணிற்பட்டது. அந்நாயின் நன்றியறிதலையும் விசுவாசத்தையும் நினைத்து அவள் மனம் பூரித்தாள்.

சூரன், கலாவதியைக் காணவும் குதித்தோடி அவளருகே வந்து வாலைக் குழைத்துக்கொண்டு, தன் நாவைப்போல் மெல்லிதான அவள் பாதங்களை நக்கியது. அவள் குனிந்து அதன் முதுகை அன்போடு தடவிக்கொடுத்துவிட்டு, நிமிர்ந்து அன்பானந்தரை நோக்கினாள். அவர் மிகவும் சமீபத்தில் வந்துவிட்டார். ஆதலால், அவரை நோக்கிய கலாவதியின் கண்கள் அவரோடு பேசிக்கொண்டுவந்த மணிவாசகத்தின் மீதும் சென்றன. ஆனால், அப்படிச் சென்ற தன் கண்களை உடனே மீட்டுக்கொண்டு, கலாவதி வீட்டுக்குள் சென்றுவிட்டாள். மணிவாசகத்தின் மீது சென்ற கண்களை அம்மாசிலா மங்கை மீட்டுக்கொண்டனளாயினும், அவை தாம் சென்று பற்றிய உருவத்தை

மீண்டு வரும்போது தம்முடன் இழுத்துக்கொண்டு வந்துவிட்டன! மணிவாசகம் கண்மறைய அவன் வீட்டுக்குள் சென்றும், அவள் எதிரே அவன் தோன்றிக்கொண்டிருந்தான். தெளிந்த அறிவும் அமைதியான உள்ளமும் உடைய அவள், சிறிது அறிவு குழம்பலுற்றுள்; உள்ளம் தடுமாறலுற்றுள்.

விளக்கேற்றிக்கொண்டிருந்த அவள் அன்னை, மகள் உள்ளே வரக்கண்டு "என் அம்மா, பெரியவர் வந்து விட்டாரா?" என்று கேட்டாள்.

"எந்தப் பெரியவர் ?" என்றுள் கலாவதி.

"அவர்தான்" என்று சொல்லிவிட்டு விளக்கேற்றிக் கொண்டிருந்த அன்னை ஆதிசயத்தோடு தன் மகளை உற்று நோக்கினுள். ஏனெனில், அன்பானந்தரைப் 'பெரியவர்' என்று வழங்கி வழக்குத்தக்கு வந்துவிட்டதை நன்குய் அறிந்த கலாவதி, இப்பொழுது 'எந்தப் பெரியவர்?' என்று அறியாதவள்போல் கேட்டது அவள் அன்னைக்கு மிகவும் ஆச்சரியத்தை விளைத்தது. கலாவதிக்கு உண்டாயிருக்கும் மாறுதலை அவள் அறியாள்! கலாவதி தன் அன்னை 'அவர்தான்' என்று கூறித் தன்னை உற்றுநோக்கவும், 'எங்கேயோ ஞாபகம் வைத்துக்கொண்டு நாம் அன்னையின் கேள்விக்கு ஏதோ விடைகூறிவிட்டோமே! அவள் வினவுவது நம் பெரியவரைப்பற்றித்தான்' என்று தனக்குள் உள்ளந் தெளிந்து உணர்ந்துகொண்டு, தன் தாயை நோக்கி, "நம்பெரியவரா? இதோ வருகிறுர். அம்மா, நீங்கள் இருங்கள், விளக்குகளை நான் ஏற்றுகிறேன்" என்று கூறி, தாயிடம் இருந்த விளக்கைத் தான் வாங்கிக்கொண்டாள். அன்னை விளக்கை மகளிடம் கொடுத்த பிறகு வீட்டுவாயிலை நாடிச் சென்றுள்.

'அன்னைக்கு அதிகவேலை கொடுக்கக் கூடாது. கூடியவரையில் வீட்டுவேலைகளை நாமே பார்த்துவரவேண்டும்' என்ற கருத்து, கலாவதிக்கு எப்பொழுதும் உண்டு. ஆயினும், இப்பொழுது அவள் தன் அன்னை செய்துவந்த வேலையைத் தான் ஏற்றுக்கொண்டது அந்தக் கருத்துடனேதான் என்று சொல்வதற்கில்லை. 'அன்பானந்தரோடு பேசிக்கொண்டுவரும் புருஷன், ஒரு சமயம் அவரைத்தொடர்ந்து வீட்

டிற்குவரக்கூடும்; 'அப்படி வந்தால் அவன் கண்ணிற்படாமலிருக்க வேண்டும்; வெளியே சென்று திரும்பிவரும் பெரியவரை உபசரிப்பதற்கு நாம் செல்வோமானால், நாம் பார்க்கக் கூடாதென்றிருக்கிற புருஷனைப் பார்க்கும்படி நேரும்; அன்னை செய்துகொண்டிருக்கும் வேலையை நாம் ஏற்றுக்கொண்டோமானால், பெரியவர் வந்ததும், நாம் கைவேலையாய் இருப்பதைக் கருதி, அன்னை தானே அவருக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்வாள்' என்ற கருத்தே கலாவதியை அவ்வாறு செய்யத் தூண்டியது.

'இந்திய மாதர்கள் சிறைப்படுத்தப் பட்டவர்களைப் போல வீட்டினுள்ளேயே அடைபட்டிருப்பவர்கள். வெளியுலகம் இன்னதென்றே அவர்களுக்குத் தெரியாது' என்று பம்பாய், கல்கத்தா, சென்னை முதலிய சில பிரபல பட்டணங்களை மட்டும் பார்த்துவிட்டுச் செல்லும் அன்னிய நாட்டார் சிலர், நம் வழக்க ஒழுக்கங்களைப் பற்றி இகழ்வாகக் கூறுவதும், படாடோபமாக சரித்திரங்கள் எழுதுவதும் வழக்கமாயிருக்கிறது. ஆனால் அது உண்மையல்லவென்பதை, தற்கால நாகரீக வலைக்குள் அகப்படாத சாதாரண குக்கிராமங்களிலும் சிற்றூர்களிலும் அங்குள்ளவர்கள் வாழ்க்கையை நன்றாய்க் கவனிப்பவர்கள் எவரும் எளிதில் அறிந்து கொள்ளலாம். நம் நாட்டவர்கள் வழக்க ஒழுக்கங்களில் குறைபாடுகள் பலவுள—சீர்திருத்தப்படவேண்டிய ஆசாரங்கள் அநேகம் உண்டு. ஆனால் 'மாதர் சிறை' அவற்றுள் ஒன்றல்ல. 'கோஷா' வழக்கம் மகமதியர்களால் இந்தியாவுக்குக் கொண்டு வரப்பட்டதேயொழிய, அது இந்தியர் வழக்கமல்ல. பண்டைக்காலத்துத் தமிழ் மக்களிடத்து அவ்வழக்கம் இல்லவே இல்லை யென்பது நிச்சயம். நம் பழவ தமிழ் நூல்களெல்லாம் அதற்குச் சாட்சி பகர்கின்றன.

இப்பொழுது கூட, பட்டணவாசிகளான சில செல்வர்களும், பெரியஉத்தியோகஸ்தர்களும் மட்டும் தங்கள் வீட்டுமாதர்கள் வெளியே தலைக்காட்டுவது அகெளரவமென்றோ, வேறு எந்த மூடமதி கொண்டோ, அவர்களை வீட்டிலேயே சிறைப்படுத்தி வைத்திருக்கிறார்களேயொழிய, சாதாரண ஜனங்களிடத்தும், கிராம வாசிகளிடத்தும் அந்தக் கொடிய வழக்கம் இல்லை. ஆயினும், பக்குவமுற்ற பெண்கள் விவாகம் ஆகும் வரையில் வீட்டைவிட்டுவெளிப்படாமலும் புருஷர்

கள் கண்ணிற்படாமல் மறைந்திருப்பதும், நம்மவர்கள் எல்லோரிடத்தி லும் வழக்கமாயிருக்கிறது. இதிலுங்கூட, நகரவாசிகளைப் போல கிராம வாசிகள் அவ்வளவு கொடுமை காட்டுவதில்லை. சிறுகிராமங்களில், பக் குவமான பெண்கள் தம் வீட்டிலும், தம் வீட்டைச் சுற்றி சிறிது தூரத் திலும், சர்வ சுதந்தரத்துடனும் இருப்பதை இன்றுங் காணலாம். பெருந்துறை ஒரு சிற்றூரே ஆகையால், அங்குப் பிறந்து வளர்ந்த நம் கலாவதி, பக்குவமுற்று விவாகமாகாத பெண்ணாயிருந்தும், சர்வசுத ந்தரமும், அச்சுதந்தரத்தால் உண்டாகும் மனோதிடமும், இனிய குண மும் உடையவளாயிருந்தாள். மேலும், அவள் தந்தை அவளுடைய சுதந்தர உணர்ச்சியை விருத்திசெய்து, சாதாரண புருஷர்களைக் கண் டால் தன்னைக் கண்டதும் பிடித்துத் தின்றுவிடும் காட்டு மிருகங்களை ப்போல அவர்களைக் கருதி ஓடி ஒளியாமல், அவர்களும் மனிதர்கள் தாம்—தன்னைபோலவே பெண்களையோ, தங்கை தமக்கைகளையோ உடையவர்கள் தாம்—என்று கருதி அக்கருத்துக்கேற்றவாறு நடந்து கொள்ளும்படி கற்பித்திருக்கிறார். ஆதலால், அன்பானந்தருடன் வரும் புருஷன் கண்ணில் தான் எதிர்படாமலிருக்க அவள் விரும்பி யது, தான் பக்குவமுற்ற பெண் என்ற அந்தக் கருத்தினாலல்ல. வேறெதனாலோ வெனின், உங்களுக்கும் எமக்கும் தெரிவதரிதாகிய ஒரு காரணத்தினாலாயே இருக்கவேண்டும். என்ன காரணத்தினாலோ, மணிவாசகத்தைக் கண்டதும், அவளையும் அறியாமல் அவளுக்கு ஒரு வகை நாணம் உண்டாய்விட்டது! அவனைப் பார்ப்பதற்கு அவள் நாணினாள்!!

கலாவதி வீட்டு வாயிற்படியில் நிற்பதைக் கண்டவுடன் அன் பானந்தர், அவளை மணிவாசகத்துக்குக் காட்ட வேண்டுமென்ற கருத் துடன்—கையாற் சுட்டிக் காட்டினால் அவள் கவனிப்பாளென்று— "ஐயா, புலவரே, அதோ ஒரு பெண் நிற்கின்றாளே, அது தான் நம் வீடு" என்றார். புலவர், அவர் கூறியகுறிப்பின்மேல், அப் பெண் நிற் கும்—வீட்டைப் பார்க்கவில்லை—நிலையைப் பார்த்தார். உடனே,

"கற்பகத்தின் பூங்கொம்போ! காமன்றன் பெருவாழ்வோ!
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ! புயல்சுமந்து
விற்குவளைப் பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ!
அற்புதமோ! சிவனருளோ! அறியேன் என்றதிசயித்தார்!"

அவ்வதிசயத்தாற் சிறிதுநேரம் மௌனமாய் அவளைப் பார்த்தபடியே சென்றான். பிறகு அன்பானந்தரை நோக்கி "அந்தப் பெண் யார்? தங்கள் புதல்வியா ?" என்று வினவினான்.

"ஆம்" என்றார் அன்பானந்தர். மணிவாசகத்தின் மறுகேள்வி "விவாகமாய் விட்டதா ?" என்பது.

"இல்லை" என்பது அதற்கு விடையாய் வரவே, மணிவாசகன் மகிழ்வெய்தினான். அவன் அங்ஙனம் அகமகிழும் படியாக 'இல்லை' என்னும் அப்பதத்தில் என்ன இன்பம் இருக்கிறதோ எமக்குத் தெரியவில்லை.

இங்ஙனம் அன்பானந்தரை இரண்டு கேள்விகள் கேட்டு அவற்றிற்கு 'ஆம்' 'இல்லை' என்ற இரண்டு விடைகளைப் பெற்ற பிறகு, மீண்டும் மணிவாசகன் அப் பெண்மணியை நோக்கினான்—இல்லை, நின்ற இடத்தை நோக்கினான். ஏனெனில் பெண்மணி, நாம் முற்கூறியது போல, தன்மனையுள் சென்று விட்டாள்! மணிவாசகன் திகைத்தான்; தியங்கினான்; முகம் வாடினான்; அவள் நின்றவிடத்தை உற்றுற்று நோக்கினான். வெறுவெளிதான் காணப்பட்டது! மின்னொளி மறைந்து போயிற்று!

"இதென்ன மாயத்தோற்றமா!' என்று அவன் சிந்தித்துப் பார்த்தான். சிந்தையில் ஒன்றும் விளங்கவில்லை. தன் மனம் தன்னிடத்தில் இல்லையென்ற ஓர் உணர்ச்சி அவனுக்கு உண்டாயிற்று.நம்கண்ணுக்குத் தோற்றிய அப் பெண்ணுக்கு என்ன தைரியம்! 'கண்மூடிக் கண்திறப்பதற்குள் நம் மனத்தைக் கொள்ளை கொண்டு போய்விட்டாளே!' என்று எண்ணி, வியப்பும் விசனமும் ஒருங்கெய்தினான். 'வயோதிகரோடு நடந்து செல்வது எவ்வளவு கஷ்டமாயிருக்கிறது. விரைவாய் நடக்க முடியவில்லையே' என்று தனக்குள் மனம் சலித்துக்கொண்டான். 'இவ்வயோதிகர் ஒருவர் உடன் வராவிட்டால் ஓடிச்சென்று, என் உள்ளத்தைக் கவர்ந்துசென்ற அக்கள்ளியைக் கைப்பற்றி, உள்ளத்தைச் சொல்லி என் உள்ளத்தை என்னிடம் கொடு, என்று கேட்டுப் பெற்றுவந்திருப்பேனே' என்று கருதிக் கருத்தழிந்தான்.

மணிவாசகத்தின் உள்ளம் வேறிடத்திற் சென்றுள்ள தென்பதை நன்குய் உணர்ந்த அன்பானந்தர், அவனோடு ஒன்றும் உரையாடாமல் மௌனமாகவே சென்றார். சில நிமிஷங்களில்—மணிவாசகத்தின் கணக்குப்படி பல மணிகளாயினும், நம் கணக்குப்படியும், கடியாரக் கணக்குப்படியும் சில நிமிஷங்களில்—அன்பானந்தர் மணிவாசகத்துடன் கலாவதியின் வீட்டை அடைந்து, அப்புலவரைத் திண்ணையில் உட்காரச் சொல்லித் தாமும் உட்கார்ந்தார்.

வாயிலருகே நின்று கொண்டிருந்த கலாவதியின் அன்னை அன்பானந்தரைக் காணவும் "ஏன் இவ்வளவு நேரம் தாமதித்து விட்டீர்கள் ?" என்று கேட்டாள்.

அன்பானந்தர், மணிவாசகத்தைச் சுட்டிக் காட்டி, "எனக்கு அறிமுகமான இவரோடு பேசிக்கொண்டிருந்து விட்டேன்" என்று கூறிவிட்டு "கலாவதியை, கொஞ்சம் வெந்நீர் கொண்டு வரச் சொல்லுங்கள்" என்றார்.

"இதோ கொண்டுவரச் சொல்லுகிறேன்" என்று கூறி, அவள் உள்ளே சென்று சமயலறையில் ஏதோ வேலைசெய்துகொண்டிருந்த தன் மகளை நோக்கி "அம்மா, பெரியவர் வந்துவிட்டார். கொஞ்சம் வெந்நீர் வேண்டுமாம். கொண்டுபோய்க்கொடு" என்றாள். வெந்நீர் கொண்டுபோவதன்முன் அன்பானந்தருடன் பேசிக்கொண்டுவந்த புருஷர் அங்கும் அவரோடு வந்திருக்கிறாரா என்று அறிய விருப்பிய கலாவதி, வேலையில் கவனஞ் செலுத்தியிருப்பவள்போல "யாருக்கு?" என்று ஒரு கேள்வி கேட்டுவிட்டுத் தன் வேலையைச் செய்துகொண்டிருந்தாள்.

"அவருக்கோ, அல்லது அவருக்கு அறிமுகமானவர் ஒருவர் அவரோடு வந்திருக்கிறார், அவருக்கோ தெரியவில்லை," என்றாள் அவள் அன்னை.

கலாவதி அறிய விரும்பிய விஷயம் வெளிவந்துவிட்டது. அவள் அன்னையை நோக்கி, "அம்மா, கைவேலையாயிருக்கிறேனே; தயவு செய்து நீங்களே வெந்நீரைக் கொண்டுபோய்க் கொடுத்து விடுகிறீர்களா ?" என்றாள்.

"ஆனால் சரி. நீ உன் வேலையைப் பார். நானே கொண்டுபோய்க் கொடுக்கிறேன்" என்று கூறி, அவள் அன்னை ஒரு பாத்திரத்தில் வெந்நீர்கொண்டுபோய் அன்பானந்தரிடம் கொடுத்தாள்.

"நீங்களா கொண்டுவந்தீர்கள்! ஏன்? கலாவதி வீட்டில் இல்லையோ?" என்று வினவிக்கொண்டே அன்பானந்தர் அவள் கொண்டு வந்து கொடுத்த வெந்நீரை வாங்கினார்.

"இருக்கிறாள். ஏதோ கைவேலையாய் இருப்பதால் என்னைக் கொண்டு போகச் சொன்னாள்" என்று கலாவதியின் தாய் விடையளித்தாள்.

அன்பானந்தருக்கு விஷயம் விளங்கிவிட்டது. வெளியிற் சென்று திரும்பிவரும் தம்மை எதிர்கொள்ள ஆவலோடு நிற்கும் கலாவதி, தாம் வந்ததறிந்தும் தம்மைப் பார்த்துப் பேசவராமல் உள்ளிருக்கமாட்டாள். தம்மோடு ஒரு யௌவனர் வந்திருப்பதை அறிந்துகொண்டு அவரெதிரே வருவதற்கு நாணியே ஏதோ சாக்குச் சொல்லித் தன் அன்னை கையில் வெந்நீரைக் கொடுத்தனுப்பிவிட்டாள் என்று, அவர் நன்றாய் உணர்ந்து கொண்டார். தம் விருப்பம் நிறைவேறவில்லையே என்றெண்ணிக் கொண்டு அவர் மணிவாசகத்தை நோக்கி "கொஞ்சம் வெந்நீர் சாப்பிடுகிறீரா?" என்றார்.

வெந்நீர் பருகாமலே உடல்வியர்க்கும் நிலையிலுள்ள நம் வித்வசிரோமணிக்கு வெந்நீர் எதற்கு? "வேண்டாம், நீங்கள் சாப்பிடுங்கள்" என்றான் மணிவாசகன்.

அன்பானந்தர் அவ்வெந்நீரிற் சிறிது பருகிவிட்டுப் பாத்திரத்தைக் கலாவதியின் அன்னைகையிற் கொடுத்துவிட்டார். அவள் அதை வாங்கிக்கொண்டு "எவ்வளவு தூரம் போயிருந்தீர்கள்?" என்று வினவினாள்.

அன்பானந்தர் தாம் சென்றவிடத்தையும், அங்கே மணிவாசகத்தைக் கண்டதையும், அவன் கல்வித்திறம் முதலியவைகளைப் பற்றியும் கூறினார். சுமார் அரைமணிநேரம்போல் இவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருந்தார்கள்.

கலாவதி, கோவிலுக்குப்போகும் நேரமாதலால், அவசியம் வெளியே வருவாள்: அப்பொழுதாவது அவளும் மணிவாசகமும் ஒருவரையொருவர் காணட்டும் என்று கருதியே, அன்பானந்தர் பேச்சை வளர்த்துக்கொண்டிருந்தார்: ஆனல் கலாவதி வெளியே வருகிற வழியைக் காணேம்: ஒருசமயம் இன்றைக்குக் கோவிலுக்குப் போகாமலிருந்தாலும் இருந்துவிடுவாள்; அப்படியானல், மணிவாசகனை இன்றிரவு இங்கேயே நிறுத்திவிடவேண்டுமென்று அவர் தீர்மானித்தார்.

மணிவாசகன் அன்பானந்தரோடு வரச் சம்மதித்தபோது, அவர் வீட்டுவரையில் அவரைக்கொண்டுபோய் விட்டுவிட்டுத் திரும்பிவிட வேண்டுமென்பதே அவன் எண்ணமாயிருந்தது. ஆனல், அந்த எண்ணம்—அல்லது விருப்பம்—இப்பொழுது அவனுக்கில்லை: கலாவதியைப் பார்ப்பதெப்போது என்ற எண்ணமே முதன்மையாயிருந்தது. ஆயினும், பேசாமலிருப்பது மரியாதையல்லவென்று அவன் அன்பானந்தரை நோக்கி, "நேரமாயிற்று, நான் செல்ல விடைகொடுக்க வேண்டும். இரண்டுமைல் தூரம் போகவேண்டுமல்லவா?" என்றுன்.

அன்பானந்தர் சிறிது நேரம் யோசித்துப் பிறகு, மணிவாசகனை நோக்கி, "விளக்குவைத்தாயிற்று. இருட்டிப்போய் விட்டது: இனிமேல் இரண்டுமைல் தூரம் நடந்து செல்வதென்றுல் சரியல்ல. இங்கேயே சாப்பிட்டுவிட்டுத் தங்கியிருந்து காலையில் எழுந்துபோகிறதுதானே?" என்று கூறி, வாயிற்படியில் நின்றுகொண்டிருந்த கலாவதியின் அன்னையை நோக்கினர். அவள் அவர் நோக்கிய கருத்தை அறிந்து கொண்டு மணிவாசகனைப் பார்த்து, "ஆம், அவர்கள் சொல்கிறது நியாயந்தான். இந்த நேரத்துக்குமேல் தனியே செல்வது நல்லதல்ல; இங்கேயே சாப்பிட்டுத் தங்கியிருந்து காலையில் போகலாம்" என்றுள்.

மணிவாசகன் சிறிது நேரம் யோசித்தான். பிறகு, "அப்படியொன்றும் நேரமாய்விடவில்லையே. இப்பொழுதுதான் விளக்குவைத்தது. மேலும், நிலவு நன்றுய் எறிக்கிறது. வீணே ஏன் உங்களுக்குச் சிரமம் கொடுக்க வேண்டும்?" என்றுன்.

"எங்களுக்குச் சிரமம் ஒன்றும் இல்லை. இங்கே தங்குவது உமக்குச் சிரமமானல், நாங்கள் கட்டாயப்படுத்தவில்லை. படித்தவர்களைப்

பார்ப்பதே இங்கு அரிதாயிருக்கிறது, ஆதலால், உம்மைப் போன்ற பண்டிதர்களைக் கண்டால் எனக்கு விட்டுப் பிரிய மனம்வரவில்லை. சாப்பிட்டுச் சற்றுநேரம் நல்லவிஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கலாமென்று பார்த்தேன். உமக்கு இஷ்டமில்லாவிட்டால் நான் என்ன செய்யக் கூடும்?" என்றார் அன்பானந்தர்.

உடனே மணிவாசகன், "இல்லை, இல்லை. எனக்கு இஷ்டமில்லாமலில்லை. சிரமங் கொடுப்பானேன் என்று கருதினேன், வேறொன்றுமில்லை. தாங்கள் இவ்வளவு அன்பாய் என்னை இருக்கும்படி சொல்லும்போது, அதை மறுப்பேனா? உங்களிஷ்டப்படியே காலையில் போகிறேன்" என்றான்.

"சந்தோஷம்" என்றார் அன்பானந்தர்.

"பேசிக்கொண்டிருங்கள். நான் சீக்கிரம் சமைக்கச் சொல்லி விட்டு வருகிறேன்" என்று கூறிவிட்டுக் கலாவதியின் அன்னை உட் சென்றாள்.

பிறகு, அன்பானந்தர் திண்ணைச் சுவரில் சாய்ந்துகொண்டு மணிவாசகனை நோக்கி, "என் ஐயா, நீர் ஊர் ஊராய்ச் சுற்றுவதென்று புறப்பட்டு விட்டீரே. விவாகம் செய்துகொண்டு குடியும் குடித்தனமுமாக ஓர் இடத்தில் தங்கவேண்டுமென்ற நினைப்பே இல்லைபோலிருக்கிறது?" என்று வினவினார்,

மணிவாசகம்—"விவாகம் செய்துகொண்ட பிறகல்லவோ அந்த யோசனை?"

அன்பானந்தர்—"விவாகம் செய்து கொள்ளவே உமக்கு இஷ்டமில்லையோ?"

மணிவாசகம்—"இஷ்டமில்லாமலல்ல. என் வாழ்க்கைக்கு விவாகம் அனுகூலமாகுமோ பிரதிகூலமாகுமோ என்ற அச்சமே என்னை விவாக விஷயத்தில் அதிக சிந்தனையில்லாமற் செய்கிறது."

அன்பானந்தர்—"வாழ்க்கைக்கு அனுகூலமாகத்தான் யாரும் விவாகம் செய்து கொள்வார்கள். அதில் உமக்கு அச்சமென்ன? பதிவிரதா தர்மத்தில் தவறாத பத்தினி கிடைப்பாளோ என்ற அச்சமோ?"

மணிவாசகம்—"அதைப் பற்றி அவ்வளவு அச்சமில்லை. விவாகம் செய்து கொண்ட மனைவி பதிவிரதையா யில்லாவிட்டால், இல்லறத்தைத் துறந்துவிடலாம்;

'பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்
எத்தானுங் கூடி யிருக்கலாம்—சற்றேனும்
ஏறுமா றாக இருப்பாளே யாமாயின்
கூறாமற் சந்யாசங் கொள்'

என்று பெரியோருங் கூறியிருக்கிறார்கள். ஆனால், என்னுடைய கருத்துப்படி, சிறந்த மனைவி என்பவள் பதிவிரதையாயிருந்தால் மட்டும் போதாது. கொண்ட கணவனிடத்தில் உண்மைக் காதலுடையவளாயிருக்க வேண்டும். நம்மவர்கள் செய்யும் விவாகங்களில் இந்த ஒரு முக்கியமான விஷயத்தைப் பெரும்பாலும் கவனிப்பதில்லை. கணவனுக்கும் மனைவிக்கும் ஒருவரொருவர் மீது உண்மைக் காதல் என்பதிருக்குமானால் மற்றக்குணங்கள் யாவும் தாமே அமைந்துவிடும்."

அன்பானந்தர்—"நீர் சொல்வது சரிதான். ஆனால் நம்மவர்களிற் பெரும்பலார்க்குக் காதலுணர்ச்சியே கிடையாதே!"

மணிவாசகம்—"உண்மைதான். அதற்குக் காரணம் பெண்களுக்குக் கல்வியறிவில்லாமையே"

இங்ஙனம் பலவிஷயங்களைப் பற்றி அன்பானந்தரும் மணிவாசகனும் உரையாடிக்கொண்டிருந்தார்கள். மணி எட்டாயிற்று. கலாவதியின் தாய் அன்பானந்தரையும் மணிவாசகனையும் உணவருந்த அழைத்தாள். இருவரும் உட்சென்று கைகால் சுத்திசெய்துகொண்டு கூடத்தில் சாப்பிட உட்கார்ந்தார்கள். கலாவதியின் அன்னை பதார்த்தங்கள் கொண்டுவந்து பரிமாறினாள். அன்பானந்தர் அவளை நோக்கி, "ஏன், அம்மா, தள்ளாத காலத்தில் நீங்கள் கஷ்டப்படுகிறீர்கள். கலாவதி எங்கே?" என்று வினவி உரத்து "கலாவதி!" என்று கூப்பிட்டார்.

கலாவதி உள்ளிருந்தபடியே "ஏன்" என்று மெல்லக் கூறினாள்.

அவள் குரலை மணிவாசகன் கேட்டபோது, மெல்ல ஒலிக்கும் இனிய யாழொலி கேட்டவன்போல உடல் புளகித்தான்.

"உள்ளே என்ன செய்கிறாய்? தள்ளாத காலத்தில் தாயாருக்குக் கஷ்டங் கொடுக்கலாமா? அன்னம் எடுத்து வா! வா, அம்மா! நீ வந்து பரிமாறு'' என்றார் அன்பானந்தர்.

கலாவதி வேறு வழியில்லாமல் மிகவும் கஷ்டத்துடன் வட்டிலில் அன்னம் எடுத்துக்கொண்டு தலைகுனிந்த வண்ணமாய் வந்து அன்பானந்தருக்கும் மணிவாசகனுக்கும் வட்டித்தாள். அப்பொழுது அவள் சிறிதாவது தலைநிமிராமையால், அவள் முகத்தைப் பார்க்க ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்த மணிவாசகன் எண்ணம் ஈடேறவில்லை. அன்பானந்தர் அவனை நோக்கி, "இந்த அன்னந் தானே உயிர்க்கு ஆதாரம்?'' என்றார்.

"ஆம்; தடையென்ன? இந்த அன்னத்தின் முகத்தைப் பார்த்தால் போதும். எனக்கு அகம் மகிழ்ந்துவிடும்'' என்று சிலேடையாகக் கூறினான் மணிவாசகன்.

கலாவதி அவன் குறிப்பை அறிந்து கொண்டு நாணம் மிகுந்தவளாய் இன்னும் அதிகமாகத் தலையைக் குனிந்து கொண்டாள். அன்பானந்தரும் மணிவாசகன் கூறிய அன்னம், கலாவதி அன்னமே என்பதை உணர்ந்து அவன் சாமர்த்தியத்தை வியந்து தமக்குள் மனமகிழ்ந்து அவனை நோக்கி, "நீர் சொல்வது மற்றவர்களுக்குச் சரிதான். உமக்கு அன்னத்தை விட, கல்வியே அதிக மகிழ்ச்சி தருமென்று நினைக்கிறேன்'' என்றார்.

மணிவாசகம் :—"உண்மைதான். ஆயினும் மனதிற்கேற்ற அன்னங் கிடைத்தால், அதைவிட இன்பம் பயப்பது வேறொன்றில்லை. ஏனென்றால் அந்தக் கல்வியை அழகு படுத்துவதும், அதன் இன்பத்தைப் பூரணமாய் அனுபவிப்பதற்குச் சாதனமாக்குவதும், அத்தகைய அன்னமே. மேலும் அவ்வன்னம் கல்வி யறிவை அதிகப்படுத்தவும் வல்லது.''

அன்பானந்தர்:—“ உமக்குள்ள கல்வியறிவு பூரணமாயிருக்கிறதே. இனி உமக்கு அது அதிகமாவதற்கு இடமில்லை. ஆகையால், நீர் கல்வியிற் கம்பரென்றே நினைக்கிறேன். ”

மணிவாசகம்—“ அவ்வளவு பெருமை எனக்கேற்குமோ ? கம்பரெங்கே நான் எங்கே ! வேண்டுமானால் கம்பர் மகன் அம்பிகாபதி என்று என்னைச் சொல்லுங்கள். அது சிறிது பொருத்தமாய் இருக்கும் ”

அன்பானந்தர்:—“ அம்பிகாபதிமட்டும் சாமானியனா! என்ன ? பாவம், அரசனால் சிறுவயதிலேயே கொல்லப்படாமல் இருந்தால், அவன் தந்தைக்குமேற் சிறந்த வித்வானாய் விளங்கியிருப்பான் ”*

மணிவாசகம்:—“அரசனால் கொல்லப்பட்டானாயினும், அவன் உயிர்விட்டது எதற்காகத் தெரியுமா ? ”

அன்பானந்தர்:—“ அரசன் மகளுக்காக. ”

மணிவாசகம்:—“ அல்ல, அரசன் மகள்மீது கொண்ட காதலுக்காக ! ”

அன்பானந்தர்:—“ ஆனால் அந்தக் காதல் மாகாகொடியது! ”

மணிவாசகம்:—“ நிறைவேறாவிட்டால் காதலைவிடக் கொடியதில்லை. நிறைவேறிவிட்டால் அதைவிட இனியதில்லை. ”

அன்பானந்தர்:—“ அரசன் அருகிருப்பதைக் கூட யோசியாமல், அரசகுமாரி அன்னவட்டில் எடுத்துவருவதற்கு வருந்தித் தன் வருத்தத்தை வெளியிடத் துணிந்தானே; அவன் துணிவை என்னென்பது ! ”

இவ்வாறு அன்பானந்தர் கூறியபோது கலாவதி இரண்டாம் முறை அன்னம் வட்டிக்க வந்தாள்.

மணிவாசகம்:—“ காதலுக்கு அச்சம் ஏது ? கம்பர்மட்டும் அம்பிகாபதி சொன்ன பாட்டை முடிக்காமலிருந்தால் அவன் அதை எப்படி முடித்திருப்பான் தெரியுமோ?”

---

* அம்பிகாபதியும் அரசிளங்குமரியும் என்ற நாடகத்தில் இக்கதையை விளக்கமாகக் காணலாம்.

'இட்டடி நோவ எடுத்தடி கொப்பளிக்க
வட்டிற் சுமந்து மருங்கசைய'—வட்டிக்க
வந்தாய் அளம்படைத்தாய் மற்றும் பலபடைத்தாய்
அந்தஇரு மீனும் அளி.

என்று முடித்திருப்பான்,

அன்பானந்தர்:—"பேஷ்! அம்பிகாபதி அப்படி முடித்திருப்பானென்று சொல்லாதீர். அம்பிகாபதி நீராயிருந்தால், நீர் அப்படி முடித்திருப்பீர்!"

மணிவாசகம்:—"அப்படித்தான் வைத்துக்கொள்ளுங்கள்"

அன்பானந்தர்:—"ஆனல், உமக்கு மீனில் அவ்வளவு பிரியமா?"

மணிவாசகம்:—"மீனென்றால் உவர்க்கடல் மீனல்ல. அவள் கண்மீன்!"

அன்பானந்தர்:—"எவள் கண்மீன்?"

மணிவாசகம்:—"அரசகுமாரியின் கண்மீன்" என்று சொல்லி விட்டு, காலவதியின் முகத்தை நோக்கினன். அவள் அச்சமயம் அவனைக் கடைக்கண்ணால் நோக்கிக் கொண்டிருந்தாளாதலால், இருவர்கண்களும் எதிர்ப்பட்டன. ஆயினும் அவள் அவன் தன்னைநோக்குவதறிந்தும், அவனைப் பார்ப்பது விட்டுத் தரையைப் பார்க்கத்தொடங்கினாள்.

மணிவாசகனோ அவள் கண்களைக் கண்டவுடன் கருத்தழிந்தான். அச்சுந்தரவதனியின் கண்களிரண்டும்,

"வாளார் மதிமுகத்த வாளோ வடுப்பிளவோ
தாளார் கழுநீரோ நீலமோ தாமரையோ
நீள்வேலோ வம்போ கயலோ நெடுங்கண்ணோ
கோளார்ந்த கூற்றமோ கொல்வான் தொடங்கினவே"

என்று அவன் தனக்குள் எண்ணி ஏங்கினான். கலாவதியும் மனம் கலங்கினாள். 'நல்வழியை விட்டு ஒருசிறிதும் விலகியறியாத நம் மனம் இவரைக் கண்டதுமுதல் துறைதெரியாதலையும் கப்பலைப் போலத் தத்தளித்துத் தடுமாறுகிறதே, ஏன்?' என்று சிந்தித்துச் சிந்தித்து மனம் நைந்தாள்.

அன்பானந்தர் மணிவாசகனை நோக்கி "உம்மைப் போன்ற கல்வியாளரோடு பேசிக்கொண்டிருப்பதே பேரானந்தமாயிருக்கிறது. சாப்பிட்டு, முற்றத்தில் படுத்துக்கொள்வோம். நிலா நன்றாய்க் காய்கிறது. தூக்கம் வருகிறவரையில் ஏதாவது பேசிக்கொண்டிருக்கலாம்" என்றார்.

"இல்லை. நான் அதிகாலையில் புறப்பட்டுப் போகவேண்டுமாதலால் வெளித்திண்ணையில்தானே படுத்துக்கொள்ளப் போகிறேன்" என்றான் மணிவாசகன்.

"ஆனால், அப்படியே செய்யும். நாளை மாலை இங்கு வருகிறீரா? சற்றுநேரம் பேசியிருந்துவிட்டுப் போகலாம்" என்றார் அன்பானந்தர்.

"நல்லது. உங்கள் விருப்பம் அதுவானால் அப்படியே செய்கிறேன்" என்று மணிவாசகன் மறுமொழி அளித்தான்.

சாப்பாடு முடிந்தது. அன்பானந்தர் வேண்டுமென்றே முன்னதாக இலையைவிட்டெழுந்து சென்றார். கலாவதியின் அன்னை அவருக்குக் கைகழுவ செப்பில் ஜலமெடுக்கச் சென்றுவிட்டாள். சற்று நேரம்—சுமார் ஒருநிமிஷம்—கலாவதியும் மணிவாசகனும் தனித்திருந்தனர். மணிவாசகன் அன்பானந்தர்க்குப் பின் எழுந்து சென்றான். செல்லும்போது தூணடியில் நின்ற கலாவதியை நோக்கினான். அவளும் அச்சம் சிறிது நீங்கி அவனை எதிர் நோக்கினாள். இருவர் கண்களும் கலந்தன. அப்பால் வாய்ச் சொற்களேன்?

"நாட்ட மிரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்கும் குறிப்புரை யாகும்."

ஆதலால், அவர்கள் இருவர் கண்களுங் கலந்தபோது இருவர் அறிவும் கலந்தன; இருவர் அன்புங் கலந்தன; இருவர் உள்ளமுங் கலந்தன. சத்தும் சித்தும் கூடினுல் ஆனந்தம். அவ்வாறே கண்ணுங் கண்ணுங் கலந்தால்?—————

# காதல்!

## XV

### "கனவே நனவாகக் கடவுளருளாரோ!"

கடலாகிய அகழியையும், மலையாகிய மதிலையும் உடைய உலகம் என்னும் கோட்டையுள், உறங்கும் உயிர்களுக்கு எதம் ஒன்றும் வாராமற் பாதுகாக்குங் காவலாளர்களைப் போல, வானத்தினிடையே நட்சத்திரங்கள் பல பிரகாசித்தன. அவைகளுக்கிடையே, காவலர் தலைவனைப் போலத் தண்கதிர்ச் சந்திரன் வெண்கலை வீசி அமுத ஒளி பரப்பி, அன்புடையார் பார்வையைப் போலக் குளிர்ந்து விளங்கினுன். ஆனுல், கலாதிவயின்வீட்டுத் திண்ணையிற் படுத்திருந்த மணிவாசகனுக்கு, அச் சந்திரன் ஒரு சண்டாளனைப்போல் காணப்பட்டான். அதற்குக் காரணம் அவனுக் குண்டாயிருக்கும் காதல் மயக்கமே. ஆ! காதலின் வன்மையே வன்மை! கள், உண்டால் மயக்கும்; காதலோ, நினைத்தால், அவ்வளவில் நினைத்தவரை மயக்கி நிறையழியச் செய்கிறது!

மணி பன்னிரண்டாய்விட்டது. மணிவாசகனுக்கு இன்னும் உறக்கம் வரவில்லை. கலாவதி அவன் நெஞ்சைவிட்டு அகன்ருளில்லை. அவள் உருவம் அவன் கண்ணெதிர் நிற்பதுபோல் அவனுக்குத் தோற்றியது. அவள் ஏதோ பேசுவதுபோலவும், அப் பேச்சைக் கேட்டுத் தன் செவி இன்புறவது போலவும் அவன் கருதி அடிக்கடி முகமலர்ந்தான். அவள் நலங்களை எண்ணி எண்ணித் தனக்குள்ளாகப் பித்தன் போல ஏதேதோ பிதற்றலானுன். "நாம் பார்த்தவற்றுள் அவள் முகத்துக்கு ஒப்பாகக்கூடியன ஒன்று மில்லையே. பறித்தால் வாடும் தாம

ரையையும், தேய்ந்து வளரும் சந்திரனையும் மாதர் முகத்துக்கு உவமையாகச் சொல்லிய பாவலர்கள், இவளைப் பார்த்திருந்தால் அவ்வாறு சொல்லியிரார்கள்.

“ முத்தாகித் தோகை முருந்தாகி முல்லைமுகைக்
கொத்தாகித் தந்தக் குருத்தரும்பி—விஸ்தாரம்
வாய்த்தபத்ம ராக மணியைத் தாம்பிரித்துத்
தேய்த்தொப்ப மிட்டுவைத்த சேர்வையெனக்—கோத்துப்
பொருநிருப வேள்சிலையிற் பூங்காவியென்ன
இருநிறையும் பூங்காவி யேறி—உருகிமனம்
பூண நகைக்கும் புகழ்க்கொல்லி யம்பாவை
நாண நகைக்கு நகையிஞள் ”

ஆகிய அவள் பார்வையின் விசித்திரத்தை என்னென்பது! ஒரு முறை என் உயிரைப் போக்குவதுபோ லிருக்கிறது; மறுமுறை அதுவே போகும் என்னுயிரை மீட்கிறது போலவும் இருக்கிறது. தீரா நோயைத் தருகிறது; தீரா நோய்க்கு மருந்தும் தானேயாகிறது. ஆ! அவளைக் கண்டது முதல் என் மனம் மாறிவிட்டதே! இது தானோ காதல் என்பது? ஆயின், மனிதர் மனத்துத் தோன்றும் உணர்ச்சிகளுளெல்லாம் இக்காதலைவிட விசித்திரமானது வேறொன்றில்லை. நோய்செய்யும் போதே அந்நோயில் ஓர் இன்பத்தையும் தருகின்றதே, என்ன அற்புதம்! கல்வியின்பத்தைவிடச் சிறந்த இன்பம் பிறிதொன்றில்லை என்று கருதியிருந்தேன்; அது தவறு. இவளைப் போல அறிவிலும், உருவிலும், குணத்திலும் சிறந்த ஒருத்தியின் உண்மைக்காதல் ஒருவனுக்குக் கிடைக்குமானால் அதைவிட அவன் இவ்வுலகில் அடையக்கூடிய சிறந்த இன்பம் வேறில்லை. அச் சிறந்த இன்பம் எனக்குக் கிட்டுமோ? அம்மாதரசி என்னை மனப்பூர்வமாய்க் காதலிப்பாளா? காதலிப்பாளாயின், என்னைவிடப் பாக்கியசாலி யார்? உணவு பரிமாறும்பொழுது அவள் என்னைக் கடைக்கண்ணால் நோக்கியதை நினைத்தால் என் மனம் மகிழ்கிறது. அவள் கையால் உணவு பரிமாறப் பெறுதலாகிய பெரும் பாக்கியத்தை எனக்களித்த தெய்வம், அவளை எனக்கு வாழ்க்கைத் துணைவியாகக் கூட்டுவிக்குமா? கூட்டுவிக்குமானால் நான் கிருதார்த்தனாவேன். என் வாழ்க்

கை இன்பவாழ்க்கையாகும். அவளையே தெப்பமாகக் கொண்டு 'சம்சாரம்' என்னும் சாகரத்தை எளிதிற் கடந்து, அன்பென்னும் அக்கரை சேர்ந்து பேரின்பப் பெருவாழ் வெய்துவேன். என் வாழ்நாளை அவளுக்கே அர்ப்பணம் செய்வேன். நோய் என்னை நலியாது; வறுமை என்னை வருத்தாது. எல்லாத் துன்பங்களினின்றும் எல்லாத் துயரங்களின்றும் என்னைப் பாதுகாக்கும் குலதெய்வம் அவளே ஆவாள். அவளுக்காக நான் பொருள் தேடுவேன். அவள் களிக்கும்படி நான் புகழ்பெறுவேன்." என்று இவ்வாறெல்லாம் பல பல நினைந்து தனக்குள் பிதற்றிக்கொண்டிருந்த மணிவாசகன் மனோவேதனையைத் தணிக்கக் கருதி துயிலரசி அவனை மெல்லத் தழுவினாள். அவன் சிறிது கண்ணயர்ந்தான். சுமார் அரைமணிநேரந்தான் தூங்கியிருப்பான். அச் சிறுபொழுதும் அவன் மனம் அமைந்திருக்கவொட்டாமல், கலாவதியைப் பற்றிய எண்ணங்கள் கனவாக வந்து அவனைத் துன்புறுத்தின. கலாவதி தன்னண்டை வருவது போலவும், அவளைக் கட்டித் தழுவத் தான் தன் இரு கரங்களையும் விரித்துச் செல்வது போலவும், அவள் தன்கைப்பிடிக் ககப்படாமல் புன்னகை செய்து கொண்டு எட்டிஎட்டிப் பின் செல்வது போலவும் ஒரு கனவு கண்டு அதற்கியையத் தன் வாய்விட்டுப் பல காதல் மொழிகளால் அவளை மன்றுடுவான் போல " கட்டழகி! கலாவதி! என் கருத்தைக் கவர்ந்து காதற் பித்தேற்றிவிட்டகள்ளி! என் கண்ணே! கண்ணிற் கருமணியே! மணியாடுபாவாய்!

" கரும்பே! தேனே! அமிர்தே! காமர் மணியாழே!
அரும்பார் மலர்மே லணங்கே! மழலையன்னமே!
சுரும்பார் சோலை மயிலே! குயிலே! சுடர்வீசும்
பெரும்பூண் மன்னர் பாவாய்! பூவாய்! பிணைமானே!"

என்னைக் காவாயோ! காதற் கயிற்றால் என்னைக் கட்டாயோ! கட்டிக் கரும்பும் கனிரசமும் பாலுந் தெளிதேனும் பக்குவமாய்க் கலந்தாற்போல் இனிக்கும் மதுரமொழிகளை உன் பவளவாய் திறந்து என் செவிகுளிரப் பொழியாயோ! காதல் வரங்கொடுத்து என்னைக் காத்தாலொழிய உன் காலைவிடேன்!" என்றுகூறி அவள் காலைப் பிடிப்பான் போல மணிவாசகன் கையை நீட்டினான். கனவுருவின்

காலைச் சையாற் பிடிப்பதெப்படி ? அவன் கைக்கு அவள் கால் அகப் படவில்லை. உடனே அவன் உறக்கம் நீங்கிக் கண்விழித்தான். காதலி யைக் காணவில்லை. கண்டது கனவாயிருக்குமோ என்று கருதிக் கண் ணைக் கசக்கிக் கசக்கிப் பார்த்தான். ஆம், கண்டது கனவே என்றுணர் ந்தான். தான் ஏதேதோ வாய்விட்டுப் பிதற்றியதும் அவன் ஞாபகத் திற்கு வந்தது. "ஆ, என்ன அறிவீனம் ! கனவு கண்டு நாம் புலம்பி யது யாருக்காவது கேட்டிருக்குமோ ? அப்படிக் கேட்டிருந்தால் அவர் கள் என்ன நினைப்பார்கள் ? அறிவிழந்த பித்தன் அல்லது நெறியற்ற காமுகன் என்றல்லவோ நம்மை மதிப்பார்கள். சீ, இனி இங்குப் படு த்திருப்பதும் சரியல்ல. உணவுக்கு வழியற்ற வறியனான எனக்கு எவ்வ கையிலும் குறைவற்ற கலாவதி எங்ஙனம் கிட்டுவாள் ? எட்டாத கொம் புத்தேனுக்குக் கொட்டாவி விட்டாவதென்ன ? கலாவதியை நினைத் துக் கருத்தழிவதாற் பயனில்லை. அவளை மறக்க முயன்று மறந்துவிடு வதே அறிவுடைமை. இனி இவ்வீட்டில் அடிவைப்பதும் ஆகாது" என்று மணிவாசகன் தனக்குள் நினைத்துக்கொண்டு எழுந்து தெருவி ற்கு வந்தான்.

ஆகாயத்திற் சந்திரன் பிரகாசித்துக் கொண்டிருந்தான். பகல் போல நிலவு பாய்ந்திருந்தது. எங்கும் அமைதி நிறைந்து விளங்கிற்று. மணிவாசகன் தன்னந்தனியனாகத் தெரு நடுவே நின்று கொண்டிருந் தான். எங்குச் செல்வதென்று தோன்றாமல் சிறிது நேரம் திகைத்திரு ந்த அவன், பிறகு ஒருவாறு மனோஉறுதிசெய்துகொண்டு சிவன் கோ விலைநாடி நடந்தான். கோவிலில் படுத்திருந்து விடியற்காலையிலெழு ந்து தன் இருப்பிடம் செல்லலாமென்பது அவனுடைய எண்ணம். ஆனால் கோவிற்கதவு சாத்தித் திருக்காப்பிடப்பட்டிருந்த படியால் அவ்வாறு செய்யக் கூடவில்லை. அதைக் கண்ட நம் மணிவாசகன் 'இதுவும் நம்முடைய அதிர்ஷ்டந்தான். இனி என் செய்வது ? நிலவு பகல்போலவீசுவதால், நாம் தங்கியிருக்கும் சத்திரத்துக்குச் சென்று விடுவதே நல்லது' எனத் தீர்மானித்துக் கோபுரவாயிலில் நின்றபடியே சிவபெருமானை நினைந்து கரங்கூப்பி நமஸ்கரித்து "எல்லாம் வல்ல இறையோனே ! எல்லா உயிர்களிடத்தும் அந்தரியாமியாய் நிற்கும் நீ, என் மனத் துயரை நன்கறிவாய். உன் திருப்புகழைப் பாடிய பக்தர்க ளெல்லோரும், உன்னைத் தம்நாயகனாகப் பாவித்தன்றோ பாடியிருக்கி

ன்றனர்! ஆதலால், நாயக நாயகி சம்பந்தமாக மக்கள் உள்ளத்தே தோன்றும் ‘காதல்’ என்னும் உணர்ச்சி, உனது திருவருளாற் கிடைத்த உணர்ச்சியே ஆகவேண்டும். அவ்வாருக என் மனத்துத் தோன்றிய உண்மைக்காதல் எனக்குக் கைகூடுமாறருளுதல் உன் கடமையே யன்ரே?

காமனைநீ எரித்தாலும் காதலியல் புணர்ந்தன்ரே
வாமத்தே மலைமகளை வைத்திட்டாய்; சுந்தரராம்
நாமத்தார் தந்தூதா நடந்திட்டாய்; காதலெனும்
ஓமத்தீ வளர்ப்பேற்கும் உன்னருளை நல்காயோ!

இதோ நான், என் காதலுக்கு இடமான கலாவதியின் இல்லத்தை விட்டு—அவள் இருக்கும் இவ்வூரையும் விட்டுச்—செல்கிறேன். இனி அவளை எனக்குக் கூட்டுவித்து எம் இருவருள்ளமும் காதலால் ஒன்றுபடச்செய்வது உன் கடமை. உன் திருவருளையே நம்பிச் செல்கிறேன். நம்பினுர்க் கருள்புரியும் நஞ்சணிகண்டனே! அலந்தாரை ஆதரிக்கும் அண்ணலே! பக்தர்க்கருளும் பரமனே! உன் திருவடியே துணை” என்று துதித்துவிட்டுத் தான் தங்கியுள்ள சத்திரத்தை நாடிச் சென்ருன்.

* * * *

இங்ஙனம் மணிவாசகன் சிந்தை கலங்கிச் சென்றபோது, அவன் கலக்கத்துக்குக் காரணமாயிருந்த கலாவதியின் நிலை யாதென்று கவனிப்போம். மணிவாசகனுக்கும் அன்பானந்தருக்கும் உணவு பரிமாறிவிட்டுக் கலாவதி தானும் தன் அன்னையுமாக இருந்து உணவருந்தத் தொடங்கியபோது, அவளுக்கு மணிவாசகன்மீதே மனஞ் சென்றிருந்தமையால், வழக்கம் போல் உணவுகொள்ள முடியவில்லை. ஒரு பிடி அன்னத்தைக் கையில் எடுப்பாள்; ஒன்றுந் தோன்ருது ஐந்து நிமிஷநேரம் பிரதிமை போலிருப்பாள்; பிறகு கையில் உள்ள அன்னத்தின் ஞாபகம் வரவே அதை உண்பாள். இவ்வாறு அன்னத்தை எடுப்பதும், அவனை நினைப்பதும், பிறகு உண்பதுமாய், அரைமணி நேரத்திற்கு ஐந்து பிடி அன்னமும் உண்ணுமல் அவள் சிந்தை வேறுபட்டிருந்தாள். இதைக் கவனித்த அவள் அன்னை “என், அம்மா, உடம்புக் கென்ன? சரியாய்ச் சாப்பிடாமலிருக்கிருயே” என்று வினவினுள்.

"உடம்புக்கு ஒன்றுமில்லை. என்ன காரணத்தினலோ உணவு செல்லவில்லை. எனக்கு உணவு வேண்டாம். பசி மந்தப்பட்டிருக்கிறது. படுத்துத் தூங்கினல் எல்லாம் சரியாய்விடும். நான் படுத்துக் கொள்ளப் போகிறேன்" என்று சொல்லி, கலாவதி எழுந்து கை கழுவிக்கொண்டு படுக்கைக்குப் போய் விட்டாள்—தூங்குவதற்கல்ல.

•

படுத்து நெடுநேரம் வரைக்கும் கலாவதிக்கு உறக்கம் வரவில்லை. தூங்குவதற்குத் தனக்குத் தெரிந்த உபாயங்களையெல்லாம் அவள் செய்து பார்த்தாள். ஒன்றும் பயன்படவில்லை. படுக்கையிற் புரண்டாள்; இடதுபுறம் படுத்துப் பார்த்தாள்; வலது புறம் படுத்துப் பார்த்தாள்; திசைமாறிப் படுத்துப் பார்த்தாள். உடம்பு களைத்ததேயொழிய உறக்கம் வரவில்லை. படுத்து மூன்றுமணி நேரமாய் விட்டது. அம்மூன்றுமணி நேரமும் அவளுக்கு மூன்று மாத காலமாகத் தோற்றியது. 'பாழும் தூக்கம் எப்பொழுது வருமோ' என்று ஏங்கி அவள் கலங்கிய மனத்துடன் கண்களை இறுக மூடினள். சிறிது நேரத்திற்கெல்லாம் அவளுக்கு ஒரு வகை மனமயக்கம் உண்டாயிற்று. அம்மயக்கத்தில் பின்வருமாறு பல உணர்ச்சிகள் அவளுக்குத் தோன்றின:

அவள் வீடு அந்தரத்திற் சுழன்றது; சிறிது சிறிதாக மேலேறிற்று. ஆனல் அவள் இருந்த விடத்தைவிட்டு அசையாமலிருந்தாள். சுழன்று சுழன்று மேற் சென்றுகொண்டிருந்தவீடு சற்று நேரத்திற் கண்ணுக்கே மறைந்து போய்விட்டது. கலாவதி தன்னந்தனியளாகி நின்ருள். அவள் கண்ணுக் கெட்டிய வரையில் எங்கு நோக்கினும் ஒரே வெட்ட வெளியாகக் காணப்பட்டது. ஆனல் வெளிச்சம் நிறைந்திருந்தது. அவ்வொளியின் தன்மை கலாவதிக்கு நன்ருய் விளங்கவில்லை. சூரியவெளிச்சமென்ருல், வெப்பமும் கூடியதாயிருக்கும். சந்திரவெளிச்ச மானல் அவ்வளவு பிரகாசமாயிராது. மேலும் அப்பொழுது இராப் பொழுதா பகற்பொழுதா என்று நிச்சயித்தற்கும் அவளாற் கூடவில்லை. தன்னைச் சூழ்ந்துள்ள பிரகாசம் எங்கிருந்து வருகிறதென்று அறிய வேண்டி அவள் ஆகாயத்தை அண்ணர்ந்து நோக்கினள். தன் சிரத்துக்குமேல் கோடிசூரியப்

பிரகாசமாக ஏதோ ஓர் உருவம் தோன்றியது. அதைக் காணவும் கலாவதியின் கண்கள் கூசின. அவள் இருகண்களையும் இறுகமூடிக் கொண்டாள். அப்பொழுது யாரோ தன் கழுத்தைப்பிடித்து நெரிப்பதுபோல அவளுக்கு ஓர் உணர்ச்சி உண்டாயிற்று. அவள் திடுக்கிட்டுக் கண்விழித்தாள். தன்னருகே ஒருவருமில்லை. ஆனால் சிறிது தூரத்தே அழகெல்லாம் திரண்டு ஓர் உருவெடுத்தாற் போல் ஒரு பெண் தோன்றினாள். அவள் ஆணுடை தரித்திருந்தாள். கலாவதி ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தாள். முன் காணப்பட்ட ஜோதியுருவம் காணப்படவில்லை. தன் எதிரே நிற்கும் பெண்ணுருவத்தைக் கவனித்தாள். அதன் முகம் ஜோதிமயமாயிருந்தது. அதன் கால்கள் நிலத்தில் தோயவில்லை. 'ஆகாயத்திற் கண்ட உருவம் இதுவே போலும்' என்று கலாவதி கருதினாள். தன்னையும் அறியாமல் அவளுக்கு அவ்வுருவத்திடத்தில் ஒருவகை பக்தியும் ஆனந்தமும் உண்டாயின. அவள் அதை நெருங்கிச் சென்று நமஸ்கரித்தாள். அது புன்னகை புரிந்து தன்னைத் தொடர்ந்து வரும்படி அவளுக்குச் சைகை செய்துவிட்டுத் தான் முன் சென்றது. கலாவதி அதைப் பின் தொடர்ந்து சென்றாள்.

சிறிது தூரம் செல்லவும் மரங்களடர்ந்த காடொன்று தோன்றியது. அக்காட்டினூடே சென்ற ஓர் ஒற்றையடிப் பாதை வழியாக அவ்வுருவம் சென்றது. கலாவதி அவ்வொற்றையடிப் பாதையைக் கண்டவுடன் சிறிது திகைத்து நின்றாள். ஏனெனில், அது கல்லும் முள்ளும் நிறைந்ததாக விருந்தது. அதில் எவ்வாறு அடிவைத்துச் செல்வதென்று அவள் அஞ்சினாள். அங்ஙனம் அவள் அஞ்சித் திகைத்து நின்றபோது, அவளுக்கு வழிகாட்டிச் செல்லும் உருவம் நின்று அவளைத் திரும்பிப் பார்த்துப் புன்னகை செய்து, அஞ்சாது வரும்படி சைகை செய்து விட்டுச் செல்லத் தொடங்கியது. அவ்வுருவத்தை விட்டுப்பிரிய, அல்லது அதன் விருப்பத்துக்கு மாறாக நடக்க, மனமில்லாத கலாவதி, துணிந்து அவ்வொற்றையடிப்பாதை வழியாகவே சென்றாள். கல்லிலும் முள்ளிலும் அவள் நடக்கும்படி நேரிட்ட போதிலும் அக்கல்லும் முள்ளும் அவளை வருத்தவில்லை. அதுகண்டு பேராச்சரியமுற்றவளாய் அவள்

சிறிதுதூரம் செல்லவும் இருள் சூழ்ந்துகொண்டது. தனக்கு முன்னே செல்லும் உருவத்தின் ஒளியால் தான் நடுக்காட்டிற் செல்வதாகக் கலாவதி அறிந்தாள். அவ்வுருவத்தைத் தொடர்ந்து அவள் நெடுந்தூரம் சலியாது நடந்தாள். நெடுநேரத்திற்கப்பால் அவ்வுருவமும் அவளும் காட்டைக் கடந்தார்கள். சூழ்ந்திருந்த இருள் நீங்கி வெளிச்சமுண்டாயிற்று. அப்பால் சிறிது தூரம் செல்லவும், ஓங்கி உயர்ந்த மலையொன்று தோன்றிற்று. ஆணுடைதரித்த பெண்ணுருவம் அம்மலையை நாடிச்சென்று அதன் மீதேறிற்று. கலாவதியும் அதைத் தொடர்ந்து மலைமீதேறினாள். மலையின் உச்சியை அடையவும் உருவமும் நின்றது; கலாவதியும் நின்றாள். அவர்களுக் கருகே தெளிந்த நீரையுடைய சுனையொன்று காணப்பட்டது. கலாவதி அச்சுனையோரத்திற்குச் சென்று அதைக் குனிந்து பார்த்தாள். உருகிய பளிங்கு போலத் தெளிந்து விளங்கிய அச்சுனைநீர் பார்ப்பதற்கே இன்பமாயிருப்பது கண்டு அதன் அழகை வியந்து 'இதைப் பருகினால் எவ்வளவு இன்பமாயிருக்குமோ' என்று தனக்குள் கருதிக்கொண்டு கலாவதி தனக்கு வழிகாட்டி அங்கு அழைத்துவந்த உருவத்தை நோக்கினாள். அவ்வுருவம் காணப்படவில்லை. உடனே அவள் திடுக்கிட்டுத் தன் கண்ணுக் கெட்டிய மட்டும் சுற்றி நோக்கினாள். உருவம் இல்லை! எவ்வாறோ மறைந்துபோயிற்று! 'ஆ, இவ்வழகிய சுனைக்கு வழிகாட்டி நம்மை அழைத்துவந்த தெய்வத்திருவுருவம், நம்மைக் கைவிட்டு மறைந்து போயிற்றே! இனி நமக்கு யார் துணை' என்று கலாவதி ஏங்கினாள். பொறுக்க முடியாத பெருந்துயரம் அவளுக்கு உண்டாயிற்று. அவள் உடல் வியர்த்தது; உள்ளம் கலங்கிற்று; அறிவு தடுமாறியது. அவள்மயக்கமுற்றுச் சோர்ந்து அச்சுனையில் விழுந்து விட்டாள்!

"சிறிது சிறிதாக மூர்ச்சை தெளிந்து அவள் எழுந்தபோது, தண்ணீரில் விழுந்த ஞாபகம் வரவே தன் உடம்பைத் தொட்டுப்பார்த்தாள்; உடையைத் தொட்டுபார்தாள். உடம்பும் நனையவில்லை; உடையும் நனையவில்லை. 'இதென்ன ஆச்சரியமாயிருக்கிறதே' என்றெண்ணி, கலாவதி எழுந்து தான் இருப்பது எங்கே என்று பார்த்தாள். தான் நின்ற மலையுமில்லை. மலையிலிருந்த சுனையுமில்லை.

சுனைக்கருகே தன்னை அழைத்து வந்து விட்டுப்போன தெய்வ உருவமும் காணப்படவில்லை. தான் இருக்குமிடம் ஓர்அழகியபூஞ் சோலையாகக் காணப்பட்டது. 'இவ்வளவு அழகிய இப்பூஞ் சோலை எங்கிருப்பது? யாருடையது? நாம் இங்கு எப்படி வந்தோம்?' என்று பெரிதும் வியப்புற்றவளாய்க் கலாவதி அப்பூஞ்சோலை யைச் சுற்றிப் பார்த்து வந்தாள். அச்சோலையில், கோங்கு, அசோகு, மாதவி, வாழை, மா, பலா, கொய்யா முதலிய மரங்களும், மல்லிகை, முல்லை, இருவாட்சி, சண்பகம், ரோஜா முதலிய மலர்ச் செடிகொடிகளும், சுயேச்சையாய்ப் பாடி ஆடித் திரியும் குயில், மயில் முதலிய பறவைகளும், புள்ளித்தோலும் கள்ளப் பார்வையுமுடைய னவாய்த் துள்ளித்துள்ளியோடும் மான்வகைகளும் காணப்பட்டன வேயன்றி மனிதசஞ்சாரம் சிறிதாவது காணப்படவில்லை. 'இதெ ன்ன, தெய்வப் பூஞ்சோலையென்று சொல்லத்தக்க இவ்விடத்தில் ஒருவரையும் காணேமே' என்று தனக்குள் சொல்லிக் கொண்டு கலா வதி சோலையைச் சுற்றிவந்தபோது, அதன் நடுவே பளிங்கு மண் டப மொன்று பிரகாசிப்பது அவள் கண்ணுக்குத் தென்பட்டது. உடனே அவள் மண்டபத்துக்குச் சென்றாள். அதன் நடுவே ஒரு பட்டுத் திரை தொங்கியது. 'இத்திரையை நீக்கிவிட்டு நாம் உட்செல் வது தகுமா' என்று கலாவதி சிந்தித்து நின்றுகொண்டிருந்தாள். அப்பொழுது அத்திரை தானாக சுருங்கி ஒருபுறத்தில் ஒதுங்கி விட்டது.

ஆ, அச்சமயம் கலாவதி கண்ட காட்சியை என்னென்பது! அவளை மலைச்சுனைக்கு அழைத்துச் சென்ற அற்புத உருவம், அங்கே மரகதமணிப்பீட மொன்றில் அமர்ந்திருந்தது. அதனெதிரே யாரோ ஒரு யௌவன புருஷன் அதை நமஸ்கரித்துக்கொண்டிருந்தான். மணிப்பீடத்தில் அமர்ந்திருந்த உருவம் கலாவதியைக் கையாற் சுட் டித் தன்னைத் தொழுதுகொண்டிருந்த ஆண்மகனுக்குக் காட்டிற்று. அவ்வாண்மகன் திரும்பிப் பார்த்தான். திடுக்குற்றான். கலாவதி யும் அவனைக் கண்டதும் திடுக்குற்றாள். ஏனெனில் அவனே தன் மனத்தைக் கவர்ந்த மணிவாசகன்.

கலாவதியைக் காணவும் திடுக்குற்ற மணிவாசகன், தன்னைக் கண்டதால் அவளுக்குண்டான திகைப்பு நீங்குவதற்கு முன்னே,

ஓடிவந்து அவனைக் கட்டித் தழுவிக்கொண்டான். அப்போது, பீடத்திலமர்ந்திருந்த உருவம் கீழிறங்கிவந்து அவர்கள் இருவரையும் தன் இருகரங்களாலும் சேர்த்தணைத்தெடுத்துத் தான் அமர்ந்திருந்த மணிப்பீடத்திலிருத்திவிட்டு மறைந்தது. ஆனந்தமேலீட்டால் மெய்மறந்திருந்த மணிவாசகனும் கலாவதியும் சிறிது நேரத்தில் மனத்தெளிவுற்றுத் தாம் மணிப்பீடத்தில் அமர்ந்திருப்பதைக் கண்டும் அதிலிருந்த அற்புத தெய்வத்திருவுருவத்தைக் காணாமலும் திகைத்தனர். அப்பொழுது பலவகையான இனிய வாத்தியங்கள் கடலொலிபோல் முழங்கிய சத்தம் அவர்களுக்குக் கேட்டது. அவ்வாத்திய ஒலிகளுக்கு மேலாகத் திசையனைத்தும் கேட்கும் கம்பீரமான குரலில் 'காதற் கடவுள் வாழி! காதற் கடவுள் வாழி!' என்று பலர் கூறிய வாழ்த்துரையும் அவர்களுக்குக் கேட்டது."

இவ்வாறு கனவுகண்ட கலாவதி கனவிற் கேட்ட இன்னிசையால் விழித்துக் கொண்டவள் போலக் கண்விழித்தாள்! தான் கண்டதும் கேட்டதும் கனவே யென்றுணர்ந்தாள். உடனே மிகவும் மனம் வருந்தி "நான் கண்ட கனவே நனவாகக் கடவுளருளாரோ!" என்று தெய்வத்தை வேண்டினாள்.

## XVI

### விசித்திரக் கடிதம்.

மணிவாசகனையும் கலாவதியையும் துன்புறுத்திய அந்தக் கொடிய இரவு கழிந்தது. மறுநாள் பொழுதுவிடிந்ததும் கலாவதி படுக்கையினின்றும் எழுந்து—'உறக்கத்தினின்றும் எழுந்து' என்று சொல்வதற்கில்லை— வழக்கம்போல் வீட்டு வேலைகளைக் கவனிக்கலானாள். 'செய்யலானாள்' என்று சொல்வது மிகவும் பொருத்த முடையதாகும். ஏனெனில் வழக்கத்தை அனுசரித்து அவள் தன் வேலைகளைச் செய்தாளேயொழியத் தான் செய்தவேலைகளில் தன் கவனத்தைச் செலுத்தினாளில்லை. அவள் கவனமெல்லாம் 'காதல்' என்னும் காந்தத்தாற் கவரப்பட்டிருந்தது. அவள் செயலும் சொல்லும், முகமும் மனமும் எப்பொழுதும் போல் இல்லாமல் ஒருவகை மாறுதலடைந்திருந்தன,

கலாவதியிடத்துத் தோன்றிய மாறுதலை அவள் அன்னை அவ்வளவாகக் கவனிக்க வில்லை. ஆனால், அன்பானந்தர் அவள் நிலைமையைக் கூர்ந்து கவனித்து, அதற்குக் காரணத்தைஅறிந்துகொண்டு, தமது சிறுமுயற்சி பயன்பட்டதென்றெண்ணி உள்ளுக்குள் மகிழ்ந்து நாரதமகா முனிவரைப்போல்மௌனமாயிருந்தார். பகற்பொழுது மெல்லக் கழிந்தது. மாலை வந்தது. கலாவதியின் மனக்கலக்கம் மிகுந்தது. "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்" என்றபடி காலையில் கலாவதி மனதிற்றோன்றிய காதன் மூளை மாலையில் மரமாய் வளர்ந்துவிட்டது. அன்று மாலையில் அன்பானந்தர் வேண்டுகோளுக்கு இணங்கியபடி மணிவாசகன் வருவானென்று ஒவ்வொரு நிமஷமும் அவள் எதிர்ப்பார்த்தாள். எங்காவது காலடிச்சத்தம் கேட்டால் அவன் தான் வருகிறானோவென்று ஆவலோடுதிரும்பிப் பார்ப்பாள்; அவனயிராதிருக்கவே மிகவும் வருத்தத்துடன் தான் ஏமாந்ததைத் தானே நினைத்து நாணித் தலைகுனிந்துகொள்வாள். இந்நிலையில் அவள் இருப்பதைக் கவனித்த அன்பானந்தர், ஒன்றும் அறியாதவர்போல் சாய்மான நாற்காலியில் படுத்திருந்தவர், விளையாட்டாக 'மாசிலா மணிவாசகா!' என்று சொல்லிக்கொண்டு நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்தார். ஏதோ கைவேலையாயிருந்த கலாவதி அவர் 'மணிவாசகா' என்று கூப்பிட்டது தன் மணிவாசகனைத் தான் போலிருக்கிறது என்று கருதிக் கைவேலையை விட்டுவிட்டு எழுந்து அன்பானந்தர் பக்கமாய்த் திரும்பிப் பார்த்தாள். அவர் ஏதோ யோசனையிலிருப்பவர்போல் தலைகுனிந்தவண்ணம் இருப்பதைக்கண்டு வெட்கி முன்போலத் தன் அலுவலைச் செய்யத்தொடங்கினாள். அவள் எதிப்பார்த்துக்கொண்டிருந்த நிமிஷங்களோ ஒவ்வொன்றாய்க் கழிந்துகொண்டிருந்தன. ஒருமணி செல்வது அவளுக்கு ஒரு யுகமாய்த்தோற்றியது. ஒன்றா, இரண்டா? அறுபது நிமஷங்கள்—மாத்திரையாகக் கணக்கிட்டால், மூவாயிரத்து அறு நூறு மாத்திரைகள்—செல்வதென்றால் இலகுவா! ஆனால், எவ்விதமாகவோ—ஒருமணிநேரமல்ல—இரண்டு மூன்று மணிநேரங்கள் சென்றுவிட்டன! மணிவாசகன் வரவில்லை! கலாவதிக்கோ மனம் தத்தளித்தது. அவள் உயிர் கொஞ்சம் கொஞ்சமாய்ச் செல்வது போலிருந்தது. உயிர்ச் செலவு அதிகமாக அவன் வரவில்லையே என்ற ஏக்கம் அவளுக்கு அதிகமாயிற்று.

சாப்பிடும் வேளையாயிற்று. அன்பானந்தர் கலாவதியை நோக்கி "இன்றைக்கு வருகிறேனென்று போனவர் என்ன இன்னும் வரவில்லை! ஏதோ அசந்தர்ப்பம் போலிருக்கிறது. காலையில் வருவார் என்று நினைக்கிறேன்' என்றார். காலாவதி தலைகுனிந்து கொண்டு அவர்கூறியதைக் கவனியாதவள்போல "நேரமாயிற்று, சாப்பிட வாருங்கள்" என்று சொல்லிவிட்டு உள்ளே போய்விட்டாள்.

சாப்பாடு முடிந்தது. சிறிதுபொழுது கழித்து எல்லோரும் உறங்கப்போய்விட்டார்கள். கலாவதியும் படுக்கைக்குப் போய்விட்டாள். அவளுக்கு அன்றிரவு சிவராத்திரி விருதத்திற் கழிந்தது.

மறுநாள் பொழுது விடிந்தது. கலாவதி உருமாறிப் படுக்கையினின்றும் எழுந்துவந்தாள். அவள் உடம்பு அரைஉடம்பாய்விட்டது; முகம் வெளுத்துப்போயிருந்தது; கண் சோர்வுற்றிருந்தது. தன் தாயுடன்பேசநேரிட்டபொழுது அவள்குரலும் மாறியிருப்பது தெரிந்தது. அன்றையதினம் அவள் தன் அன்னையின் கவனத்துக்கும் ஆளாயினாள்! "என்ன அம்மா! உடம்பு இப்படியிருக்கிறதே! பாவி, நான் இதுவரையில் கவனியாமலிருந்து விட்டேனே! தலைவலி, சுரம் ஏதாவது வந்துவிட்டதா?" என்று அன்னை மகளை ஆச்சரியத்துடனும், கவலையுடனும் கேட்டாள்.

"என்னமோ, தெரியவில்லை" என்றாள் கலாவதி.

உடனே அன்னை, அன்பானந்தரிடம் சென்று, தன்மகள் நிலைமையை ஸ்திரீகள் இயல்புக்கேற்க, ஒன்றைப் பத்தாகக் கூறி "அவளைப் படுத்துக் கொள்ளச் சொல்லுங்கள். நான் இதோபோய் வைத்தியரை அழைத்து வருகிறேன்" என்றாள்.

அன்பானந்தர் அவளைத் தடுத்து, "வேண்டாம். கலாவதிக்கு வியாதி யொன்றுமில்லை. வைத்தியரிடம் காட்டினால் அவர் வியாதியை உண்டுபண்ணிவிடுவார். அவளை ஒன்றும் வேலை செய்யவிடாமல் பேசாமல் படுத்திருக்கச் செய்யுங்கள்; அநேகமாய் பகற்பொழுது போவதற்குள் உடம்பு குணப்பட்டுவிடும்" என்றார்.

கலாவதியின் அன்னை அன்பானந்தர் விருப்பத்திற்கு விரோத மாக நடப்பதற்கஞ்சி, உள்ளேபோய்த் தன் மகளைப் படுத்துக் கொள் ளச் சொல்லிவிட்டுத் தான் அவள் வேலைகளைச் செய்யத்தொடங்கி ளுள்.

காலை மணி எட்டாயிற்று. தபாற்காரன் ஒருவன், கலாவதியின் வீட்டுக்குவந்து அவள் விலாசமிட்ட கடிதம் ஒன்றை அன்பானந்த ரிடம் கொடுத்துவிட்டுப் போனுன். அந்தக் கடிதத்தைக் காணவும், அன்பானந்தர் முகம் மலர்ந்தது. ஏனெனில் மணிவாசகன் காற்றிற் பறக்கவிட்டதும், அவனோடு அன்பானந்தர் பழகுவதற்குக் காரணமா யிருந்ததுமான காகிதத்தில் காணப்பட்ட எழுத்தைப்போலவே, கலா வதிக்கு வந்த கடிதத்தின் விலாச எழுத்துக்கள் இருந்தன. உடனே அவர் அதைத் தாமே கொண்டுபோய்க் கலாவதியிடம் கொடுத்து விட்டு வந்தார்.

கலாவதி படுக்கையிற் படுத்தபடியே அன்பானந்தர் கொடுத்து விட்டுப்போன கடித உறையைக் கிழித்துக்கடிதத்தை எடுத்துப் பிரித் துப்பார்த்தாள் அதில் தமிழ் எழுத்துக்கள் காணப்பட்டனவேயன்றி தமிழ் வார்த்தைகள் ஒன்றும் காணப்படவில்லை. அவளால் அதைப் படிக்கமுடியவில்லை. அவள் திகைத்தாள்; சுமார் அரைமணிநேரம் போல் அதை உற்று நோக்கி மிகவும் ஆழ்ந்து சிந்தித்தாள். பிறகு சிறிது சிறிதாக அவள் முகம் மலர்ந்துகொண்டுவந்தது. சற்றுநேரத்தில் அன்றலர்ந்த செந்தாமரைபோல் பேரானந்தப் பொலிவுடன் விளங் கிற்று. அக்கடிதத்தை மடித்துக் கையில் வைத்துக்கொண்டு அவள் ஏதோ ஒரு வெளியைக்கண்டு நகைப்பதுபோல் நகைத்தாள் ; படித்த கடிதத்தை முத்தமிட்டாள் ; மார்போடணைத்துக் கொண்டாள் ; ஆன ந்தக் கண்ணீர் அரும்பினுள் ; மீட்டும் ஒருமுறை கடிதத்தைப் பிரித் துப் பார்த்தாள் ; அதைக் கண்ணில் ஒற்றிக்கொண்டாள். அவள் உட ம்பு சிறிது சிறிதாகப் பூரித்தது ; இளைப்பு மாறியது. எப்பொழுதும் போலக் கலாவதி சுகசரீரியாய் விளங்கினுள். பிறகு அவள் சுமார் ஒரு நிமிஷம் கண்ணைச் சுருக்கி ஏதோ சிந்தித்து, அச் சிந்தனையால் ஓர் உறுதியான தீர்மானத்துக்கு வந்தவள் போலப் படுக்கையினின்றும் எழுந்து அன்பானந்தரை நோக்கிச் சென்றுள். சுமார் ஒருமணிநேரத்

திற்கு முன் முகம்வெளுத்து உடலிளைத்துச் சோர்வுற்றிருந்த கலாவதி இப்பொழுது இயற்கையழகும் உருவமும் கொண்டவளாய், நகை தவழும் முகத்தோடு தம்மை நோக்கி வருவதைக் கண்ட அன்பானந்தர், பேராச்சரியமுற்று அவளை அதிசயமாய்க் கூர்ந்து பார்த்தார்.

“ கன்னிகை யொருத்தி சிற்றின்பம்
வேம்பெனினும் கைக்கொள்வள் பக்குவத்தில்,
கணவனருள்பெறின் முனே சொன்னவா
றென்னெனக்கருதி நகையாவள் ”

என்ற ஸ்ரீமத் தாயுமான சுவாமிகள் வாக்கை நினைத்துத் தமக்குள் மனமகிழ்ந்தார், “ உண்மைக் காதல் உணர்ச்சி எவ்வளவு அருமை ! உண்மையான காதல் உயிரைப்போக்கவும் வல்லது உயிரை ஆக்கவும் வல்லது” என்று இவ்வாறு சிந்தித்துக் கொண்டிருந்தபோது கலாவதி அவரை நெருங்கி, வாய்திறந்து ஒன்றுங் கூறாமல் தன்கையில் வைத்திருந்த கடிதத்தை அவரிடம் கொடுத்தாள். அவர் அதை வாங்கிப் பார்த்தார். அக்கடிதத்தில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:

## கடிதம்.

“ எ உ ர் க் வ ங் உ ரை லி கு ஓ ய ! ற் ற பி
ன் ள வை க ர் து யி வ க் ம் வி மே மு பி ப் ல்
நா சே த ரு பு ணி த் ன் ய க ற் மு தி ம் ன் ன்
ன் ய பெ ம் ண் ய தி ப ஞ நே று ன் ன நா உ ம
த் க தை கா லு , ல வா ச் ற் ளே கே ட ம் நி செ
மு த் க் ண ம் ம ா ய் சோ க க் ட் லு , ன் ங்
கா த சி மெ க த் ல் ண ப மா ப் ற மா ய ய் ற்
ங் ட் று ன் ர தா உ வு ரி ற பெ லு கி எ த க
ரி பெ ம் க் ய தை ய் னே . ற் நா வ வ க க் ளி
ய ரு பா கி த் எ தி ன் நே று ன் ரு தா வா க த்

த டி ங் ரு தா மீ டு ஒ மு மு தி ம் ய் ய க் ய
ப வ தி ங் ல் ட் ம் ரு றை ன் ன எ தி பா கி ம்
எ க் எ தி ரு கு . ஞ அ வா வ த ற் க் ர ம்
ன கு ய் யி க் ம் ஆ ல் வ் ற ரா த கு கா ண அ
ப் க் ய ! து ன ற் ண் பா கி மா வி ம் அ ல் சை
பா கி மே அ க வி க ட க் ய ய் டு ; தி ஆ வை
த் ல் றி ழ து ண வி ங் பி த போ ஆ வி வே எ ற
தா அ வி ங் உ ர் ழ து த் ன் ல் ய் டு ன் ன் அ
ச் மே ஏ னி , அ ள் ர் து த நீ வா த் எ க் அ
ச ! னே ல் நீ ரு கூ ங் கா ல் ர் ர் து ன கு ப்
பா கி த் ம ப் ர் மா த் த் ஞ் ய் லோ ய ன் தை ன்
க் ய தை ன பூ வ க த த சே தா ழி நா அ எ ன
தா க் ரு வ த த றே ஒ ந மு இ லா எ க் நீ வ்
க க து து கா ன் ? ரு ல ம் ல் த ன கு அ வா
ற த் ஞ் ய் யே ற ரு வ ம யீ மா ம் ஆ லா , ப்
த த சே வா ன் க து து தி ன கு . த ல் அ பா
க் ய தை பே வ ற ண ய ன் ன உ னே கா க் ண டை
கி த் ப் ற த கே ணி எ ம ம் ன் க ண கா உ ங்
து ரு கு ங் போ வி டா அ டா கி த் நி த் ம ழ் த
உ க் லை து ய் ட் ல் ப் க் ய தை னே து கி வ ற்
கு ட ல் ம போ வி மே ற ச் த் ல் ற் நா வ வி லை
மி மி லா ற் ய் டு ன் அ ச தா நே று ன் ர ல் .
ஆ னு , ரி வ நா வ ம ரு ப ப் ற் ஏ ம் னே க
யி ம் பெ ய ர் ன் ரா லி ப் தை ப ழ து நி க் க்
கூ மா லா இ று லை ன் ல் த் ற் வ து வ க் ண் அ
டு த ல் ன் மா உ இ ல தி கு ங் அ ரை க டு வ
ரி ம் டை ற் க் ண் சே வே . ப் மு நீ ன் து ரு கூ
ட வி பெ று கோ டு ல் ன் அ போ து எ மீ க ணே ர்

ங் உ க ங் ங் லி சூ யவோறை த யி எ வா ஞ ,
து ன் ரு கூ த ற் டி பூ ன் த் ரை ல் றி யா ல் அ
ஜை ன் ன் டு டு து ன் ழ் ள் ழ து எ ஊ ட் ப் ரி
ஙா அ போ எ த் எ வா ஙா மு வ ம் ன் வி டு பி யா
த யி த் ஊ க ஜை த் க் ள் ன் இ த ரு ரு க ஊ
உ ா து யா அ வை து கோ வே. ங் ஒ பெ ங் ரு யை
ப் ற ண் யே க் டி ம் ழு லா ஹே. ன் டை அ பு கா
பெ வே டி இ க த எ த யி ன் எ னு ய ன் - த
ல் ன் சோ ல ஞ் கி ன் எ அ பு ண் யா ல் மா ம வ
எ று ல் அ சு றே - ன் ன் உ மை ஞ , சு று ற்
ற ரு , இ க த ஜை ப க் ம் கை எ தி அ ங் கோ
தா ல் ஙீ க் டி த் ப் டி கு வ யை ளி ல் றி து ள்
வா . ன் அ லு டு . ங் ன , ன் டி , ணி ச ன்
ய் அ பு றி ட் ம் இ ங ம் உ ன மை ம வா க ."



இக்கடிதத்தை அன்பானந்தர் படிக்கமுடியாமல் கலாவதியை நோக்கி, " இதென்ன, எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே. இதைப் பார்த்தால் இரகசியக் காதற் கடிதம்போலிருக்கிறது. உனக்குக் கடிதம் எழுதக் காதலன் எவனுகிலும் உண்டோ?" என்று புன் சிரிப்புடன் கேட்டார். கலாவதி அதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் தலையைக் குனிந்துகொண்டு உள்ளேசென்று, சிறிதுநேரத்தில் கையில் ஒரு பென்சலோடு வந்து அன்பானந்தர் கையில் வைத்திருந்த கடிதத்தை வாங்கி, அதன் வரிகளுக்கிடையே

[ எ உ ா் க் வ ங் உ ரை லி த ஒ ய ! ற் ற பி
ன் ண வை க ா் து யி வ க் ம் வி மே மு பி ப் ல்]

'எ—ன்—உ—ண' என்று இவ்வாறு தொடரும்படி கோடுகிழித்துத் திரும்பவும் கடிதத்தை அவர் கையிற் கொடுத்து, "இப்பொழுது கடிதத்தின் வரிகளை இரண்டிரண்டாய் எடுத்துக்கொண்டு நான் கிழித்திருக்கும் கோட்டின்படி எழுத்துக்களைச் சேர்த்துப் படித்துப் பாருங்கள்" என்றாள். அன்பானந்தர் அவ்விதமே சேர்த்துப் படிக்கக் கடிதம் பின் வருமாறு விளங்கிற்று:

"என் உணர்வைக் கவர்ந்து உயிரை வலிக்கும் ஓவியமே! முற்பிறப்பில் நான் செய்த பெரும் புண்ணியத்தின் பயனாக நேற்று முன்தினம் நான் உன் மதி முகத்தைக் காணலும், மலர்வாய்ச் சொற்களைக் கேட்டலும், நின் செங்காந்தட் சிறுமென் கரத்தால் உணவு பரிமாறப் பெறலுமாகிய எய்தற்கரிய பெரும் பாக்கியத்தை எய்தினேன். நேற்று நான் வருவதாக வாக்களித்தபடி வந்திருந்தால் மீட்டும் ஒருமுறை முன்தினம் எய்திய பாக்கியம் எனக்கு எய்தியிருக்கும். ஆனால் அவ்வாறு வாராததற்குக் காரணம் அப்பாக்கியமே! அது கனவிற்கண்ட பாக்கியமாய் விடும்; அதில் ஆசைவைத்தால் அறிவிழந்து உணர்விழந்து பித்தன்போல் ஆய்விடுவேன் என்ற அச்சமே! ஏனெனில் நீ அருள்கூர்ந்து காதல் நீர் வார்த்து எனக்கு அப்பாக்கியத்தை மனப்பூர்வமாகத் தத்தஞ் செய்தாலொழிய நான் அதை என்னதாகக் கருதுவது தகாதன்றே? ஒரு நலமும் இல்லாத எனக்கு நீ அவ்வாறு தத்தஞ்செய்வாயென்று கருதுவது மதியீனமாகும். ஆதலால், அப்பாக்கியத்தைப் பெறுவதற்கெண்ணிய என் மனம் உன்னைக் காணக் காண உடைந்து உருக்குலைந்து போய் விட்டால் அப்பாக்கியத்தை நினைந்து மகிழ்வதற்கு மிடமில்லாமற்போய் விடுமென்ற அச்சத்தால் நான் நேற்றுவரவில்லை. ஆயினும் பெரியவர் நான் வாராமலிருப்பதைப் பற்றி ஏதும் நினைக்கக்கூடுமாதலால் இன்று மாலை உன் இல்லத்திற்குவந்து அவரைக்கண்டு அவரிடம் விடைபெற்றுக்கொண்டு செல்வேன். அப்பொழுது நீ என் மீது கருணைகூர்ந்து உன் கருங்கூந்தலிற் சூடிய பூவொன்றைத் தரையில் எறிவாயானால், அதை நான் அன்போடு எடுத்து என்வாழ்நாள் முழுவதும் என்னைவிட்டுப் பிரியாத உயிர்த்துணையாக அதை வைத்துக் கொள்வேன். இந்த ஒருபெருங் கருணையைப் பெறவேண்டியே இக்கடிதம் எழுதலாயினேன். என்னுடைய அன்பு—காதல்

என்று சொல்ல அஞ்சுகிறேன்—என் அன்பு உண்மையானால், மாசு மறுவற்றதானால், இக்கடிதத்தைப் படிக்கும் வகையை நீ எளிதில் அறிந்துகொள்வாய். அன்பு அறிவூட்டும். இங்ஙனம்; உன்னடிமை மணிவாசகன் "



இவ்வாறு கடிதத்தைப் படித்து விட்டு அன்பானந்தர் கலாவதியை நோக்கி "கடிதம் விளங்கிவிட்டது. கீழே கிழித்திருக்கும் கோடு என்ன? இக்கடித அந்தரங்க அறையைத் திறக்கும் திறவுகோலோ?" என்று வினவினர்.

"ஆம்" என்று கூறிக் கலாவதி தலைகுனிந்து நின்றாள்.

"நல்லது, அவர் மாலையில் வருவது நிச்சயம். வந்தால் அவர் கடிதத்தில் எழுதியபடி உன் கூந்தற் பூவை அவர்க்குக் கொடுக்கப் போகிறாயா? அல்லது உன் அன்பை அவர்க்குக் கொடுக்கப் போகிறாயா?" என்று அன்பானந்தர் வினவினர்.

கலாவதி பதில் உரையாதிருந்தாள்.

மறுபடியும் அவர் கலாவதியை நோக்கி "வெறும் பூவைக்கொடுத்து அவரை அனுப்பிவிட மாட்டாயே?" என்று வினவினர்.

'மாட்டேன்' என்று சொல்வதற்குப் பதிலாகக் கலாவதி தலையை அசைத்தாள்.

"ஆனல், நிறைந்த அன்பைக் கொடுத்து அவரை நிற்கவைப்பாயென்பது தானே கருத்து?" என்றார் அன்பானந்தர்.

"ஆம்" என்று சொல்வது போலக் கலாவதி புன்னகை செய்தாள்.

"மிகவும் சந்தோஷம். விசித்திரக் கடிதத்தைப் பத்திரமாய் வைத்துக்கொள்" என்றுசொல்லி மணிவாசகன் கடிதத்தைஅவளிடம் கொடுத்தார் அன்பானந்தர்.

---

# XVII

## பெருஞ் செல்வப் பேறு

அன்றுமாலை மணிவாசகன் தன் விசித்திரக் காதற் கடிதத்தில் எழுதியபடி, கலாவதியின் வீட்டுக்கு வந்தான். கலாவதி காலையில் இருந்ததுபோலவே, அவனும் உடல் இளைத்து முகம் வெளுத்திருந்ததைக் கவனித்த அன்பானந்தர் அவனைவரவேற்று, கலாவதிக்கு அவன் எழுதிய கடிதத்தைத் தான் பார்வையிட்டதாகக்கூறி அவன் விருப்பத்துக்குக் கலாவதி இணங்குவாள் என்ற சந்தோஷச் செய்தியை அவனுக்கு முன்னதாகத் தெரிவித்தார். உடனே அவன் சோர்வு நீங்கி முகமலர்ந்து உற்சாகமுற்றான்.

மாலைப்பொழுது மிகவும் இன்பமாகச் சென்றது. இரவு மணி எட்டாயிற்று. எல்லோரும் போஜன முடித்தான பிறகு, அன்பானந்தர், கலாவதியையும், அவள் அன்னையையும், மணிவாசகனையும், அழைத்து நிலாவெளிச்சத்தில், வீட்டு நடுமுற்றத்தில் தமக்கெதிரே வந்து அமரச்சொல்லி வற்புறுத்தித் தாமும் அவர்களெதிரே உட்கார்ந்தார்.

“நிலவு பட்டப்பகல்போலக் காய்கிறதே” என்றாள் கலாவதி.

அன்பானந்தர் அவளை நோக்கி, “ஆம், அம்மா, இன்றையதினம் சந்திரன் நன்றாய்ப் பிரகாசிக்கிறது. பூரணச் சந்திரனைப் பார்க்கும்போது உன்னைப் போலிருக்கிறது. நீ இருக்கும் இடமெல்லாம் இனிமையாய் அறிவொளி வீசுகிறது. ஆனால் உனக்கும் சந்திரனுக்கும் இரண்டு விஷயங்களில் வேற்றுமையிருக்கிறது” என்றார்.

“அந்த விஷயங்கள் எவை?” என்று வினவினான் மணிவாசகன்.

“மதியகத்து மறுவுண்டு; கலாவதியகத்து மறுவில்லை. அது என்றும் ஒருபடியாயிருப்பதில்லை, இவள் உள்ளம் என்றும் ஒரேபடியாய் இருக்கிறது,” என்று அன்பானந்தர் மணிவாசகனை நோக்கிக் கூறிவிட்டு, கலாவதியின் அன்னையை நோக்கி, “அம்மா, உங்

களுடைய மகள் மறுவற்ற மதியம், புண்ணிய பொக்கிஷம், பொறுமைக் களஞ்சியம், நற்குண நிதியம், கல்விக்கடல், அன்பினாலயம்'' என்று சொல்லிவரும்போது, கலாவதி அவரை இடைமறித்து,

"போதும், போதும், நிறுத்துங்கள். முகஸ்துதி செய்வதில் கைதேர்ந்தவராயிருக்கிறீர்களே. உங்கள் முகஸ்துதியால் என்னைக் கெடுத்துவிடாதீர்கள்'' என்றாள்.

"கலாவதி, உன்னை ஒன்றும் கெடுக்காது. உன்னைக் கெடுக்கவல்லது ஒன்றுமில்லை, வாராத வாழ்வு வந்தாலும், எய்தாத துன்பம் எய்தினும், உன் அன்பும், அருளும், அறிவும், அடக்கமும் குறையாதென்பதை நான் நன்றாய் அறிவேன். மணிவாசகமும் நன்கறிவார். பெண்களுக்கு வேண்டிய குணங்களெல்லாம் உன்னிடத்தில் பொருந்தி நிறைந்திருக்கின்றன. உன்னுடைய வாழ்க்கை இன்பமாகச் செல்லும். நான் விரும்பும் ஒரு விஷயத்தைமட்டும் நீ நிறைவேற்றிவிட்டால், உன் இன்பவாழ்க்கைக்கு யாதொரு இடையூறும் வாராது'' என்றார் அன்பானந்தர்.

"அது என்ன விஷயம்?'' என்றாள் கலாவதி.

அவ்விஷயத்தைச் சொல்லத் தடையில்லை. ஆனால் உன்னால் மட்டும் அதை நிறைவேற்றமுடியாது. உன் அன்னையின் உதவியும் வேண்டும்'' என்று கூறி அன்பானந்தர் கலாவதியின் அன்னை முகத்தைப்பார்த்தார். அதையறிந்து,

"என்னாற் செய்யக் கூடியதென்ன? உங்கள் மனத்துக்குத் திருப்திதரக் கூடுமானால், அதற்கு என்னால் இயன்ற உதவியை நான் செய்யத் தயாரயிருக்கிறேன்'' என்றாள் கலாவதியின் அன்னை.

உடனே அன்பானந்தர் அவளை நோக்கி, "அம்மா, நான் வயோதிகன். நீங்களும் ஒருபெண்ணுக்குத் தாயாயிருப்பவர்கள். நம்மைப் போன்ற பெரியவர்களுக்கு வாழ்க்கையில் உள்ள இன்பம் என்ன? உலக கஷ்ட நஷ்டங்களையும், சுகதுக்கங்களையும் அறியாத இளைஞர்களை இன்பவாழ்க்கையில் அமர்த்தி, அவர்கள் இன்பமாய் வாழ்தலைக் கண்டு களிப்பதுதான். இதைவிட வேறு என்ன இன்பம் இருக்கிறது?

நான் இங்கே வந்து நெடுநாட்களாய்விட்டன. உங்கள் எல்லாரோடும் நெருங்கிப் பழகிவிட்டேன். கலாவதி என் சொந்த மகள்போலாய்விட்டாள். அவள் இன்பமாய் வாழ்ந்தால், அதைவிட எனக்குத் திருப்திதரக்கூடியது வேறொன்றில்லை. அவள் மிகவும் புத்திசாலி, நன்றாய்ப படித்திருக்கிறாள். தற்செயலாக பண்டிதர், மணிவாசகமும் நமக்குப் பழக்கமாயினர். அவரைப்பற்றி நான் அதிகம் சொல்லவேண்டுவதில்லை. இவ்வளவு சிறுவயதில் இவ்வளவுபடிப்பும் அடக்கமும் எல்லாருக்கும் வாய்ப்பது அரிது. எல்லாவிதத்திலும் கலாவதியும் மணிவாசகமும் சிறந்து விளங்கினார்கள். இவர்களை மனைவியும் புருஷனுமாக ஆக்கிவிட்டால் இவர்கள் வாழ்க்கை இன்பமாய்ச் செல்லும் என்பது என் நம்பிக்கை. இதற்காகத்தான் உங்கள் உதவியை நான் கோரியது" என்றார்.

கலாவதி நாணத்தால் தலைகுனிந்தாள். மணிவாசகம் முகம் மலர்ந்து, தலை கவிழ்ந்து கலாவதியைக் கடைக் கண்ணால் நோக்கினான். அவளும் அவனை அவ்விதமே நோக்கினாள். இருவர் நோக்கும் ஒன்றோடொன்று சந்தித்தன. கலாவதியின் அன்னை தன் மகளைப் பார்த்தாள். அவள் தலைகுனிந்திருப்பதைக் கண்டு அன்பானந்தரை நோக்கி, "ஐயா, நான் என்ன, பெண்பிள்ளை. கலாவதியின் விவாகம், புருஷர்கள் யாராவது முன்னின்று நடத்தினால்தானே முடியும். ஏதோ கலாவதியின் அதிர்ஷ்டம் தந்தையை யிழந்த அவளுக்கு நீங்கள் ஒரு தந்தையைப் போல் வந்தடைந்தீர்கள். உங்களுடைய யோசனைப்படியே செய்யுங்கள். அதற்கு நான் என்ன தடைசொல்லப் போகிறேன்?" என்றாள்.

இதைக் கேட்ட அன்பானந்தர், மிகவும் ஆனந்தமடைந்து, "அம்மா, மிகவும் சந்தோஷம். இதற்காகத்தான் நான் இத்தனை நாள் காத்திருந்தேன். கலாவதிக்கும் மணிவாசகத்துக்கும் விவாகமாவதைக் கண்ணால் பார்த்துவிட்டால் என்மனம் திருப்தியாய் விடும், அதற்குமேல் உங்களுக்குப் பாரமாக நான் இங்கே இருக்கமாட்டேன்—" என்று சொல்லிவரும்போது கலாவதி அவரை இடை மறித்து,

"என்ன அது! இங்கு இருக்கமாட்டீர்களா? நன்றாயிருக்கிறதே! அதற்குத்தான் விவாகத்துக்கு ஏற்பாடு செய்கிறாப்போலிருக்கிறது.

வேண்டாம், வேண்டாம், அப்படியானால் எனக்கு விவாகமே வேண்டாம். இது பிறர்வீடு என்ற நினைப்பே தங்களுக்கு வேண்டாம். நாங்கள் அப்படி விகற்பமாய் நினைக்கவில்லை'' என்று கூறிவிட்டுத் தன் அன்னையை நோக்கி, "என்ன அம்மா, பெரியவர் நம் வீட்டை விட்டுப் போய்விடுவாராமே?'' என்றாள்.

"போவார், போவார், அவரை யார் விடப் போகிறார்கள்?'' என்றாள் அவள் தாய்.

அப்பொழுது மணிவாசகன் அன்பானந்தரை நோக்கி, "என்ன நீங்கள் சொல்வது நன்றாயில்லையே. இவ்வளவு தூரம் பழகிய பிறகு நீங்கள் இவ்விடத்தைவிட்டுச் செல்ல நினைக்கலாமா? நீங்கள் தானே என்னுடைய பழக்கத்துக்கும் காரணம்! நான் அடையப் போகும் வாழ்வெல்லாம் உங்களால் கிடைப்பதுதானே! உங்களைவிட்டுப் பிரிய நான் தான் சம்மதிப்பேனா? உங்களுடைய க்ஷேமத்திற் கருத்துள்ளவர்கள் இன்னுமொன்பதுகூட உங்களுக்குத் தெரியவில்லையா ? இவ்விடம் விட்டுச் செல்வதென்ற நினைப்பையே விட்டுவிடுங்கள்'' என்றான்.

அன்பானந்தர் சிறிதுநேரம் மணிவாசகனை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு கலாவதியை நோக்கி "அம்மா, நீங்கள் எல்லாரும் என்மீது அளவு கடந்த பற்று வைத்திருக்கிறீர்கள். உனக்கு விவாகமான பிறகுகூட என்னை இங்கேயே இருக்கச் சொல்கிறீர்கள். நான் வரவர பால்யமுறவில்லை. ஒவ்வொரு நாளும் என் சரீரதிடத்தில் கொஞ்சம் கொஞ்சம் குறைந்துகொண்டே வருகிறது. உங்களுக்கு நான் ஒருவிதத்திலும் பிரயோஜனப்படமாட்டேன். வயோதிகனாய் விட்டபடியால் அடிக்கடி ஏதாவது நோயால் வருந்துவேன். அதனால் உங்களுக்குத் தொந்தரவும் பணச்செலவும் உண்டாகும். ஏன் என் பொருட்டு உங்களுக்கு இந்தக் கஷ்டமெல்லாம்? நீங்கள் செய்த உதவிகளுக்கு நான் நன்றிபாராட்டுகிறேன். நான் சுயநலப் பிரியனல்ல. என் நன்றியறிதலைக் காட்டுவதற்கு ஏற்ற வழி, உங்களுக்குத் துன்பம் கொடுக்காமல் இவ்விடம் விட்டுச் செல்வதுதான்'' என்றார்.

"நீங்கள் இவ்விடம்விட்டுச் செல்வதுதான் எங்களுக்குத் துன்பங் கொடுக்கும். உங்களிடத்து நாங்கள் மிகுந்த அன்பு வைத்திருக்கிறோம் என்பது உங்களுக்கு விளங்கவில்லையா?" என்றாள் கலாவதி.

அன்பானந்தர் புன்னகை செய்து "என்மீது அன்பா? அரைக் காசுக்கு விதியற்ற கிழவனாகிய என்மீதா அன்புவைத்திருக்கிறீர்கள்?" என்றார்.

"அதென்ன—அந்த வார்த்தை சொல்ல வந்தீர்களே" என்று மணிவாசகன் அவரைச் சிறிது கோபக் குறியுடன் நோக்கி, "பணத்தைப் பொறுத்து அன்பு பாராட்டுகிறவள் கலாவதியல்லள்—நானுமல்லன்—என்பது உங்களுக்கு இன்னும் விளங்கவில்லையா? உங்களை உங்கள் பொருட்டே நேசிக்கிறோமே யல்லது, வேறெதன் பொருட்டுமல்ல. தெரிகிறதா?" என்றான்.

அன்பானந்தர் முகம் பிரகாசமுற்றது. அவர் "தெரிகிறது; நான் கிழவனாகவும், ஏழையாகவும், உங்களுக்கு அந்நியனாகவும் இருந்தபோதிலும், நீங்கள் என்மீது அன்பு பாராட்டுகிறீர்கள். செல்வர் தேடியலைந்தாலும் கிட்டாத உண்மை அன்பை நீங்கள் எனக்குக் கொடுக்கிறீர்கள். ஆனால், என்னால் கூடிய வரையில் நான் உங்களுக்குத் திருப்தியாய் நடந்துகொள்வேன். நீங்கள் விரும்புவதுபோல் நான் இங்கேயே இருந்தால்—" என்று கூறிய போது கலாவதி அவரை இடைமறித்து.

"அந்த 'ஆல்' என்பது வேண்டாம்" என்றாள்.

"நல்லது, நான் இங்கேயே இருந்து உங்களிடத்தில் எனக்குள்ள அன்பையும் நன்றியறிதலையும் காட்ட என்னால் இயன்ற உதவியைத் தங்களுக்குச் செய்கிறேன். எப்படியாவது, நீங்கள் சந்தோஷமாயிருக்க வேண்டுமென்பதுதான் என்னுடையநோக்கம்" என்றார் அன்பானந்தர்.

"அத்தான் சரி. இப்பொழுது எங்களுக்குத் திருப்தியாயிற்று" என்று கூறிவிட்டு, கலாவதி தன் எதிரே உட்கார்ந்திருந்த சூரனை இழுத்துத் தன் மடிமீது வைத்து, அதன் முகத்தைத் தடவிக் கொண்டு, முகமலர்ந்து அதை நோக்கி, "சூரா, உன்னை எங்களோடு

சேர்க்கவில்லை என்று எண்ணாதே. நீ எங்கள் குடும்பத்தைச் சேர்ந்த 'நீ' தான், 'நா' அல்ல. நீ தானே எல்லாவற்றுக்கும் காரணம். உன்னால்தான் நான் பெரியவரைக் கண்டேன். அவரால்தான் இவர்" என்று மணிவாசகத்தைச்சுட்டி "எங்கள் வீட்டுக்குப் பழக்கமாயினர். எல்லாம் உன்னால் ஏற்பட்டவைதானே. ஆயினும் நான் உனக்கு என்னசெய்து என் நன்றியறிதலைக் காட்டக்கூடும்? ரொட்டியும் பாலும் கொடுக்கலாம். அதற்குமேல் உனக்கு ஒன்றும் வேண்டியதில்லை. வா, போகலாம்" என்று எழுந்தாள்.

அவள் அன்னையும் எழுந்தாள். இருவரும் வீட்டுக்குள் சென்று விட்டனர். அன்பானந்தரும் மணிவாசகமும் மட்டும் பின்னும் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். சற்று நேரம் சென்றபிறகு அன்பானந்தர் மணிவாசகத்தை நோக்கி, "மணிவாசகம், உண்மையாய்ச் சொல்லும். கலாவதியின் மனதுக்கு நீர் இப்பொழுது தலைவராயிருப்பதுபோல, விவாகமானபிறகு அவள் வீட்டுக்கும் தலைவராய்விடுவீர். அப்புறம் நான் ஏன் இங்கிருக்கவேண்டும். மெல்ல நழுவிவிடுகிறேன். மெல்ல நடந்து நடந்து சென்று விடலாமென்று நினைக்கிறேன். என்ன சொல்கிறீர்?" என்று வினவினர்.

"நீங்கள் போனால், நான் உங்களைத்தேடிப் பிடித்துக்கொண்டு வந்துவிடமாட்டேனா? நீங்கள் எப்படி கலாவதியை விட்டு பிரிந்து போவீர்கள்? உங்கள் ஓட்டத்தைப் பிடிப்பதுதானா கஷ்டம்" என்று கூறிச் சிரித்துக்கொண்டு மணிவாசகம் எழுந்தான். அன்பானந்தரும் முற்றத்தை விட்டு நீங்கினர்.

## XVIII

### காதலரின் அன்பு.

காலை ஞாயிறு காரிருள் அகற்றிப் பேரொளிவீசிப் பிரகாசித்தது. மணிவாசகம், கலாவதி வீட்டுத் திண்ணையில் எதையோ நினைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். அவன் முகத்தில் குதூஹலம் கூத்தாடியது. இதுவரையில் காணப்பட்டதைவிட இப்பொழுது அவன் அதிக அழகுள்ளவனாகக் காணப்பட்டான். அவன் நினைவு எதுவாயிருந்தபோதிலும் இருக்கட்டும். அந்த நினைவில் கலாவதியும் கலந்

திருந்தாள் என்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. இல்லாவிட்டால் முகத்தில் அவ்வளவு ஆனந்தமும் அழகும் எங்கிருந்து வரும்? காத லின் சக்தி ஆச்சரியமானது. அதை அனுபவித்தவர்களே அதன் மகிமையை அறிவார்கள்.

மணிவாசகம் சிந்தாக்கிரந்தனாய்த் தன்னை மறந்து திண்ணையில் உட்கார்ந்திருந்தபொழுது கலாவதி தெருவாயிலண்டை வந்தாள். அவள் வந்ததை மணிவாசகம் கவனிக்கவில்லை. கலாவதி அவன் தன்னை மறந்திருப்பதைக்கண்டு அவனையே உற்றுப்பார்த்துக்கொண் டிருந்தாள். அவள் முகத்திற் புன்னகை தவழ்ந்தது. நாலைந்து நிமி ஷநேரம் நின்றாள். மணிவாசகம் அவள் நிற்பதைப் பார்க்கவில்லை. கலாவதிக்குச் சிரிப்புவந்துவிட்டது. கொல்லென்று நகைத்தாள். மணிவாசகம் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். கலாவதி தன்னை நோக்கி நகைத்து நிற்பதைக் கண்டான். உடனே, "கலாவதி, நீயா நிற்கிறாய்? நான் கவனிக்கவில்லை. பெரியவர் என்ன செய்கிறார்?" என்று கேட்டான்

"தூங்குகிறார்" என்றாள் கலாவதி.

"ஓ, ஆனால் இன்னும் படுக்கை விட்டு எழவில்லையோ? சரிதான் இல்லாவிட்டால், இதுவரையில் என்னோடு பேச வாராமலிருப்பாரா? கலாவதி, அவர் யாரோ, நீ யாரோ, நான் யாரோ? எல்லோரும் இவ் வளவு நேசமாய் ஏதோ உற்றார் உறவினர்களைப் போலிருப்பதற்கு அவர்தானே காரணம்?" என்றான் மணிவாசகன்.

கலாவதி:—"மெய்தான். அவருக்கு நம்மிடத்தில் என்ன பற்று! என்ன ஆசை! என் தந்தைகூட என்னிடத்தில் இவ்வளவு வாஞ்சை யாயிருந்ததில்லையே!"

மணிவாசகம்:—"ஆமாம். அவர் உன்னைப் பெற்ற மகளினும் பதின்மடங்காகவல்லவோ பாராட்டுகிறார்!"

கலாவதி:—"அதுதான் எனக்கும் ஆச்சரியமாயிருக்கிறது. நான் சாதாரணமாய் யாரும் செய்யக்கூடிய ஓர் அற்ப உதவி செய்ததை அவர் மிகப்பெரிதாகப் புகழ்கிறார். அவரிடத்தில் நான் அன்பாயிரு ப்பதை, ஏதோ திரண்ட செல்வத்தை நான் அவருக்கு இனமாகக்

கொடுத்துவிட்டதாகக் கருதியிருக்கிறார். பாவம், ஏதோ நல்ல சுகத்தி லிருந்து, கஷ்டகாலத்தால் இப்படி அநாதைபோலாய் விட்டார் போலிருக்கிறது. அவர் பேச்சு, குணம், செய்கை முதலியவைகளைக் கவனித்தீர்களா? ஒரு பெரிய மனிதர்போல் இருக்கிறதேயன்றி, சாதா ரணமனிதராகக் காணப்படவில்லையே ?"

மணிவாசகம்:—"பெரிய மனிதர்கள் என்றால் யார்? அவர்கள் செயல்கள் எப்படிப்பட்டன, தெரியுமா? கலாவதி, இந்தக் காலத்தில் பெரிய மனிதர்கள் என்றால் யார் தெரியுமா என்று கேட்கிறேன். ஸ்திரீகள் அருகிலிருப்பதைக்கூடக் கவனியாமல், வாய்க்கு வந்த வார்த்தைகளைப் பேசுவது, சதா வாயில் ஒரு முழநீளம் 'ஸ்பென்ஸர்' சுருட்டை (Spencer Cigar) வைத்துக்கொண்டு சாய்மான நாற்காலி யில் படுத்திருப்பது—இவ்விதமான ஆபாச வழக்கங்களுடைய சோம் பேறிகள்தான் இந்தக் காலத்தில் பெரிய மனிதர்கள்! அவர்களில் ஒருவரல்லர் நம் அன்பானந்தர். நீ அவரைப்பெரியமனிதர் என்று சொல்வது எந்த அர்த்தத்தில் என்பது எனக்குத் தெரியும். அவர் அன்பு, அடக்கம், மரியாதை கபடமின்மை இவைகளிற் சிறந்தவர். கர் நாடகப் பெரியமனிதர். தள்ளாமையடைவதற்குமுன் ஏதோ நல்ல உத்தியோகத்தி லிருந்திருப்பார்."

கலாவதி:—"ஆம், ஆம். அதில் சந்தேகம் இல்லை. எத்தனையோ புத்திமான்கள், தம் உத்தியோகத்தில் நல்ல திறமையுடையவர்கள்; தள்ளாமையே காரணமாக உத்தியோகத்தினின்று நீக்கிவிடப்படுகி றார்களல்லவா ?"

மணிவாசகம்:—அது மெய்தான். ஆனால் என் உத்தியோகத் தில் ஒரு சௌகரியம். நூலாசிரியன் என்று நான் என் பெயரை நிலைநாட்டத் தீர்மானித்துவிட்டால், யௌவனமென்றாவது, வயோதி கமென்றாவது, வேறு எக்காரணத்தைக் கொண்டாவது என்னை ஒரு வரும் என் உத்தியோகத்தினின்று தள்ள முடியாது. அதை யோசி த்துப் பார், கலாவதி! என்ன உன்னதமான சுதந்தர வாழ்க்கை! ஒரு நூலாசிரியனுக்குத் தலைவன் அவன்தான். அவன் தன் தொழிலில் கீர்த்தியடைந்துவிட்டால், அப்புறம் அவன் விதிக்கு அவனே அரசன். பிரசுரகர்த்தர்கள் அவனை வழிபட்டு அவன் வழி நிற்பார்கள். பொது

ஜனங்கள், எவர் மதிப்புரையையும் அபிப்பிராயத்தையும் பொருட்படுத்தாமல், தங்கள் மனத்துக்குகந்த நூலாசிரியன் கூறுவனவற்றை ஆவலோடு கேட்டு ஆனந்தங்கொண்டு, அவனைப் புகழ்ந்து போற்றத் தயாராயிருக்கிறார்கள். இதைவிடச் சிறந்த ஜீவியம் எது? கலாவதி! மாதம் பத்துரூபா கிடைப்பதாயிருந்தாலும், நான் நூலாசிரியனாய் இருந்து என் வாழ்க்கையைச் செலுத்துவேனேதவிர, அதற்குப் பிரதியாக அரசவாழ்வு கிடைப்பதாயிருந்தாலும் அதை விரும்பமாட்டேன். ஏனெனில், உண்மையான ஒன்றை, அழகாகச் சொல்ல வல்ல ஒருவன் இருப்பானானால், அவன் சொல்லைக் கேட்டுச் செல்ல உலகம் முழுவதும் நிற்கும். ஆம், கலாவதி—எவ்வளவோ உழைப்புக்களுக்கும், எத்தனையோ சுயநல காரியங்களுக்கும், தோன்றி மறையும் அளவிறந்த அற்ப இன்பங்களுக்கும் இடையில், அறிவும் உரையாற்றலும் உடைய ஒருவன் சொல்வதைக் கேட்க உலகம் முழுவதும் நிற்கும் 'அறிவுடை யோருவனை அரசனும் விரும்பும்' என்ற கிழவியின் மொழி பொய்யல்ல. இன்னமும் யோசித்துப்பார் கலாவதி! திருவள்ளுவர் இறந்துஎத்தனையோ நூற்றாண்டுகள்கடந்து விட்டன! இன்னமும் அவர் சொல் அழியவில்லை. நாமெல்லாம் அழிந்துபோவோம். எத்தனையோ தலைமுறைகள் கழிந்துவிடும். இராஜாங்கங்கள் மாறிவிடும். பூலோக அமைப்பும் மாறிவிடலாம். ஆனால், திருவள்ளுவர் சொல் நிலைத்து நிற்கும். ஆங்கிலத்தில் 'ஷேக்ஸ்பியர்' என்ற மகாகவியிருந்தார். ஆரியத்தில் காளிதாசர் இருந்தார். நம் அருமைத் தமிழ் மொழியில் கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் இருந்தார். அவர்களெல்லாம் இருந்தார்கள் ஒரு காலத்தில், பல நூற்றாண்டுகளுக்கு முன்னே. ஆனால் அவர்கள் எழுதிய நூல்கள் இருக்கின்றன! இன்னும் இருக்கின்றன! என்றும் இருக்கும்! கலாவதி! அப்படிப்பட்ட உன்னத மகாபுருஷர்கள் கூட்டத்தில், கடைப்பட்ட ஒரு மூலையிலாவது ஒதுங்கி நிற்பது எவ்வளவு பெருமையென்று நினைக்கிறாய்! என்முயற்சியில் நான் ஜயமடையாவிட்டாலும் சரி, 'அதில் முயன்றோம்' என்ற எண்ணமே என் மனத்திற்கு இன்பந்தரப் போதுமானது."

கலாவதி'—"உங்கள் முயற்சியில் என் ஜயமடையாமற் போவீர்கள்? கட்டாயம் ஜயம் பெறுவீர்கள். கௌரவமும் பெறுவீர்கள்."

மணிவாசகம்:—"கலாவதி, உன்னுடைய துணையைப் பெற்ற பிறகு, நான் எந்த முயற்சியிலாயினும் ஜயம் பெறாவிட்டால், என்னை

விட உபயோகமற்ற வீணன் எவனுமிருக்கமாட்டான். நல்லது, நான் வெளியே போய் வருகிறேன். பெரியவர் என்னைத் தேடினால், மாலை நாலு மணிக்கு நான் வருவதாகச் சொல்.''

கலாவதி:—''அதற்குள்ளாகவா வெளியே போகிறீர்கள்! பெரியவரும் எழுந்திருக்கட்டும். அவரோடு சிற்றுண்டி அருந்திவிட்டுப் பிறகு போகிறதுதானே?''

மணிவாசகம்:—''அதற்குத் தடையில்லை. ஆனால், நாழியாகவாக வெயிலின் உஷ்ணம் அதிகமாய் விடும். அப்புறம் வெயிலிற் செல்லும்படியாய்விடும். நான் இப்பொழுதே போவதுதான் நல்லது. சிற்றுண்டி அருந்துவதைப்பற்றி என்ன? சாயந்திரம்தான் வந்து விடுவேனே.''

கலாவதி:—''ஆனால் சரி. உங்கள் இஷ்டம்போல் செய்யுங்கள். சாயங்காலம் வருவது நிச்சயந்தானே?''

மணிவாசகம்:—''நிச்சயந்தான்'' என்று கூறி, கலாவதியினிடம் விடைபெற்றுக்கொண்டு போய்விட்டான். கலாவதியும் வீட்டுக்குள் சென்றாள்.

* * *

## XIX

### முதியவரின் ஏக்கம்.

கலாவதியும் மணிவாசகனும் வீட்டுவாயிலில் பேசிக்கொண்டிருந்தபோது அன்பானந்தர் உறக்கம் நீங்கி விழித்துக்கொண்டார், ஆனால் படுக்கையைவிட்டு எழவில்லை. தம் உடம்பு மிகவும் பலவீனமுற்றிருப்பதுபோலவும், மரணகாலம் சமீபித்துவிட்டது போலவும் அவருக்குத் தோற்றியது. அவர் சிந்தை பலபல நினைவுகளால் மகிழ்வும் விசனமும் மாறிமாறி அடைந்தது.

தமக்கு நெருங்கித் தோற்றிய மரணத்தை நினைக்க அவர் நெஞ்சம் நடுங்கியது. வாழ்க்கையின் உண்மையான இன்பம்—நிலையான இன்பம்—தெவிட்டாத இன்பம்—கிட்டிய சமயத்தில், அதை விட்டு விட்டு இறக்க நேருகிறதே என்று அவர் மனம் வருந்தினார். இப்பிறப்

பிற் கிட்டிய அரிய இன்பத்தை முற்றும் அனுபவிப்பதற்கு முன்னே, நம் உயிரைக் கொள்ளைகொண்டு போதல், பெருங்கருணைத் தடங்கடலாகிய கடவுளுக்கு நியாயமாகுமா என்று சிந்தித்தார்.

"யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக்கென் கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன் மண்ணுள்வான் மதித்துமிரேன்
தேனேயும் மலர்க்கொன்றைச் சிவனேயெம் பெருமானெம்
மானேயுன் னருள்பெறுநா ளென்றென்றே வருந்துவனே"

என்று ஸ்ரீமந் மணிவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளியதை எண்ணினர். 'இறப்பதனுக்கு என் கடவேன்!" என்று அந்த அருண் ஞானப் பெருந்தகையாரே ஏங்கினரென்றால், நம் அன்பானந்தர் இறப்புக்கஞ்சுவது ஓர் ஆச்சரியமல்ல. ஆயினும், அவர் பின்னும் சிறிது நேரத்திற்கெல்லாம், மரணத்தைப்பற்றி இன்னும் ஆழ்ந்து ஆலோசித்தார்:

"இன்பமான இவ்வாழ்க்கையை விட்டுப் பிரிந்து இறந்துபோவதுமிகக்‌ஃகொடியது என்றுநான் இப்பொழுது நினைக்கிறேன். இதே விதமாகத்தானே முன் ஒவ்வொரு பிறவியிலும் நினைத்து வருந்தியிருப்பேன். ஆனால், கடவுள் என்னுடைய வருத்தத்தைப் பொருட்படுத்தாமல், ஒவ்வொரு பிறப்பிலும் குறித்த காலம் முடிந்தவுடன் என்னை என் கூட்டைவிட்டுப் பிரித்து, வேறொரு கூட்டிற் புகுத்திப் பிறப்பித்திருக்கிறார். என்? என்னுடைய ஆன்ம விளக்கத்தைக் கருதியே. இதை அறிந்துகொள்ளாமல் நான் தெய்வத்தை நோவது மதியீனம் அல்லவா?"

இவ்வாறு சிந்தித்து வந்தபோது அவர் கலாவதியைப் பற்றி நினைத்தார். "ஆ! சிறிது காலம் பழகியதற்குள் அவள் என்மீது எவ்வளவு அன்பு—தன்னலங் கலவாத உண்மை அன்பு—வைத்திருக்கிறாள்!" என்றெண்ணினர்; அளவு கடந்த ஆனந்தங்கொண்டு கண்ணீர் அரும்பினர். ஏனெனில், பட்டும் பருத்தியும் கலந்தது போல இன்பமும் துன்பமும் கலந்து தோன்றும் இவ்வுலகில், அன்பைப் போல் மனிதனுக்கு இன்பைத்தருவது வேறொன்றுமில்லை. 'நம்முடைய க்ஷேமத்தில், மற்றவர்களைவிட அதிக ஆவலும் கவலையும் விருப்பமும் உடைய ஒருவர் இருக்கிறார்' என்ற உணர்ச்சி நமக்கு எவ்

வளவு ஆனந்தத்தைத் தருகிறது! அந்த ஒருவர் பொருட்டு நாம் பல உயர்ந்த காரியங்களை நிறைவேற்றுவதில் ஊக்கமும் உற்சாகமும் கொள்வது இயற்கையல்லவா? இந்த உன்னத உணர்ச்சி ஒன்றில்லா விட்டால் வாழ்க்கையில் சாரம் ஏது?''

இந்த உன்னத உணர்ச்சி அன்பானந்தருக்கு இப்பொழுதுதான் கிடைத்தது. இதைப்பெறுவதற்குப் பேராவல் கொண்டே அவர் தமது திரண்டசெல்வத்தை ஒதுக்கிவைத்து, இவ் வெளிய கோலங்கொண்டு வெளிப்புறப்பட்டார். தமது நீண்ட செல்வவாழ்க்கையில், தம்முடைய க்ஷேமத்தில் உண்மையான கவலையுடையவர்—தம்மிடம் மெய்யன்பு பாராட்டுவோர்—ஒருவரையாவது அவர் காண முடியவில்லை. ஆனால், தாம் ஏழைக் கோலங்கொண்டு புறப்பட்ட இந்தச் சிலமாதங்களுக்குள்ளே உண்மையில் தம் க்ஷேமத்திற் கருத்துடைய பலர் ஏற்பட்டு விட்டனர். முதன் முதல் தம்மிடத்தில், பிரதிபலன் ஒருசிறிதும் கருதாது உண்மையன்பு காட்டியவன், ஒரு சாதாரண வண்டிக்காரன்—முத்தையன். அவன் அவருக்கு, அவர் அறியாமல் அளித்த அரைரூபா இன்னும் அவரிடத்தில் உள்ளது. அந்த அரைரூபாயை ஆயிரங்கோடியாக மதித்து அவர் பத்திரப் படுத்திவைத்துள்ளார். அரைரூபாயானாலும் அன்போடு கூடியதன்றோ? ஆதலால், அவர் அதை மிகவும் ஜாக்கிரதையாக வைத்திருந்தார். ஆயிரம் ஆயிரமாக நஷ்டமானாலும், இலட்சியம் செய்யாத அவர், இந்த அரை ரூபாயை இழக்க நேரிட்டால் மனமுடைந்து விடுவார்.

முத்தையன் தம்மிடம் காட்டிய அன்பைப்பற்றி நினைத்தபோது சத்திரத்தில் தாம் கண்ணுற்ற கொடிய சம்பவம் அவர் நினைவுக்கு வந்தது. ஒரு பாவமும் அறியாத அவன் அருமைக் குழந்தை—பால்மணம் மாறாப் பச்சைப் பாலகன்—அகால மரணத்துக்குள்ளானதையும், திடகாத்திர தேகியான முத்தையன் அக்குழவியை இழந்த அருந்துயரால் நெஞ்சுடைந்து மாண்டதையும் அவர் நினைத்தார். இவ்வகையான கொடுமைகள் இவ்வுலகில் நிகழ்வதைக் கண்ணாரக் கண்டபிறகு 'கடவுள் கருணைக்கடல்' என்றும், 'எல்லாம் ஒரு நன்மைகே' என்றும் கலைஞர்கள் கூறுவதை எவ்வாறு நம்புவது என்றெண்ணினர். அப்பொழுது முன்னம் ஒருமுறை ஏதோ ஒருபுத்தகத்திற் படித்த பின்வரும் பாடல்கள் அவர் ஞாபகத்திற்கு வந்தன:

1. * எல்லாமும் வல்லவர்தம் அருமக்கள் யாமானால்
பொல்லாத பெருந்துயரால் புழுங்கிமனம் வருந்துவதேன் ?
எல்லார்க்கும் பொதுவான எந்தைக்கே எந்துயரைச்
சொல்லியிரு கைவிரித்துச் சோகமுற்று நிற்கின்றோம் !

2. மண்ணாலே குயவன்செய் மட்பாண்டம் ‘ எனையிந்த
மண்ணாலே, கீழ்விழுந்தால் மண்ணாக ஏன்செய்தாய் ?
பண்ணாதே இவ்விதமாய் ; பாவி ’ எனப் பகர்வதில்லை
எண்ணானும் உரையானும் எள்ளளவும் அதற்கில்லையே !

3. வேகமொடு சுழல்கின்ற வினைவட்ட மதிற்பட்டே
ஊகமிலா அப்பாண்டம் உடைந்தழிந்து போமானால்
தேகமொடு சிந்தையது சேர்ந்துடைய எமைப்போல
ஆகமது மிகநொந்தே அகம்வருந்தல் தானுமில்லை.

4. எந்துயரம் பிறரின்பம் ஆகுமென்னும் அறிஞர்களே !
அந்தவுரை மெய்யேயாம் ; இறந்தழிந்து நாம்போனால்
எந்தமுடல் தனிலிருந்தே எண்ணிறந்த புழுக்களவை
வந்துதித்து வளர்கிறவால் ; மற்றதனால் எமக்கென்னே !

5. துயரதனால் உளம்வெம்பிச் சோருமெமக் கிங்கனநீர்
வயர்வகற்ற லழகழகி ததிசயமே ! துயரோட்டிப்
பயன்தருநற் போதனைகள் பலவெமக்குப் புகலவரும்
உயரறிவிற் சிறந்தீர்காள் ! உங்களுரை விசித்திரமே !

6. போங்களைய மாரேசற் போதனைகள் இவைபோதும் !
யாங்களுறும் ஒருதுயரை இரண்டாக்கும் உங்களுரை.
தாங்களுறு துன்பொளிக்கச் சாந்தமுகங் கொள்வேடர்
நீங்களென யாமறிந்தேம் நீக்குமின்நீர் இவ்வேடம் !

7. விரிந்துபரந் தோங்கியவிவ் வியனுலகில் வினையேம்யாம்
திரிந்தோடிப் பறக்குமொரு சிறுபூச்சி தனைப்போல்வேம்.
இருந்தாலும், உயிருடைய எவையுமெமைப் போற்பிறந்தே
இருந்துமிக வருந்திப்பின் இறந்தொழிவ தியல்பன்றோ ?

---

* These stanzas are a free rendering of a portion of Voltaire's famous poem 'The Lisbon Disaster'.

8. வல்லூறு தன்னிரையை வாயாற்கொன் றழித்திடுங்கால்
எல்லாமும் நல்லதென்றே அஃதெண்ண மிடுமேனும்
பொல்லாத கழுகொன்று பொருக்கெனவே யதையழிக்க,
வில்லாலே அக்கழுகை வேடனவன் கொல்கின்றான்.

9. அவ்வேடன் ஓர்அரவால் ஆருயிர்தான் இழக்கின்றான்;
அவ்வரவைக் கொள்கின்ற தந்தரமாய் ஒருகருடன்.
இவ்வகையே இவ்வுலகில் உயிருடைய எவ்வெவையும்
உய்வகையோர் சிறிதின்றி உழன்றேங்கி மாள்கிறவே!

10. இவைகளையாம் சிந்தித்தே ஆய்ந்துணரில் இவ்வுலகில்
எவையுமொரு நன்மைக்கே யென்றவவ் வின்னுரையை
அவையறியப் புகலறிஞர் அனைவருமா வஞ்சகரே!
நவையறுமோ னம்பூண்ட நாதனவன் நனிநல்லன்.

11. அவனமைத்தான் இப்பெரிய உலகினையும், இதிற்பெரிய
புவனங்கள் பலவினையும்; புந்தியினில் எமக்கெட்டா;
அவனேயிவ் வினைத்தினுக்கும் ஆணைபல வகுத்திட்டான்;
அவனாணை தனைமாற்ற அவனாலும் ஆகாதே!

12. பேதையர்காள்! வீணேநீர் பிதற்றுவதாற் பயனிலையே.
வாதையுற விதியிருந்தால், வாதையதைத் தீர்ப்பவரார்?
ஈதையறி கின்றிலிர்நீர் எந்தையருள் வானென்று
பேதைமையாற் புகலுவது பித்தர்மொழி மானுமன்றே!

இப் பாடல்களைச் சிந்தித்தபோது அன்பானந்தர் மனத்தில் ஒரு வகை ஒழிவு பிறந்தது. 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்பது உண்மைதான். ஆனால் 'அவனாணை தனைமாற்ற அவனாலும் ஆகாதே' என்பதும் உண்மையாகத்தானே யிருக்கவேண்டும்? இல்லாவிட்டால், இவ்வுலகில் இவ்வளவு துன்பம் நிறைந்திருக்கக் காரணம் இல்லை. ஒரு பாவமும் அறியா ஒரு பச்சைப் பசுங் குழவி மோட்டார் வண்டியில் அகப்பட்டு இறக்கிறது. சிறிது கருணையுள்ள ஒரு மனிதன் அக்குழந்தை மோட்டார் வண்டியில் அகப்படப்போவதைப் பார்ப்பானானால், உடனே ஓடோடியும் சென்று அக்குழந்தையை எடுத்துக் காப்பாற்றுவான். கேவலம், ஒருமனிதன் அவ்வாறு அதைக்

காப்பாற்ற முயல்வானுனல், கடவுள் அதைக் காப்பாற்ற முயலமாட்டாரா? அவர் எல்லாம் அறிந்தவர், எல்லாம் வல்லவர், எல்லையற்ற கருணையுடையவர்! குழந்தை மோட்டார் வண்டியில் அகப்படும் என்பதை அவர் அறிவார்; அது அவ்வாறு அகப்பட்டு இறக்காமல் காப்பாற்றுவதற்கும் அவர் வல்லமையுடையவர். கருணையே பூரணமாயுள்ளவர்! ஆயின், ஏன் அதைக் காப்பாற்ருமல் விடுகிருர்? 'அந்தக் குழந்தையின் விதி அவ்வளவுதான்' என்று சொல்கிறேம். அதாவதென்ன? கடவுள் எல்லாம் வல்லவராயிருந்தாலும் விதியைத் தடுக்க அவராலும் ஆகாது என்று முடிகிறது. விதியாவது என்ன? சட்டம்—காரண காரியத் தொடர்ச்சி.

இவ்வாறு சிந்தித்தபோது அவர் உணர்வு கலங்கியது. 'கடவுள் கருணசொரூபி; நமக்குத் துன்பந் தரக்கூடியது ஒன்றையும் செய்யமாட்டார். எல்லாம் நன்மையாகத்தான் முடியும்' என்று நினைப்பதில் ஓர் ஆறுதல் இருக்கிறது. அந்த ஆறுதலை இழந்துவிட அவருக்கு மனமில்லை. விதியை மாற்ற விமலனுலும் ஆகாதென்பது மெய்தான். இப்பொழுது கலாவதி இறந்துபோக விதியிருந்தது என்று வைத்துக்கொள்வோம், கடவுளாலும் அதை மாற்றமுடியாதென்ருல்—ஆ, மேல் நினைக்க நெஞ்சம் நடுங்குகிறதே! அந்த எண்ணம் அன்பானந்தருக்கு மிகவும் துன்பத்தைக் கொடுத்தது. 'நாம் இறப்புக்குரிய வயோதிக பருவத்திலிருக்கிறேம். கலாவதி வாழ்வுக்குரிய வாலிபப் பருவத்திலிருக்கிருள். ஆயினும் நமக்கு முன்னே அவள் இறந்து விடக்கூடுமன்றே? எமன் இளையரென்றும் முதியரென்றமா பார்த்துக்கொண்டிருக்கிருன்?' என்று எண்ணினர். அவர் உள்ளம் கலங்கியது. கலாவதியை உடனே பார்க்கவேண்டுமென்றஆவல் அவருக்கு உண்டானது. 'கலாவதி!' என்று கூப்பிட்டார்.

அடுத்த நிமிஷம் கலாவதி அவரெதிரே வந்து நின்று அன்போடு அவரை நோக்கி, "ஏன் கூப்பிட்டீர்கள்?" என்று கேட்டாள். அன்பானந்தர் அவளைக் கனிவுடன் நோக்கி, "இப்படி உட்கார்" என்று தம் படுக்கையைக் காட்டினர். கலாவதி அங்ஙனமே அவர் படுக்கையோரத்தில் உட்கார்ந்து 'என்ன விஷயம் சொல்லப்போகிருரோ' என்று ஆவலோடு எதிர்பார்த்தாள்.

அன்பானந்தர்— "கலாவதி! நீ எப்பொழுது மணிவாசகத்தைக் கலியாணம் செய்து கொள்ளப் போகிறாய்?"

கலாவதி— (சிறிது நாணி) "அதைப்பற்றி உங்களுக்கு இப்பொழுதென்ன கவலை?"

அன்பானந்தர்— "அம்மா, உங்கள் கலியாணத்தைக் கண்ணாற் பார்க்க எனக்குக் கிட்டுமோ, என்று யோசிக்கிறேன். வேறொன்றுமில்லை."

கலாவதி— "ஐயா, ஏன் பார்க்க முடியாது?"

அன்பானந்தர்— "எனக்கு உடம்பு முன்போலவில்லை, நாளுக்கு நாள் பலங் குறைகிறது. இன்னும் நான் அதிகநாள் உயிரோடிருப்பேனென்று நினைக்கவில்லை."

கலாவதி— "அப்படியெல்லாம் நினையாதீர்கள். உங்கள் உடம்புக்கு இப்பொழுது என்ன? நன்றாய்த்தான் இருக்கிறீர்கள். ஒவ்வொருவர் தொண்ணூறு, நூறு வயதளவும் உயிரோடில்லையா? நீங்கள் இன்னும் பல வருஷங்கள் உயிரோடிருப்பீர்கள். அஞ்சவேண்டாம்."

அன்பானந்தர்— "கலாவதி! இறப்பதற்கு நான் அஞ்சவில்லை. இறப்பும் பிறப்பும் இல்லாவிட்டால் உலகம் ஏது? அதை மாற்ற யாராலாகும்? அதைப்பற்றி நான் வருந்தவில்லை. நான் நிறைவேற்ற எண்ணியுள்ள ஒரு விஷயத்தை நிறைவேற்றும் முன் இறந்து விடுவேனோ என்று அஞ்சுகிறேன்."

கலாவதி— "அது என்ன விஷயம்? அதை உடனே நிறைவேற்றி விடுகிறது தானே. அதற்கு நான் எவ்வகையிலாவது உதவி செய்யக்கூடுமோனால் சந்தோஷத்தோடு செய்யத் தயாராயிருக்கிறேன்."

அன்பானந்தர்— "உன்னுடைய உதவி அவசியம் வேண்டியதுதான். ஆனால், உன் உதவியை எவ்வாறு கேட்பதென்று அஞ்சுகிறேன்."

கலாவதி— "ஏன்?"

அன்பானந்தர்— "கலாவதி! உன்னிடத்தில் உண்மையைக் கூறி யிருந்தால் இப்பொழுது உன் உதவியைக் கேட்க அஞ்ச மாட்டேன். ஆனல், நான் உண்மையைக் கூருமல் உன்னை வஞ்சித்து விட்டேன். வஞ்சம் என்பது இன்னதென்றறியாத உன்னை நான் வஞ்சித்து விட்டேன். அது என் மனத்தை வருத்துகிறது"

கலாவதி— வஞ்சித்து விட்டீர்களா! நீங்களா!! நான் நம்பமாட்டேன்."

அன்பானந்தர்— "நீ நம்புவாயென்று நான் எதிர்பார்க்கவில்லை. நீ எப்படி நம்பக்கூடும்? உன் மனத்தில் வஞ்ச மிருந்தாலல்லவா, பிறர் உன்னை வஞ்சிக்கக்கூடும் என்று நீ நம்பக்கூடும். பொய்யருக்கு உலகம் முழுதும் பொய்யர்கள் நிறைந்திருப்பதாகவும், தன்னயக்காரனுக்கு உலகமெல்லாம் தன்னயமாகவும் கொடியதாகவும் தோற்றுவது இயல்பு. உத்தமர்களுக்கு உலகமெல்லாம் உத்தமமென்ற இன்ப உணர்ச்சியே உண்டாகும். ஆதலால், நீ உன்னைப் போலவே என்னையும் நினைக்கிருய். அது தவறு. நான் வஞ்சகன். உன்னை ஏமாற்றி விட்டேன்."

கலாவதி— "எவ்வகையில்?"

அன்பானந்தர்— "அதைச் சொல்வதற்குத் தான் உன்னைக் கூப்பிட்டேன். உன் உதார குணத்தால் என் வஞ்சனையை மன்னிப்பாய் என்ற முழு நம்பிக்கையுடன் நான் அதை உனக்கு இப்பொழுது சொல்லத் துணிந்தேன். நீ இதுகாறும் எண்ணியிருந்தது போல நான் ஏழையுமல்லன், அநாதையுமல்லன். உனக்கு என் உண்மை நிலையை இதுகாறும் மறைத்த வஞ்சகத்தை நீ மன்னிக்கவேண்டும்."

கலாவதி— "இது தானு ஒரு வஞ்சகம்?"

அன்பானந்தர்— "இதைவிடப் பெரிய வஞ்சகம் என்ன வேண்டும்? ஏழை ஒருவன் பணக்காரனைப்போல் நடித்து ஊரார் பணத்தை வஞ்சித்துப் பெற்ருல், அவனை ராஜாங்கத்தார் மோசக்காரன் என்று தண்டித்துவிட வில்லையா? ஏழை ஒருவன் பணக்காரனைப்போல் நடிப்பது குற்றமானல், பணக்காரன் ஒருவன் ஏழையைப்போல் நடிப்பதும் குற்றமாகாதோ? ஏழைக்கொரு நியாயம், பணக்காரனுக்கு ஒரு நியாயமா?"

கலாவதி— "ஏழை ஒருவன் பணக்காரனைப போல் நடிப்பது குற்றமாகாது. அப்படி நடந்து அவன் பிறர் பொருளைப் பறிப்பானுனல் அதுதான் குற்றமாகும். பணக்காரனுய் நடிப்பவன் அக்குற்றத்தைச் செய்யலாம், செய்யக்கூடும். ஆனுல் ஏழையாய் நடிப்பவன் அக்குற்றத்தைச் செய்ய விரும்பினுலும், முடியாதே."

அன்பானந்தர்— "ஏன் முடியாது? ஏழை தனக்கு வேண்டிய பொருளை, பணக்காரவேஷம் கொண்டு வஞ்சித்துப் பெறுகிறுன். பணக்காரன் தனக்கு வேண்டிய பொருளை, ஏழைவேஷம் கொண்டு வஞ்சித்துப் பெறுகிறுன்."

கலாவதி— "பணக்காரன், தனக்குள்ள பணத்தால் எப்பொருளையும் பெறக்கூடும். அவ்வாருக அவன் பிறரை வஞ்சித்து ஒருபொருளைப் பெறவேண்டிய அவசியம் இல்லையே."

அன்பானந்தர்— "பணத்தால் எப்பொருளையும் பெறக் கூடுமோ ?"

கலாவதி— "ஓ, பெறக்கூடும். 'பணம் பத்துஞ்செய்யும்' என்பது பழமொழியல்லவா? அறிவால் உலகை அளந்தறிந்த திருவள்ளுவரும்,

'பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று'

என்று பொருளின் வல்லமையைப் புகழ்ந்து கூறியிருக்கிருரல்லவா ?

அன்பானந்தர்—"உண்மைதான். ஆயினும் பணத்தாற் கூடாத பொருளும் ஒன்றுண்டு."

கலாவதி— "என்ன அது?"

அன்பானந்தர்— "அன்பு."

கலாவதி— "ஏன் ? 'அன்பு' என்னும் அரசி பெற்ற 'அருள்' என்னும் குழந்தை, 'செல்வம்' என்னும் செவிலித்தாயால் வளரும் என்ற பொருள்பட, ஆசிரியர் திருவள்ளுவரே,

'அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு'

என்று கூறியிருக்கிறாரே."

அன்பானந்தர்:—"உண்மைதான். அவர் சொன்னது அருளே யொழிய அன்பல்லவே. அருளாவது கருணை அன்பு அதுவல்லவே."

கலாவதி:—"அல்லாவிட்டாலும், அருளின் அன்னை தானே அன்பு. ஆதலால் அருள் செல்வத்தால் உண்டு என்றபொழுது அன்பும் உண்டென்று கொள்ளவேண்டியது தானே."

அன்பானந்தர்:—"அப்படிக்கொள்வதிற்கில்லை. மேலும் திருவள்ளுவநாயனார் கருத்து அதுவானால்,

அருளும் அதன்குழவி அன்பும் பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு

என்று கூறியிருப்பார்.

கலாவதி:—"சரி, உங்கள் கருத்துப்படியே செல்வர்களுக்கு அன்பு கிட்டுவது அரிதென்று வைத்துக்கொள்ளுங்கள். அதைப் பெறுவதற்காகத் தாங்கள் இவ்வேழைக்கோலம் கொண்டீர்கள் போல் இருக்கிறது. இதில் என்ன குற்றம்?"

அன்பானந்தர்:—"இது வஞ்சனையல்லவா?"
கலாவதி:—"அல்ல."
அன்பானந்தர்:—"என்?"

கலாவதி:—"பிறர்பொருளை மாறுவேடந் தரித்துச் சென்று அவர்களை ஏமாற்றி அபகரிப்பது வஞ்சகமாகும். ஏனெனில், அதனால் அவர்களுக்குத் துன்பமுண்டு. அன்பை அபகரிப்பதால் அவ்வாறான துன்பம் ஒன்றும் இல்லை. முதலாவது, அன்பை அபகரிக்கவே முடியாது. அன்புடையவர்கள் தங்கள் அன்பிற்கு எல்லோரும் உரியவர்களாக வேண்டுமென்று விரும்புவார்களே யொழிய, பொருளைப் போல அது தங்களுக்கே உரிமையாயிருக்கவேண்டு மென்று விரும்புவார்களா."

அன்பானந்தர்:—"ஆனால், நான் ஏழைபோல் நடித்ததை நீ வஞ்சனையாகக் கருதமாட்டாயே ?"

கலாவதி:—"ஒருநாளும் கருதமாட்டேன்."

அன்பானந்தர்:—"மிகவும் சந்தோஷமாயிற்று. என் மனம் சமாதானமுற்றது. இனி, என் உண்மை வரலாற்றைச் சொல்கிறேன் கேள்" என்று தமது உண்மைநிலையை விவரமாகக் கூறினர்.

பரம ஏழையென்று தான் கருதியிருந்த அன்பானந்தர், உண்மையில் அரசச் செல்வம் வாய்ந்த கோடீஸ்வரர்—அன்பானந்தரோ என்பதை அறிந்தபோது கலாவதிக்குண்டான ஆச்சரியத்திற்கு ஓர் அளவில்லை. ஆனால், ஓர் அநாதையாய் அவரைக் கருதி அவரிடத்து அன்பு பாராட்டி வந்ததில் அவளுக்கிருந்த ஆனந்தம் இப்பொழுதில்லை. ஆயினும் அன்பானந்தருடைய உத்தமகுணத்தை நினைத்து ஒருவாறு திருப்தியுற்றாள்.

தம் உண்மைநிலையைக் கலாவதிக்கு உரைத்தபின், அன்பானந்தர் அவளை நோக்கி, "அம்மா, என்னை ஏழையாகக் கருதி ஆதரித்துவந்த உன் தயாள சிந்தையை நம்பி, உன்னை ஒன்று கேட்கப்போகிறேன். அதற்கு நீ சம்மதித்தால் எனக்கு அதைவிடச் சிறந்த உபகாரம் வேறொன்றுமில்லை; சம்மதியாவிட்டால் என்னைவிட துர்ப்பாக்கியன் வேறெவனுமில்லை. இதுகாறும் என் விருப்பங்களை விருப்போடு நிறைவேற்றிய நீ, இதையும் அவ்வாறே நிறைவேற்றுவாயென்று நம்புகிறேன்" என்றார்.

"அது என்ன ?" என்று வினவினள் கலாவதி.

"எனக்கு வேறு சந்ததியில்லாமையாலும், நீயே என்னை உன் தந்தையாகப் பாவித்திருக்கிறபடியாலும், பொன்னும் பொருளுமாகிய அருஞ்செல்வம் அனைத்தினும் சிறந்த பெருஞ்செல்வமாகிய உண்மையன்பை எனக்களித்தவள் நீயே யாதலாலும், என் செல்வத்துக்கு உன்னையே உரியளாக்கவேண்டுமென்பது என்னுடைய மனப் பூரணமான விருப்பம். இந்த என் விருப்பத்தை நிறைவேற்றி வைத்து என்னைத் திருப்தி செய்யும்படி வேண்டுகிறேன்." என்றார் அன்பானந்தர்.

கலாவதிக்கு இன்னது பதில் கூறுவதென்று தோற்றவில்லை. உண்மையில், அவ்வளவு திரண்ட செல்வத்தை அடைவதற்கு அவளுக்கு மனமில்லை. அமைதியாகத் தனக்கு நெருங்கியவர்களோடு அன்பாயும் இன்பமாகவும் காலங் கழிப்பதைவிட்டு, அளவிறந்த செல்வத்தைக் கட்டிக் காத்துவருவதில் என்ன பயன் என்று கருதினுள். ஆயினும், நெடுநேரம் யோசித்தபிறகு, அன்பானந்தர் அவ்வளவு தூரம் விரும்பிக் கேட்கும்போது, அவர் மனத்தை முறித்து மறுப்பது நியாயமல்லவென்று தீர்மானித்து அன்பானந்தரை நோக்கி, "உங்கள் விருப்பத்தை மறுக்க எனக்கு மனமில்லை. இஷ்டம் போல் செய்யுங்கள்" என்றுள்.

இதைக் கேட்கவும் அன்பானந்தருக்கு ஆனந்தம் பொங்கிற்று. "கலாவதி! உனக்குப் பலகோடி வந்தனம். நெடுநாளாய் என்மனத்திலிருந்த ஒரு பெருங்கவலை ஒழிந்தது. இன்றையதினமே 'உயில்' எழுதி என் வக்கீலுக்கு அனுப்பிவிடுகிறேன், இன்னும் ஒரு விஷயம் ஆகவேண்டியிருக்கிறது. அதாவது உன் விவாகம். அதுவும் முடிந்துவிட்டால் உன்னையும் உன் கணவனையும் உன் அன்னையையும் அழைத்துக் கொண்டு சென்னை செல்ல விரும்புகிறேன்" என்றுர்.

கலாவதி ஒன்றும் பதில் கூறவில்லை.

## XX

### காதலர்கள்

அன்றையதினம் மாலை நான்கு மணியிருக்கும். அன்பானந்தர் உலாவி வருவதற்காக வெளியே சென்றுர். கலாவதி, மாலையில் வருவதாகக் கூறிச்சென்ற மணிவாசகன் இன்னும் வரவில்லையே யென்று கருதி, அவனை ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். இயல்பாக அவளுக்கு அவனைப் பார்ப்பதிலுள்ள ஆவலோடு இன்று அதிக ஆவலிருந்தது. என்? அனேக முக்கியமான விஷயங்களை அவனுக்கு அறிவிக்க வேண்டியிருக்கிறது. அன்பானந்தருடைய உண்மை நிலை வெளிப்பட்டுவிட்டது! அளவிறந்த செல்வத்துக்கு அவள் அதிகாரியாய் விட்டாள்! இவற்றை யெல்லாம் அவனுக்குத் தெரிவிக்க வேண்டியது அவசியம் அல்லவா?

சுமார் அரைமணி நேரம் சென்றது. கலாவதி வீட்டு வாயிலுக்குச் சென்று தன் காதலன் வருகிருனு வென்று வழியை நோக்கினுள்; நெடுந்தூரம் வரையில் உற்று நோக்கினுள். அவன் வரவில்லை. 'என் இன்னும் வரவில்லை?' என்று தனக்குள் சொல்லிக்கொண்டு வீட்டுக்குள் திரும்பிவந்து கூடத்தில் சலிப்புடன் உட்கார்ந்தாள். வீட்டு வேலை ஒன்றிலும் அவள் மனம் செல்லவில்லை, பலபல யோசனைகளால் அவள் உள்ளம் குழம்பியது. தான் திரண்ட செல்வவதியாய் விட்டதைக் கேட்டால் மணிவாசகன் என்ன நினைப்பான் என்று அவள் சிந்தித்துக்கொண்டிருந்தபோது,

"என்ன, மிகவும் ஆழ்ந்த யோசனையிலிருக்கிருப் போலிருக்கிறதே?" என்று கேட்டுக்கொண்டு மணிவாசகன் அவள் எதிரே வந்து நின்ருன்.

காலாவதி திடுக்கிட்டு அவனை நோக்கினுள் ; முகமலர்ந்தாள்.

கலாவதி:—"பெரியவர் வந்தாரே, பார்க்கவில்லையோ?"

மணிவாசகம்:—"இல்லையே, உலாவப்போனுரோ?"

கலாவதி:—"ஆம். நீங்கள் வருவதற்கு என் இவ்வளவு நேரம்?"

மணிவாசகம்:—கொஞ்சம் நேரமாய் விட்டது, மன்னித்துக்கொள். சென்னையில் நான் உத்தியோகம் செய்தபொழுது, அரை மணி நேரம், கால்மணிநேரம் தாமதமாய்ப்போனுல், என் எஜமானர் அதைக் கவனிக்கிறதில்லை. நீ இவ்வளவு கண்டிப்பாயிருக்கிருயே!"

கலாவதி:—"உங்கள் எஜமானருக்கு நீங்கள் செய்யும் வேலையின் மேல் நோக்கமே யொழிய உங்கள்மேல் நோக்கமில்லை, ஆதலால் அவர் நீங்கள் குறித்தகாலங் கடந்து செல்வதைக் கவனிப்பதில்லை."

மணிவாசகம்:—"உனக்கு?"

கலாவதி:—"நீங்கள்தான் பிரதானம்."

மணிவாசகம்:—"அப்படியா? மிகவும் சந்தோஷம். கலாவதி, இந்த அன்பு ஒன்றே நம் வாழ்நாளை இன்ப வாழ் நாளாக்குவதற்குப்

போதுமானது. வேறு செல்வமும் வேண்டாம், சிறப்பும் வேண்டாம்; அல்லவா?"

கலாவதி:—"தடையென்ன? ஆனால் செல்வமும் சிறப்பும் கடவுளருளால் தாமாக வந்தால் அப்பொழுதுகூட வேண்டாமென்று விடுவீர்களோ?"

மணிவாசகம்:—"அப்பொழுது பார்த்துக்கொள்ளலாம். சிறப்பு வரக்கூடும். ஏனென்றால், என் உத்தியோகம் இயல்பாகவே மற்ற உத்தியோகங்களைவிடச் சிறந்தது. ஆனால் செல்வத்துக்கும் என் உத்தியோகத்துக்கும் வெகு தூரம். என் முயற்சியால் வறுமையில்லாமல் காலங்கழிப்பது ஒருகால் கூடுமேயன்றி, திரண்டசெல்வம் பெறுவது ஒருநாளுமில்லை."

கலாவதி:—"ஏன், அதிர்ஷடமிருந்தால் அதுவும்கிட்டுமல்லவா?"

மணிவாசகம்:—"அதிர்ஷ்டமாவது, துரதிர்ஷ்டமாவது! அப்படி அதிர்ஷ்டமிருந்தால் அது பிறவியிலேயே ஏற்படுமேயொழிய இடையில் வந்தா குதிக்கப்போகிறது? மேலும் அதிர்ஷ்டம் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொருவகையில் ஏற்படும். பொருட்செல்வம் ஒன்றுதானா அதிர்ஷ்டவசத்தால கிடைப்பது? கல்விச் செல்வம் கிடைப்பது ஓர் அதிர்ஷ்டமல்லவா?"

கலாவதி:—"அதிர்ஷ்டந்தான். ஆனால் அதனோடு பொருட்செல்வமுமிருப்பது நல்லதல்லவா?"

மணிவாசகம்:—"இருப்பது நல்லதுதான். ஆனால் இராது. 'கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசையென்றால்' முடியுமா? கல்வியிருந்தால் பொருளிராது, பொருளிருந்தால் கல்வியிராது, இது சகஜந்தானே."

கலாவதி:—"உண்மைதான். ஆனால், உங்களுக்கு இரண்டு செல்வமும் வாய்த்திருக்கிறதே, தெரியுமா?"

மணிவாசகம்:—"எப்படி?"

கலாவதி:—"கல்விக்கு நீங்கள்; பொருளுக்கு நான். உங்களுக்கும் எனக்கும் உடல் இரண்டேயொழிய உயிர் ஒன்றுதான்; ஆதலால் நீங்கள் இரண்டு செல்வமும் உடையவர்கள் என்பதில் தடையென்ன?"

மணிவாசகம்—" தடையில்லை, ஆனால் நான் உன்னை செல்வ வதியாகக் கருதவில்லை. என்னைவிட நீ செல்வவதிதான். இல்லை யென்று சொல்லவில்லை. ஆனால் ஊரார் செல்வவதி யென்று உன்னைச் சொல்லமாட்டார்களல்லவா ? "

கலாவதி—" இதுவரையிற் சொல்லவில்லை. இனிச் சொல் வார்கள். "

மணிவாசகம்—" எதனால் ? "

கலாவதி—"இன்று நான் திரண்டசெல்வத்துக்கு உரியவளாய் விட்டேன். "

மணிவாசகம்—" நீ சொல்வது விளங்கவில்லையே ?"

"இதோ விளக்கமாகச் சொல்கிறேன் " என்று கலாவதி அன்பா னந்தர் வரலாற்றையும், அவர் தம் ஆஸ்திக்குத் தன்னையே வாரிசாக நியமித்திருப்பதையும் கூறினாள்.

இதைக் கேட்டதும் மணிவாசகத்தின் முகம் மாறுபட்டது. அவன் மிகவும் விசனத்தோடு " இந்தப் பாழும் பணம் குறுக்கே வரவேண் டுமா ?" என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். அவன் முக வாட்டத்தைக் கண்ட கலாவதி தானும் முகம் வாடி, " என் உங்களுக்கு அதிற் பிரிய, மில்லையா? " என்று கேட்டாள்.

மணிவாசகம்—" பிரியமா ? ஒரு நாளுமில்லை."

கலாவதி—" ஆனால் சரி. எனக்கும் முதலிற் பிரியமில்லை. அன் பானந்தர் மனத்தைத் திருப்தி செய்வதற்காக அதை ஏற்றுக்கொண் டேன். இப்பொழுதுதான் என்ன கெட்டுவிட்டது? நாம் அந்தப் பண த்தை யெல்லாம் ஏழையெளியவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்து விடுவோம்."

மணிவாசகம்—" கொடுத்துவிடுவதா ! வேடிக்கைதான் ! கோடி க்கணக்கான பணத்தைப் பாத்திர மறிந்து பங்கிட்டுக் கொடுப்பதென் றால், ஒருவன் ஆயுள்காலம் போதாதே !"

அவன் குரல் கடோமாயிருந்தது. கலாவதி ஏதோ ஒருவகையான அச்சங் கொண்டவளாய் அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

மணிவாசகன்—" அது முடியாத காரியம். காலவதி, நீ நினைப்பது போல அது அவ்வளவு சுலபமான காரியமல்ல. மேலும், பணத்தோடு போகவில்லையே—அன்பானந்தர் மாளிகை, தோட்டம், நிலம், விலையுயர்ந்த படங்கள் முதலிய பலவகைப்பட்ட சாமான்கள், எல்லாம் உனக்கு உரிமையாய்விட்டன. ஆ, கலாவதி! என் அன்பானந்தரோடு சிநேகிதம் செய்தோமென்று என்மனம் இப்பொழுது வருந்துகிறது."

கலாவதி உடல் நடுங்கினுள். "தாங்கள் அவரோடு சிநேகிதம் செய்திராவிட்டால், நாம் இருவரும் சந்தித்திருக்கமாட்டோமே!" என்ருள்.

மணிவாசகம்—" சந்தித்திராவிட்டால், என்ன? நன்ருயிருந்திருக்கும். உன்னைக் காதலித்துப் பிரிவதைவிட காதலியாமலே இருந்திருந்தால் நல்ல தல்லவா? பணம்! நம் இருவரையும் பிரிக்க இந்தப் பாழும் பணமா குறுக்கே வரவேண்டும்! ஆ! என் வாழ்க்கையைப் பாழ்படுத்திவிட்டதே! தெரியாமலா பணத்தை 'ஆட்கொல்லி' என்கிருர்கள்!"

கலாவதியின் கண்களில் நீர் சுரந்தது. அவள் மிகவும் அமைதியாய் மணிவாசகனை நோக்கி, " என் இப்படிப் பேசுகிறீர்கள்? பிரிவைப் பற்றி என் உரைக்கிறீர்கள்? பணத்தினுல் நம்முடைய காதலுக்கு என்ன மாறுதல் ஏற்பட்டது? ஒன்று மில்லையே!" என்ருள்.

கொடிய மனே வேதனையினுல் முகம் வேறுபட்ட மணிவாசகன் அவளை உற்று நோக்கி, "ஒன்று மில்லையா? மாறுதல் ஒன்றுமில்லையா? கலாவதி, நன்ருய் யோசித்துப்பார். என் மூளையைத் தவிர வேறு ஆஸ்தி ஒரு சிறிதுமில்லாத பரம தரித்திரனுகிய நான், ஒரு கோடீஸ்வரியை விவாகஞ் செய்து கொள்வேனு? உன்னுடைய ஆதரவின் கீழ் நான் வாழ்ந்து வருவேனென்று நினைக்கிருயா? உன்னிடத்திலிருந்து பணம் பெற்றுக்கொள்வேனென்று நீ கருதுகிருயா? என் இயல்பை நீ அறிந்திருப்பாய். கலாவதி! நான் உன்னைக் காதலிக்

கிறேன்! என் மனப்பூர்வமாய்க் காதலிக்கிறேன்! ஆனால் ஒரு சாதாரண புலவர் மகளாய் உன்னைக்காதலிக்கிறேனே யொழிய, கோடீஸ்வரியாய் உன்னைக் காதலிக்கவில்லை. உன்னுடைய முன் நிலையில் உன்னை மகிழ்விப்பதற்காக நான் பல விஷயங்கள் செய்யக்கூடும்—ஆனால்-இப்பொழுதோ-உலகத்தில் மனிதர் வேண்டக்கூடிய —விரும்பக் கூடிய பொருள்கள் யாவும் உனக்கிருக்கின்றன!—நான்!—நான் உனக்கு அவசியமில்லை! நான் உனக்குச் செய்யக்கூடியது ஒன்றுமில்லை—ஒன்றாகூடவில்லை! நீ கோடீஸ்வரர் அன்பானந்தருடைய ஸ்வீகார புத்திரியாய் விட்டாய்! அவருடைய திரண்ட செல்வத்தைக் கொண்டு, நீ விரும்பினால், ஒரு இராஜ குமாரனை வேண்டுமானாலும் விவாகம் செய்துகொள்ளலாம். எனெனில், இக்காலத்தில், இராஜகுமாரர்களைக்கூட விலைக்கு வாங்கி விடலாம். உலகம் அப்படிப்பட்டது. ஆனால், நீ உலகத்தைச் சேர்ந்தவளல்ல என்பதை நான் அறிவேன். இருந்தாலும்—இனி — உலகம் உன்னைத் தன்னதாக்கிக்கொள்ளும். பொன், வெள்ளி, சம்பந்தப்பட்ட எதையும் உலகம் சும்மா விடுவதில்லை." என்றான்.

இதுகாறும் அவன் கூறியவற்றைப் பொறுமையாய்க் கேட்டுக் கொண்டிருந்த கலாவதி அமைதியோடு அவனை நோக்கி, "என்னை உலகம் தன்னதாக்கிக் கொள்வது எப்படி? நான் தங்களுக்கு சொந்தமானவளல்லவா? — தங்களால் உரிமைப்படுத்தப்பட்டவளல்லவா?—உலகத்துக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? தாங்கள் பேசுவது நியாயமாக வில்லை. இவ்விதமாகப் பேசாதீர்கள்; என் நெஞ்சம் புண்படுகிறது—" என்று கூறி வரும்போது மணிவாசகன் அவளை இடைமறித்து,

"உன் நெஞ்சம் புண்படும்! உண்மைதான். இப்பொழுது நான் பேசுவதால் உன் நெஞ்சம் புண்படுவது இயல்புதான். அன்பானந்தர் நமக்குக் குறுக்கே வாாமலிருந்தால்—" என்று கூறி மேற் கூறுவதற்கு முன், கலாவதி சிறிது கோபத்துடன் அவனை நோக்கிக் கையமர்த்தி,

"வேண்டாம். பாவம், அன்பே உருவான அந்தப் பெரியவரைப் பற்றித் தூஷணமாக மனத்திற் கூட நினையாதீர்கள். அவருடைய எண்ண மெல்லாம்—அவருடைய கனவெல்லாம்—நாமிருவரும் இன்ப

மாய் வாழவேண்டுமென்பது தான். அவர்தான் நம் இருவரையும் ஒன்ருய்க் கொண்டு வந்து விட்டவர். திரண்ட செல்வத்தின் உதவியால் நாம் உலகிற்குப் பல நன்மைகளைச் செய்வோம் என்ற நம்பிக்கையினுல்தான் — நிச்சயமான நம்பிக்கையினுல்தான் — அவர் தமது செல்வத்தை நமக்கு உரிமையாக்கினுர்" என்ருள்.

"நமக்கா!" என்ருன் மணிவாசகன்.

"ஆம், — நமக்குத்தான். அதில் என்ன சந்தேகம்? தங்களுக்கு மனைவியாய் விட்ட பிறகு, தாங்கள் வேரு, நான் வேரு? அன்பரே! கொஞ்சம் பொறுமையாப் பேசுங்கள், நிதானியுங்கள். தள்ளாத காலத்தில், தம்மோடு பழகியவர்களிடத்தில் தமது அன்பையெல்லாம் செலுத்திவரும் அவரைப் பற்றிப் பட்சமாய் நினையுங்கள். அவர் தமக்குப் பழக்கமானவர்கள் எவரையும் மறக்கவில்லை. அன்பினுல் என்னை உரிமைகொண்ட தங்களுக்கு நான் எதை மறைக்கப் போகிறேன்?— தங்களையன்றி எந்தக் காரியத்தை நான் செய்யப் போகிறேன்? வயோதிகர் எல்லாப் பொருளையும் எனக்கு உரிமையாக்கி விட்டு, அப்பொருளிலிருந்து இன்னின்னருக்கு இவ்வளவு கொடுக்கவேண்டு மென்று எனக்குத் தனியே ஒரு குறிப்பெழுதிக் கொடுத்திருக்கிருர். அதில் அவருக்கு நெருக்கமான நண்பர்கள் பேரெல்லாம் குறிக்கப்பட்டிருக்கின்றன. தங்களுடைய பெயரும் குறிக்கப்பட்டிருக்கிறது. தங்களுக்கு அவர் என்ன கொடுக்கும்படி எழுதியிருக்கின்ருர், தெரியுமா? என்னையும் எனக்குரிமையான எல்லாவற்றையும் தங்களுக்குக் கொடுத்துவிடும்படி எழுதியிருக்கிருர். கடிதத்தை வேண்டுமானுல் தங்களுக்குக் காட்டுகிறேன்." என்ருள் கலாவதி.

மணிவாசகன் மிகவும் துயரத்துடன் தொண்டைகம்ம, கலாவதியை நோக்கி, "அந்த நன்கொடையை நான் பெறச் சம்மதியேன். உலகத்தில் உள்ள அனைத்தினும் மேலாக நான் விரும்பும் நீயே அப்பொருளுடன் கிடைப்பதாயிருப்பினும், அந்த நன்கொடையை நான் பெறமாட்டேன். பாழும் பணம் நம்மைப் பிரித்துவிட்டது! கலாவதி, நம்மைப் பிரித்துவிட்டது மட்டுமல்ல, என் ஊக்கத்தையும் கெடுத்துவிட்டது. உன்னைப் பிரிந்து எத்தொழிலையும் செய்ய என்னுலாகாது. ஒருகால் நான் என் மானத்தைவிட்டு, எனது சுதந்தரத்தை

இழந்து, என் முயற்சி ஒரு சிறிதுமில்லாமல் கிடைக்கும் பொருளைப் பெற்றுக்கொள்ளச் சம்மதித்துப் பெற்றுக் கொண்டாலும், ஒரு நூலாசிரியனாகப் பெருமை பெறுவது முடியாது—பேரும் புகழும் எனக்குக் கிட்டாது; ஏனெனில், பொறுமையும் விடாமுயற்சியும் எனக்கு அவசியமில்லாமற் போய்விடும். உழைக்கவேண்டுமென்ற கடப்பாட்டை இழந்து விடுவேன். ஆதலால், இப்பொழுதுள்ள நிலைமையில், நான் இங்கு இனித் தாமதிப்பது நியாயமல்ல" என்றான்.

கலாவதியின் முகம் வேறுபட்டது; அவள் நெஞ்சம் துடித்தது. அவள் மிகவும் பரிதாபகரமான நோக்கத்துடன் மணிவாசகனை நோக்கி "அன்பரே, தாங்கள் சொல்வது என்ன? நம்முடைய பழக்கம் இதோடு முடியவேண்டியதுதானோ? மனத்தால் ஒன்றுபட்ட நாம், விவாகத்தாலும் ஒன்றுபடலாம் என்று எண்ணி நான் அகமகிழ்ந்திருந்ததெல்லாம் பயனில்லையா?" என்று வினவினாள்.

"கலாவதி! உன் எண்ணம் ஈடேறுவதற்கில்லையே என்று நான் வருந்துகிறேன். விவாகம் என்பதை நான் இனிக் கனவிலும் கருதுவதற்கில்லை. 'நான் ஓர் ஆண் மகன்' என்ற உணர்ச்சியுள்ளவரையில் 'விவாகம்' என்பதை நான் விரும்பமாட்டேன்" என்றான் மணிவாசகன்.

"நான் ஒரு பெண் மகள் என்ற நினைவையே தாங்கள் ஒழித்துவிட்டீர்கள் போலிருக்கிறது" என்று கூறினாள் கலாவதி.

மணிவாசகத்தின் முகம் சிறிது சாந்தமடைந்தது. அவன் கலாவதியை முகம்நோக்கி "கலாவதி! நீ ஒரு பெண் மகள் என்ற நினைவு எனக்கில்லாமலல்ல. ஒரு பெண் மகளாக நான் உன்னை இதுகாறும் காதலித்தேன்—இனியும் காதலிப்பேன். என் ஆயுள் உள்ளவரை என் உள்ளத்தில் உன்னைத் தவிர வேறு எந்தப் பெண் மகளும் இடம் பெறமாட்டாள். உன் உருவமே சதா என் சிந்தையிலிருக்கும். ஆனால், அரசி காலடியில் காத்திருக்கும் பிச்சைக்காரனைப் போல, உன் செல்வத்தால் நான் வாழச்சம்மதியேன். உன் கையிலிருந்து அரைக்காசு கூட நான் பெறமாட்டேன். நான் என் வழியே சென்று என்னாலான வேலையைச் செய்து ஜீவனம் செய்வேன். கூடுமானால்—நெடு

னாளாய்க் கனவு கண்டு கொண்டிருக்கும் — புகழ் என்பதையும் சம்பாதிப்பேன். அதைத் தவிர்த்து உன்னை விவாகம் செய்து கொள்ள உடன்பட மாட்டேன். அந்த நினைவை இனி ஒழித்து விடு ” என்றான்.

கலாவதிக்கு இன்னது சொல்வதென்று தோற்றவில்லை. அவள் கண்களினின்று நீர் தாரை தாரையாய் ஒழுகியது. மணிவாசகன் அவளை நோக்கி,

“ கண்மணி ! கலாவதி ! வருந்தாதே. ஏன் வருந்துகிறாய்? என்னைப்பற்றிய கவலை ஒரு சிறிதும் உனக்கு வேண்டாம். உன் பெருந்தன்மையான குணத்துக்கு ஏற்ற செல்வத்தை நீ பெற்றாய். எவ்வளவு உயர்ந்த செல்வ வாழ்க்கையும் உனக்குத் தகும். அரச பதவிக்கும் மேலான ஒரு பதவி இவ்வுலகில் இருக்குமானால் அதற்கும் நீ ஏற்றவளாவாய். உனக்குக் கிடைத்த செல்வத்தால் நீ மிகவும் இன்பமாக உன் வாழ்க்கையைச் செலுத்தலாம். செல்வத்தால் நீ அநேக நன்மைகளைச் செய்யலாம். ஆதலால், என்னைப் பற்றிய நினைவை ஒழித்து விட்டு, உனது செல்வ வாழ்க்கையை எவ்வாறு உலகத்தார்க்குப் பயன்படச் செய்யலாம் என்பதில் உன் கவனத்தைச் செலுத்து. வீணாக மனம் வருந்தாதே. நீ அழுவது என் ஆண்மையைக் கலக்குகிறது.” என்றான் மணிவாசகன்.

கலாவதிக்கு அடக்க முடியாத துயரம் பொங்கியதால் வாய் விட்டுப் பேசுவது கஷ்டமாயிருந்தது. மிகவும் சிரமத்துடன் “ தங்களையல்லாமல் எனக்கு வாழ்க்கையும் வேண்டியிருக்கிறதா? ” என்று கூறி முகத்தைக் கையால் மூடிக்கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள்.

அவள் கலங்குவதைக் கண்டு மணிவாசகன் மனங்குழம்பினான். இனி, அவளெதிரே யிருந்தால் தன் உறுதி கலைந்துவிடக்கூடுமென்றஞ்சி அவன் கலாவதியை நோக்கி, “ ஏன் சிறு குழந்தைபோல் அழுகிறாய்? மனதைத் தைரியப் படுத்திக்கொள். இப்பொழுது உனக்கு என்னைப் பிரிவது கஷ்டமாகத்தான் தோற்றும். சில நாள் என்னைப் பாராமலிருந்தால், அப்பால் எல்லாம் சரியாய்ப் போய்விடும். கடவுள் உன்னை ஆசீர்வதிப்பார். நான் சென்று வருகிறேன். என்னை மறந்து விடு ” என்று கூறி அவ்விடம் விட்டுச் சென்று விட்டான்.

முகத்தை மூடியிருந்த கையை எடுத்து விட்டு மணிவாசகன் நின்ற விடத்தை நோக்கினாள். கலாவதி அவனைக் காணவில்லை. காதிற் கேட்ட அவன் சொற்கள் கண்ணால் நிச்சயப்பட்டன. அவள் தலை சுழன்றது. மூர்ச்சையாகிக் கீழே விழுந்து விட்டாள்.

## XXI

### கலாவதி காணமற்போதல்

மனிதன் என்னுவதொன்று; கடவுள் பண்ணுவதொன்று. இது அனுபவசித்தமாக நாம் நாளும் காணக்கூடிய ஓர் உண்மை. 'ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்றாகும்; அன்றி அதுவரினும் வந்தெய்தும்' என்றார் ஆன்றோரும். சரித்திரமும் இதற்குச் சான்று பகரும். இராமன் மணிமுடி சூடுவானென்று எண்ணினார் தசரதர்; அவன் சடைமுடி சூடுவானாயினான். பரதன் பாராள்வானென்று எண்ணினாள் கைகேயி; அவன் பாதுகை சூடினான். கண்ணகியின் காற் சிலம்பை விற்றுக் கடைத்தேறலாம் என்று எண்ணினான் கோவலன்; அச்சிலம்பாலேயே அவன் உயிரிழந்தான். இவ்வாறே மனிதன் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கிறது.

கலாவதியை விட்டுப் பிரிந்த மணிவாசகன், அன்பானந்தர் கண்ணிற்படாமல் தன் ஜாகைக்குச் சென்றுவிட விரும்பினான். இப்பொழுதுள்ள நிலையில் அவன் அன்பானந்தரைப் பார்க்க விரும்பாதது இயல்பே. கலாவதியை விட்டுப் பிரிந்து வந்துவிட்ட போதிலும் அவள் உருவம் அவன் மனத்தைவிட்டகலவில்லை. தன் பிரிவிற் காற்றாது அவள் வருந்துவதை எண்ணி அவன் நெஞ்சங் கலங்கினான். அவளை இழந்துவிட அவனுக்கு உண்மையில் மனமில்லை. ஆயினும், அவளுடைய செல்வத்தில் வாழ்வதற்கு அவன் மனமொப்பவில்லை. அது தன்னுடைய ஆண்மைக்குக் குறைவென்று கருதினான். இவ்வாறு இருபாற்பட்டு இடையூசலாடும் நெஞ்சத்தோடு சிந்தாக்கிராந்தனாய்த் தலைகவிழ்ந்தவண்ணம் அவன் நெடுந்தூரஞ் சென்று விட்டான். அப்பொழுது அன்பானந்தர் அவன் எதிரே வந்துகொண்டிருந்தார். அவர் வருவதை அவன் கவனிக்கவில்லை. ஆனால், அவனை அவர் கவனித்தார். கவலைகொண்ட நெஞ்சத்தான்போல அவன் தலைகவிழ்ந்து

வருவதைக் கண்ட அன்பானந்தர் அவனை நெருங்கவும், "என்ன புலவரே! ஏதோ கவிகட்டுவதற்கு யோசனைபோலிருக்கிறது!" என்றார்.

மணிவாசகன் திடுக்கிட்டுத் தலைநிமிர்ந்து பார்த்தான். அன்பானந்தர் எதிர்நிற்பதைக் கண்டான். மீட்டும் தலைகுனிந்து மௌனமாய் நின்றான். 'ஏதோ விசேஷம் நடந்திருக்கிறது; கலாவதி அதில் கலந்திருக்கிறாள்; தனக்கும் அதில் பங்குண்டு' என்பதை அன்பானந்தர் நன்றாய் அறிந்துகொண்டார். ஆனால் அதை வெளிக்காட்டிக்கொள்ளாமல், "என் ஐயா, ஓர் ஏழைக் கிழவனென்றுதானே என் கேள்விக்கு உடனே பதில் சொல்லாமல் அலட்சியமாயிருக்கிறீர்? நான் கலாவதியைப்போல் ஓர் யௌவனப் பெண்பிள்ளையாயிருந்தால் இவ்வளவு அலட்சியமாயிருப்பீரா?" என்றார்.

மணிவாசகன் தலைநிமிர்ந்து அன்பானந்தரை உற்று நோக்கினான். அன்பானந்தர் சிரித்துக்கொண்டு, "என்ன இப்படிப் பார்க்கிறீரே! உம்முடைய நோக்கமே புதுவகையாக இருக்கிறதே! கலாவதியைப் பார்ப்பதுபோல் என்னைச் சற்றுப் பார்க்கக்கூடாதா?" என்றார். அன்பானந்தர்.

மணிவாசகன் பேச முயன்றான்; முடியவில்லை.

"கிழவனைக் குமாரனாக வேண்டுமானால் நினைத்துக்கொள்ளலாம். குமரியாகக்கூட நினைத்துக்கொள்ளக்கூடுமா என்று யோசிக்கிறீரோ?" என்றார் அன்பானந்தர்.

எரிந்து கொண்டிருக்கும் மணிவாசகன் நெஞ்சிற்கு அன்பானந்தர் பேசிய ஒவ்வொரு வார்த்தையும் நெய்சொரிவது போலிருந்தது. எரிச்சலும் கோபமும் அவன் மனத்தில் மூண்டெழுந்தன.

"நான் போகவேண்டும். தயவுசெய்து என்னை விட்டு விடுங்கள்" என்றான் மணிவாசகன்.

"கலாவதியைப் பார்த்தாய் விட்டதோ?" என்று வினவினார் அன்பானந்தர்.

மணிவாசகன் மிகவும் கோபத்துடன் "என் கலாவதியைப் பற்றியே இடைவிடாமல் பேசுகிறீர்கள்?" என்றான்.

"ஓஹோ! அப்படியா சமாச்சாரம். புருஷர்களுக்கு இது வழக்கந் தான். பிறபுருஷனை ஏறெடுத்துப் பார்த்தாலும் பதிவிரதாபங்கமாகும் என்று நாம் ஸ்திரீகளுக்குப் போதிப்பது வழக்கமாயினும், ஒரு ஸ்திரீ யைக் கலியாணம் செய்வதற்கு முன்னமேயே இன்னொரு ஸ்திரீமேல் கண்வைத்திருப்பது நமக்கு வழக்கந்தான்! நேற்று கரும்பாயிருந்த கலா வதி இன்று வேம்பாய் விட்டாளோ? நியாயந்தான்! வேறு எவளாவது ஒரு ரூபாவதி சிக்கியிருப்பாள்!" என்றார் அன்பானந்தர்.

இதைக் கேட்டபொழுது மணிவாசகனுக்கு உண்டான கோபம் இவ்வளவென்று சொல்லுந்தரமல்ல. ஆயினும் மிகவும் ஆண்மையோடு அதை அடக்கிக்கொண்டு அன்பானந்தரை உற்று நோக்கினன். அவர் சொல்வது உண்மையல்லவாயினும் யாரும் அப்படித்தான் நினைப்பார் களென்பதை அவன் உணர்ந்தான். தன் நெஞ்சறிய, கலாவதிமீது எவ் வளவு பரிசுத்தமான, மாசுமறுவற்ற, உண்மைக் காதல் தனக்குள்ளது என்பதையும் நினைத்தான். அப்ப்டிப்பட்ட உயர்ந்த மெய்க்காதல் நிறைவேறுவதற்கில்லையே என்றெண்ணி உள்ளம் உருகினன். அவன் கண்களில் ஈரந்த நீர் ஆருகப் பெருகிற்று. அதைக் காணவும் அன்பா னந்தர் நெஞ்சமும் உருகிற்று. அவர் தம்முடைய பரிகாசக் குரலை விட்டு மிகவும் அனுதாபத்தோடு மணிவாசகன் தோளிற் கை வைத்து, "ஐயா, ஏன் வருந்துகிறீர்? நான் விளையாட்டாகப் பேசிவிட்டேன், மன்னியும்" என்றார்.

"ஐயா, தாங்கள் பேசியதால் எனக்கு ஒரு வருத்தமுமில்லை. தங் களை மன்னிப்பதற்கு நான் யார்? எனக்குத் தாங்கள் சில கெடுதிகள் செய்துவிட்டீர்களென்பது உண்மை. ஆனால் அந்தக் கெடுதிகளுக்கு நான் தங்களை நோவதில் பயனில்லை. என்விதி என்னைத் தொடரு கிறது. யாரை நோவது?

'ஆவாரை யாரே அழிப்பார்? அதுவன்றிச்
சாவாரை யாரே தடுப்பார்?'

கற்பகத்தைச் சார்ந்தார்க்குக் காஞ்சிரங்காய் ஈந்ததேன்? முற்பவத்திற் செய்தவினை. தயவுசெய்து எனக்கு விடைகொடுங்கள்." என்றான் மணிவாசகன்.

" சிவபெருமான்போல சதா விடைமேலேயே இருக்கிறீரே! கொஞ்சம் நின்று சங்கதியைச் சொல்லும். நான் உமக்குச் செய்த சில கெடுதிகளை மறந்துவிட்டேன். அவைகளைமட்டும் சொல்லிவிட்டுப் போம்" என்றார் அன்பானந்தர்.

மணிவாசகன் மிகவும் வருத்தத்துடன் கலாவதியைக் கண்டதையும், அவள் மூலமாக அறிந்த விஷயங்களையும் சொன்னான். அவைகளைக் கேட்டபிறகு அன்பானந்தர் நகைத்து, "ஐயா, புலவரே! மெத்தப்படித்த நீரே இவ்வாறிருந்தால் பிறர் இருக்கக் கேட்பானேன்? உண்மையான காதல் என்பதிருந்தால் நீர் இவ்வாறு கருதுவீரா? உம்முடைய தந்தை உமக்கு ஏராளமான செல்வத்தை வைத்துவிட்டுப் போனால், அதில் உரிமைபாராட்டுவதற்கு நீர் பின்வாங்குவீரா? அல்லது அதை அவமானமாகக் கருதுவீரா? ஒரு ஸ்திரீயின் செல்வத்தில் உரிமைபாராட்டுவதுதானே உமக்கு அவமானமாகத் தோற்றுகிறது?" என்றார்.

" தன் உழைப்பில்லாமல் சுலபமாய்வரும் எந்தச் செல்வத்தையும் பெறுவதற்கு நான் ஒப்பமாட்டேன்" என்றான் மணிவாசகன்.

" உம்மை உழைக்கவேண்டாமென்று யார் சொன்னது? செல்வத்தைச் சும்மா பெற்றுக்கொள்ள வேண்டுமென்று யார் உம்மைக் கட்டாயப் படுத்துகிறார்கள்? கலாவதியின் செல்வத்தை நீர் பெற்றுக்கொள்ளமாட்டீர். அவளே அதைவைத்திருந்தால் அவளை விரும்பமாட்டீர்! இதென்ன ஐயா, போகாத ஊருக்கு வழியாயிருக்கிறதே!" என்றார் அன்பானந்தர்.

மணிவாசகன் ஒன்றும் பதில்கூற முடியாமல் மௌனமுற்றிருந்தான்.

" அவ்வளவு பதஷ்டமாக நீர் வந்துவிட்டீர். இந்நேரம் கலாவதி என்னவென்ன எல்லாம் எண்ணித் துன்பமுறுகிறாளோ? பாவம்! ஸ்திரீ ஜன்மம் கஷ்டஜன்மம் என்பது உண்மையாய்த் தானிருக்கிறது! ஆனால், அவர்கள் கஷ்டத்துக்கெல்லாம் காரணம் புருஷர்கள்தான்.

போனது போகட்டும்; வாரும் வீட்டுக்குப் போகலாம்" என்று கூறி அன்பானந்தர் மணிவாசகனைத் தம்முடன் வரும்படி அழைத்தார்.

"நான் வரமாட்டேன்" என்று கூறிவிட்டு, மணிவாசகன் அவரை நோக்கி, "தங்களுடைய திரண்டசெல்வத்தையெல்லாம் விட்டுவிட்டு இவ்வளவு காலம் ஏழைபோல் நடித்து வந்தீர்களே; இதுவரையில் தங்கள் செல்வத்தை யார்வசத்தில் ஒப்புவித்து வைத்திருந்தீர்கள்?"

அன்பானந்தர்:—"சென்னையில் ஒரு வக்கீல்வசம் ஒப்புவித்து வந்தேன்."

மணிவாசகன்:—"வக்கீலிடத்திலா? பேஷ்! அவர்கள் பண முழுங்கிகளாயிற்றே? பாலுக்குப் பூனையைக் காவல் வைத்தாற் போலத்தான்!"

அன்பானந்தர்:—"உண்மைதான். எல்லாரும் அப்படிப் பட்டவர்களாய் விடுவார்களா?"

மணிவாசகன்.—"என்? பூனையில் பால் குடியாத பூனை கூட இருக்கிறதா? அதுவும் சென்னையில் உள்ள வக்கீல்களுக்கா சொல்ல வேண்டும்! அவர்கள் இல்லாவிட்டால் ஊரில் வழக்கேது? 'கோதிக் கோதிக் குழல் முடிக்கும்' தாசிகளும்சரி, இந்த வக்கீல்களும் சரி. கட்சிக்காரர்களைச் சம்பாதிப்பதற்காக இவர்கள் செய்யும் தந்திரங்கள் கொஞ்சமா?"

அன்பானந்தர்:—"என்ன ஐயா, சற்றுமுன் கண்ணீர்விட்டழுதீர்! இப்பொழுது தடபுடலாய்ப் பேசுகிறீரே! பேஷ்! அதுதான் கலாவதி மகத்துவம் என்பது. அது கிடக்கட்டும்; வக்கீல்கள் தந்திரங்களை நீர் என்ன கண்டீர்? பேனாவும் புஸ்தகமுந்தானே நீர் கண்டது"

மணிவாசகன்:—"என்ன அப்படி அலட்சியமாகச் சொல்லிவிட்டீர்களே! பேனாவும் புஸ்தகமும் சாமானியமானவை என்று கருதி விட்டீர்கள்! வாளால் வெல்ல முடியாத உலகத்தைப் பேனாவால் வென்று விடலாம்; காணாதகாட்சிகளையெல்லாம் புஸ்தகங்களிற்

காணலாமே! ஊனக் கண்ணுக்கு உலகத்தின் மேற்புறந்தான் தெரியும். ‘புலமை’ என்ற ஞானக்கண்ணுக்கு உலகத்தின் உள்ளும் புறமும் எல்லாம் தெரியுமே!’’

அன்பானந்தர்:—“அப்படியா? ஆனால் நீர் ஞானக்கண்ணால் கண்ட வக்கீல் தந்திரங்கள் என்ன சொல்லும்; அனுபவத்திற்கு ஒத்திருக்கிறதா, பார்ப்போம்?’’

மணிவாசகன்:—“அவர்களிடத்தில் எந்த விஷயத்தைப் பற்றி யோசனை கேட்டாலும்,கோர்ட்டில் வழக்கிடும்படி புத்தி சொல்வார்கள். வழக்கிட்டால் வக்கீல் வைத்துத்தானே ஆகவேண்டும். ‘எனக்குப் பணம் கொடு’ என்று கேட்காமல் கேட்கிற வித்தை இது,’’

அன்பானந்தர்:—“தெரிந்தவர்கள் என்று தேடிவந்து யாராவது யோசனை கேட்டால் சொல்லித்தானே ஆகவேண்டும். அதுகூட குற்றமா?’’

மணிவாசகன்:—“குற்றமோ, குற்றமல்லவோ; அவர்கள் வழக்கம் இது. தேடிவந்தவர்களோடு மட்டுமா அமைந்து விடுகிறார்கள். தரகர்கள் சிலரை அந்தரங்கமாய் வைத்திருந்து அவர்களைக் கொண்டு கட்சிக்காரர்களைத் தேடி அழைத்துவரச் செய்கிறார்கள்.’’

அன்பானந்தர்:—“என்னமோ, பாவம்! பணத்தைக் கொட்டிப் படித்தார்கள். அவர்களுக்குப் பிழைப்பு வேண்டாமா?’’

மணிவாசகன்:—“பிழைக்கட்டும். வேண்டாமென்று சொல்லவில்லை. கிரமமாய்ப் பிழைக்கிறதுதானே?’’

அன்பானந்தர்:—“கிரமமாய்ப் பிழைக்காமல் என்ன செய்கிறார்கள்?’’

மணிவாசகன்:—“என்ன செய்கிறார்கள்? சிலர் கிரமமாய்ப் பிழைக்கிறார்கள். இல்லையென்று சொல்லவில்லை. ஆனால், பலர் செய்யும் அக்கிரமங்களுக்குக் கணக்கில்லை. வெவ்வேறு இரண்டு கோர்ட்டுகளில் நடக்கவேண்டிய வழக்குகளைப் பண ஆசையினால் ஏற்றுக்கொள்கிறார்கள். ஒரே சமயத்தில் இரண்டு கட்சிகாரர்களிட

யிருந்து பணம் வந்துவிடுகிறது. ஆனால் ஒருவர் ஒரே சமயத்தில் இரண்டு கோர்ட்டில் ஆஜராக முடியுமோ? அதெற்கென்ன செய்வது? ஒருகட்சிக்காரனுக்காக ஒரு கோர்ட்டில் ஆஜராய்விட்டு இன்னொரு கட்சிக்காரனைத் தவிக்கவிட்டுவிடுவது; இது எவ்வளவு யோக்கியமா யிருக்கிறது; யோசித்துப் பாருங்கள்."

அன்பானந்தர்:—"எல்லாரும் அப்படிச் செய்யமாட்டார்கள்."

மணிவாசகன்:—"அது தெரிந்த விஷயந்தான். ஒரு வகுப்பார் கெட்டவர்கள் என்றால், அதிற்சேர்ந்த ஒவ்வொருவரும் கெட்டவர் களாயிருப்பார்களென்று சொல்கிறது? சிலர் நல்லவர்களாகவுமிருக்க லாம். நான் சொல்கிறது பொதுவாகச் சொல்கிறேன்.

அன்பானந்தர்:—"அது உண்மைதான்."

மணிவாசகன்:—"சில வக்கீல்கள், ஸ்திரீகள் தங்களிடம் கட்சிக்காரராய் வந்தால், கொஞ்சமாவது ஆண்மை யென்பதில்லாமல் அவர்களைக் கெடுக்கமுயல்கிறார்கள். ஒரு ஸ்திரீ காலையில் தன் வக்கி லிடம் பேசலாமென்று வந்தால், 'இப்பொழுது பேச நேரமில்லை; சாயந்திரம் ஆறுமணிக்குவா' என்று அவளை அனுப்பிவிடுகிறது. வேறு விதியில்லை யென்று அவள் சாயந்திரம் வந்தால் இரவு ஏழுமணி எட்டு மணிவரையில் அவளைக் காக்கவைப்பது. அவள் சற்று முன்யோசனை யுள்ளவளாய் துணையாக யாரையாவது தன்னுடன் அழைத்துவந்தி ருந்தால், துணைவந்தவர்க்கு ஏதாவது வேலையிட்டு வெளியேஅனுப்பி விடுவது; பிறகு அவர்கள் செய்வது சொல்ல வேண்டியதில்லை. இப்படி மிருக சுபாவங்கள் உள்ள வக்கீல்களுமிருக்கிறார்கள். எல்லா நியாமும் படித்த இவர்கள் செய்யும் அக்கிரமங்களுக்குத் தண்டனை எந்தச் சட்ட புத்தகத்திலும் இல்லையெனினும், தெய்வசட்டத்தில் ஏற்ற தண்டனை விதித்திருக்கு மென்பதில் ஐயமில்லை."

அன்பானந்தர்:—"என்ன ஐயா, அதெற்கென்று அநியாயமாய் அவர்கள்மீது பழி சுமத்துகிறீர்?"

மணிவாசகன்:—"ஐயோ, இவ்வளவுதானா, உங்களுக்குத் தெரிந்தது? எனக்கு நேராய்த் தெரிந்த ஒருவிஷயத்தைச் சொல்லு

கிறேன், கேளுங்கள். வக்கீல் ஒருவரிடம் தாசி ஒருத்தி கட்சிக்காரியாக வந்தாள். சிறிது பழக்கமானபிறகு, வக்கீல் அந்தத் தாசிக்கு ஒரு கடிதமெழுதினர். அதில் அவளுடைய ஆசைநாயகன் மிகவும் கெட்டவனென்றும் அவனை நம்பியிருப்பதை விடத் தன்னை நாடி வந்துவிடுவது உசிதமென்றும் தெரிவித்திருந்தார். இக்கடிதத்தை வைத்துக்கொண்டு அத் தாசியும் அவள் ஆசைநாயகனும் வக்கீல்மீது வழக்குத் தொடுத்துவிட்டார்கள். பாவம்! வக்கீல் பட்டபாடு கொஞ்சமல்ல. கையிலிருந்த நாற்பதினயிரம் ஐம்பதினயிரத்தைச் செலவிட்டு, நியாயாதிபதி காலில் விழுந்து மன்றாடி 'மானத்தைக் காப்பாற்றவேண்டும்' என்று கெஞ்சிக்கூத்தாடி ஒருவாறு 'தலைதப்பினது தம்பிரான் புண்ணியம்' என்று ராஜதண்டனையிலிருந்து தப்பினர். தீர்ப்பும் ஆய்விட்டது. பிறர் வழக்கைத் தீர்க்க ஏற்பட்ட இந்த நீதிமான்களே இப்படி கோர்ட்டில் சிரிப்பாய் சிரித்தால், இதைவிட மானக்கேடு வேறு என்ன இருக்கிறது?"

அன்பானந்தர்:—"இரண்டொருவர் அப்படியிருக்கிறார்கள், உண்மைதான். ஆனல், என்னுடைய வக்கீல் மகாஉத்தமர்."

"சரி, இருக்கலாம். அதைப்பற்றி எனக்கொன்றும் ஆகவேண்டியதில்லை. நேரமாயிற்று. நான்போய் வருகிறேன்" என்று கூறி அன்பானந்தருடைய உத்தரவை எதிர்பாராமலே மணிவாசகன் போய்விட்டான். அன்பானந்தர் கலாவதி வீட்டை நாடிச்சென்றார். அன்பானந்தர், வீட்டினுள் சென்று கலாவதியைக் கூப்பிட்டார். ஒன்றும் பதில் வாராதது கண்டு, ஏதோ கைவேலையாயிருந்த கலாவதியின் அன்னை தன் [illegible]க் கூப்பிட்டாள். அதற்கும் பதில் இல்லை. இந்நேரத்தில் அ[illegible] எங்கே போகக்கூடும் என்று அன்பானந்தர் இங்குமங்கும் தேடினர். அவருக்கு ஏதோ ஒரு வகை அச்சம் உண்டாயிற்று. வீட்டிலும் வெளியிலும் சுற்றிச் சுற்றித் தேடிப்பார்த்தார். கலாவதி அகப்படவில்லை. அன்பானந்தருக்குக் கவலையுண்டாய்விட்டது. அவர் முகம் வியர்த்தது. 'கலாவதி காணுமற் போனது, காரணமில்லாமலல்ல, என்பதை அறிந்தார். பலவிடங்களிலும் தேடினர். அவள் அகப்படவில்லை.

# XXII

## உண்மையன்பின் உயர்வு

அன்பானந்தர், வீடெங்கும் தேடிப்பார்த்தார். கலாவதி அகப்பட வில்லை. அவர் நெஞ்சங் கலங்கியது. கலாவதியின் அன்னை கவலை யுற்றாளாயினும் அன்பானந்தருக்கிருந்த அவ்வளவு மனக்கலக்கம் அவ ளுக்கில்லை. எங்காவது போயிருப்பாள், வந்து விடுவாள், என்று எண்ணி யிருந்தாள். அன்பானந்தருக்கு அவ்வாறிருக்கக் கூடவில்லை. ஏனெ னில், கலாவதிக்கும் மணிவாசகனுக்கும் ஏதோ மன வேறுபாடு நேர்ந் திருக்கிறது என்பதை அவர் மணிவாசகன் மூலமாக அறிந்துள்ளார். காதலின் இயல்பையும் நன்கறிவார். அவ்வாறாக அவர் மனம் எங்ங னம் அமைதியுறும் !

“ஈசனே ! அன்பைத் தேடி அலைந்த எனக்கு, இறக்குந்தறுவாயி லாவது உண்மை யன்பாகிய பெருஞ் செல்வத்தைத் தந்தாயே என் றெண்ணி அகமகிழ்ந்திருந்தேனே ! என் மகிழ்ச்சியை மாற்றி விட் டாயே ! பிறவிக்குருடனுக்குக் கண் கொடுத்தது போல் எனக்குக் கலா வதியைக் கொடுத்தாய். இப்பொழுது திடீரென்று அவளை எங்கே கொண்டுபோய் ஒளித்து விட்டாய் !” என்று தனக்குள் புலம்பி வருந் திக் கொண்டிருந்தார் அன்பானந்தர். அப்பொழுது அவருடைய நாய் சூரன் அவரை நோக்கி ஓடி வந்தது. அது வரையில் அதைப்பற்றி நினையாதிருந்த அன்பானந்தர், இப்பொழுது அதைக் காணவும் ஆச் சரியப்பட்டு, ‘இது வரையில் இது எங்கிருந்தது? ஒருகால் கலாவதி இதை அழைத்துக்கொண்டு எங்கும் வெளியே போயிருந்தாளோ ? ஆயின் இப்பொழுது இதனுடன் திரும்பி வந்திருக்கவேண்டுமே’ என்று எண்ணி, சுற்றுமுற்றும் பார்த்தார். கலாவதியில்லை. அவர்காலை மோந்து, தன் வாலை யாட்டிச் சிறிது தூரம் வீட்டு வாயிலை நோக்கி ஓடித், திரும்பவும் அவர் எதிரே வந்து வாலை யாட்டி முகத்தைக் குழைத்து நின்றது. எங்கேயோ தம்மை வரும்படி அழைக்கிறது என்று அதன்குறிப்பை யறிந்து, அன்பானந்தர் அது எங்குச் சென்றா லும் அதைப்பின்பற்றிச் சென்று பார்ப்போம் என்று எழுந்தார்.

ரான், அவர் தன் குறிப்பை அறிந்துகொண்டது பற்றிச் சந்தோஷமுற்றதுபோல, வாலையாட்டிக் குதித்துக்கொண்டு அவருக்கு முன் ஓடிற்று. அன்பானந்தர் அதைப் பின் தொடர்ந்து சென்றார்.

கலாவதியின் வீட்டுக்குச் சிறிது தூரத்தே ஒரு சிறு பூந்தோட்டமிருந்தது. கலாவதி பூஜைக்குப் பூக்கொய்வதற்காக ஒவ்வொரு நாளும் அத்தோட்டத்துக்குச் செல்வதுண்டு. அந்தத் தோட்டத்திற்கே ஞரான் இப்பொழுது நமது அன்பானந்தரை அழைத்துச் சென்றது. அன்பானந்தர் ஞரானைப் பின் பற்றிச் சென்று அத்தோட்டத்துள் நுழைந்தார். ஆகாயத்திற் சந்திரன் பிரகாசித்தது. நிலவொளியில் அப் பூந்தோட்டம் அழகாய் விளங்கியது. மெல்லிய இனிய காற்றில் அங்கிருந்த மலர் மரங்களும் மலர்ச் செடிகளும் மெல்லென்று அசைந்தன. மல்லிகை, இருவாட்சி முதலிய மலர் வகைகள் பலவும் தங்கள் நறுமணத்தைக் கலந்து வீசின.

ஞரான் ஒரு மல்லிகைச் செடியண்டை சென்று நின்றது. அன்பானந்தரும் நின்றார். அங்கே, பூதேவி மடியிற் சீதேவி கிடப்பது போலக் கலாவதி படுத்துக் கிடந்தாள். அவள் அழகிய முகம் ஆகாய சந்திரனொளியில், பூலோக சந்திரன் போலப் பிரகாசித்தது. குவிந்த குவளை மலர்களைப்போல் அவள் கண்கள் மூடியிருந்தன.

அன்பானந்தர் அவளை அந்நிலையிற் காணவும் அச்சமும், ஆச்சரியமும், ஆனந்தமும் ஒருங்கெய்தினார். காணாமற் போன கலாவதியைக்கண்டு விட்டோமென்று ஆனந்தங் கொண்டார். இந்நேரத்தில் இவ்விடத்தில் இவ்வாறு படுத்திருக்கக்காரணமென்ன வென்றெண்ணி ஆச்சரிய முற்றார். செடிகொடி[illegible]ர்ந்த தோட்ட மாயிற்றே; காலமும் இராக்காலமாயிற்றே; ஏதாவ[illegible]ஷஜந்துக்களால் தீண்டப்பட்டு மூர்ச்சையுற்றிருக்கிறாளோ என்று அச்சமுற்றார். இறந்து போயிருப்பாளோ என்று ஐயுற்று அஞ்சுவதற்கு அவர் மனம் அஞ்சிற்று. 'ஈசனே, நீயே துணை' என்று சொல்லிக்கொண்டு அவர் குனிந்து உடம்பைத் தொட்டுப் பார்த்தார். உடம்பிற் சூடிருந்தது. நாசியிற் கைவைத்துப் பார்த்தார். சுவாசம் வந்து போய்க்கொண்டிருந்தது. அவர் மனம் அமைதியுற்றது. அவளைத் தட்டி எழுப்பமுயன்றார்; முடியவில்லை.

'கலாவதி! கலாவதி!!' என்று இரண்டு மூன்று முறை கூப்பிட்டார். அப்பொழுதுதான் கலாவதி 'என், என் அன்பா!' என்று ஆவலோடு கூறித் தன் மலர்க் கண்களைத் திறந்தாள். 'எழுந்திரு அம்மா, கலாவதி! எழுந்திரு' என்றார் அன்பானந்தர். கலாவதி ஒன்றும் பதில் கூறாமல் அவரை இமைகொட்டாமல் உற்று நோக்கினாள். 'என் அம்மா, என்னை இப்படி உற்றுப் பார்க்கிறாய்?' என்றார் அன்பானந்தர். கலாவதி ஒன்றும் பதில் உரையாமல் இன்னமும் அவரை உற்றுப் பார்த்தபடியே இருந்தாள். அன்பானந்தர் மிகவும் மனமிளகி "எழுந்திரு. கலாவதி, எழுந்து வா, வீட்டுக்குப் போகலாம். இப்படி இந்த மண் தரையில் படுத்திருக்கலாமா?" என்றார்.

கலாவதி எழுந்து உட்கார்ந்து, அன்பானந்தர் முகத்தை உற்று நோக்கியபடியே கொல்லென்று நகைத்தாள். அன்பானந்தருக்கு அச்சம் அதிகமாயிற்று; அவர் கண்களில் நீர் அரும்பியது. "இந்நேரத்தில் இங்கே தனியாக வந்து தரையிற் படுத்திருக்கலாமா? வா, அம்மா, வீட்டுக்குப் போகலாம்" என்றார்.

"என்ன, வீட்டுக்கா?" என்றாள் கலாவதி.

"ஆம், அம்மா. இந்நேரத்தில் இங்கென்ன வேலை. வா, வீட்டுக்குப் போகலாம்" என்றார் அன்பானந்தர்.

உடனே கலாவதி தன் இனிய குரலில் வாய் விட்டுப் பாடத் தொடங்கிவிட்டாள்.

"வீட்டுக் கடங்கா விளையாட்டுப் பிள்ளையெனத்
தேட்டுக் கடங்காத தீமை[illegible]லாந் துயரம்
பாட்டுக் கடங்காநின் பத்[illegible]டிப் புகழ்போல்
எட்டுக் கடங்கா தெழுத்தறியும் பெருமானே"

கலாவதி தன் குரல் எட்டியமட்டும் வாய்விட்டு இங்ஙனம் பாடியதைக் கேட்கவும் அன்பானந்தர் உள்ளம் நடுங்கியது. "கலாவதி, நான் சொல்வது கேட்கவில்லையா? இந்நேரத்தில் தனியேவந்து இங்கே இருப்பது நன்றாய் இல்லை. வா, போகலாம்" என்றார்.

"போக மாட்டேன் பிறரிடத்தே
பொய்யிற் கிடந்து புலர்ந்து மனம்
வேக மாட்டேன் பிறிதொன்றும்
விரும்ப மாட்டேன் பொய்யுலகன்
ஆக மாட்டேன் அரசேயென்
அப்பா வென்றன் ஐயாநான்
சாக மாட்டேன் உனைப்பிரிந்தால்
தரிக்க மாட்டேன் கண்டாயே"

என்று பாடினாள் கலாவதி.

அன்பானந்தர் கலகலவென்று கண்ணீர் உகுத்தார். அதைக் கண்ட கலாவதி கைகொட்டி, "ஏன் அழுகிறீர்? என்னைப் பாரும், என்ன சந்தோஷமாயிருக்கிறேன் என் நாயகனைப் பாரும். என்ன சந்தோஷமாயிருக்கிறார்! நாங்கள் இருவரும் உல்லாசமாய் இந்த நந்த வனத்திலேயே இருப்போம். என் நாயகர் அழகைப் பாரும். ஆறுமுக வடிவேலர் போலிருக்கிறார்.

'ஆறு முகங்களிற் புன்சிரிப்பும்—இரண்
டாறு புயந்திக ழற்புதமும்
வீறு பரஞ்சுடர் வண்ணமுமோர்—திரு
மேனியும் பாருங்கள் வெள்வளை காள்!'

அவரும் நானும் ஆனந்தமாய்ப் படுத்துறங்கினேமே என் ஐயா என்னை எழுப்பினீர்?.........ஓ! ஓ!.........அவரைக் காணேமே!......ஆ! நான் என்னசெய்வேன்!" என்று அழத்தொடங்கினாள்.

அன்பானந்தர் தம் கண்ணீ[illegible] துடைத்துக் கொண்டு கலாவதியை நோக்கி, "அம்மா, ஏன் அழுகிறாய்?" என்று கேட்டார்.

"அவரை எங்கேயோ அனுப்புவிட்டீரே!" என்றாள் கலாவதி.

"யாரை?" என்று கேட்டார் அன்பானந்தர்.

"அவர்—என் நாயகர்—என்—மணவாளர்—என் மணிவாசகர்.

‘ என்றுயிர் காதலனை யான்கண்டணைதற்கே
உன்றுவ தென்னை கண்டாய்—நெஞ்சே !
உன்றுவ தென்னை கண்டாய் ? ’

‘ நான்பெற்ற செல்வத்தை நான்பற்றிக் கொள்ளற்கே
என்பற்றுவா யென்பதார்—நெஞ்சே !
என்பற்றுவா யென்பதார் ? ’

‘ வல்லவ ரெல்லாமும் வல்லானைக் காணற்கே
நல்லநா ளெண்ணிய நாள்—நெஞ்சே !
நல்லநா ளெண்ணிய நாள் ! ,”

என்று கலாவதி அடுக்கடுக்காய்ப் பாடத்தொடங்கினாள்.

அன்பானந்தர் கலாவதியின் காதலைப் பற்றி மிகவும் இரக்கத்துடன், “ கலாவதி ! இந்நேரத்தில் இவ்விடத்தில் நீ இவ்வாறெல்லாம் பாடுவது நன்றாயில்லை. யாராவது பார்த்தால் என்ன நினைப்பார்கள் ?” என்றார்.

“ யார் என்ன நினைத்தாலும் எனக்கென்ன ? என் காதலர்தான் எனக்குப் பிரதானம். பிறரெல்லாம் எக்கேடு கெட்டால் எனக்காவதென்ன ? அவர்கள் எல்லாரும் பைத்தியக்காரர்கள். பொன்னையும் பொருளையும், பேரையும் சீரையும் தேடித்திரிகிறார்கள். பொன்னும் பொருளும் நிலைக்குமா ? பேரும் சீரும் பலன் தருமா ? என்றும் அழியாது நிற்பது என்காதல்தான். மற்றவையெல்லாம் மாறிவிடும்; நிலைத்து நிற்காது.

‘ நில்லாதவற்றை நிலையி[illegible]ன்றுணரும்
புல்லறி வாண்மை கடை !’

நீர் ஏன் இங்கே வந்தீர் ? நானும் என் நாயகரும் ஏகாந்தமாயிருந்து பேரானந்த முற்றிருக்கும்போது நீர் குறுக்கே வரலாமா ? ஐயோ ........உம்மால் என்னோடிருந்த என் காதலர் எங்கோ போய்விட்டாரே ! நான் என்ன செய்வேன் !......நாதா !........ காணேனே அவரை !........” என்று கலாவதி புலம்பத் தொடங்கினாள்.

அன்பானந்தர் மனமொடிந்து "தெய்வமே! உன் திருக்கூத்தா இது! ஓர் அற்பகாரணத்தால் எவ்வளவு சிறந்த அறிவையெல்லாம் நிலை கலங்கச் செய்துவிட்டாய். அந்தோ! இதற்கெல்லாம் நானன்றோ காரணமாய்விட்டேன். கிடைத்தற்கரிய உண்மையன்பைப் பெறமுயன்றேன்; பெற்றேன். அதோடு நின்று விடாமல், எண்ணி மகிழ்வதற்கேற்றதே யன்றி, கண்டு மகிழ்வதற்கு முடியாத உண்மைக் காதல் என்பதையும் கண்டு மகிழமுயன்றேன். அதன் பலன்தானோ இது!' என்று தம்மைத் தாமே நொந்து கொண்டு கலாவதியை நோக்கி, "அம்மா, நீ இவ்வாறெல்லாம் புலம்புவது நன்றாயில்லை. நீ எல்லாம் அறிந்தவள். என்ன நேர்ந்தாலும் நிதானம் தவறலாமா?" என்றார்.

கலாவதி அவரை உறுத்து நோக்கி, "என்ன, நிதானம் தவறுவதா? எனக்கா? எனக்கும் பைத்தியம் பிடித்துவிட்டதென்றா நினைக்கிறீர்?" என்று கூறிச் சிரித்து, "உலகம் அப்படித்தான். தன்னைப் போல் இல்லாதவர்கள் பைத்தியக்காரர்கள் என்று ஒவ்வொருவரும் எண்ணுகிறார்கள். என்காதலே எனக்குப் பெரிதாயிருந்தால் நான் பைத்தியக்காரி. பேஷ்! அதிருக்கட்டும்—நான் எப்படி யிருந்தால் உமக்கென்ன? நீர் யார், எனக்கும் என்காதலருக்கும் குறுக்கே வருவதற்கு?" என்றாள்.

"கலாவதி, நான் யாரென்று உனக்குத் தெரியவில்லையா? உன் க்ஷேமத்திலேயே உயிர்வைத்திருக்கும் அன்பானந்தன் அல்லவா? நான் உன் வீட்டை விட்டுப்போகிறேன் என்றபோது, என்னைப் போகவொட்டாமல் தடுத்தாயே, அதை யெல்லாம் மறந்துவிட்டாயா?" என்றார் அன்பானந்தர்.

கலாவதி அவரைச் சிறிது உற[illegible]நோக்கி யிருந்தாள். பிறகு, "நான் மறந்துவிட்டேனா என்றா கேட்கிறீர்? மறப்பேனா?" என்று கூறி,

'நான்மறந்தே னெனினுமெனைத் தான்மறவா னெனது
நாயகனென் றுடுகின்றே னெனினுமிது வரையும்
வான்மறந்தேன் வானவரை மறந்தேன் மாலயனை
மறந்தேனம் முருத்திரரை மறந்தேனென் னுடைய

வூன்மறந்தே னுயிர்மறந்தே னுணர்ச்சியெலா மறந்தே
 னுலகமெலா மறந்தேனிங் குன்னைமறந் தறியேன்
பான்மறந்த குழவியைப்போல் பாரேலிங் கெனையே
 பரிந்துநின தருட்சோதி புரிந்துமகிழ்ந் தருளே"

என்ற பாடலைப் பாடினன்.

"அம்மா, கலாவதி! உன் அன்னை உன்னைத் தேடிக்கொண்டிருப்பாள். வா, வீட்டுக்குப் போகலாம்" என்றார் அன்பானந்தர்.

கலாவதி தலையை அசைத்து, "மாட்டேன். வரமாட்டேன் என் அன்னை தேடினால் எனக் கென்ன? எனது மணிவாசகரைத் தேடிக் கண்டு பிடியாமல் நான் வருவேனோ?" என்றாள்.

அன்பானந்தர் சிறிது யோசித்தார். எப்படியாவது இவளை வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போவது அவசியம் என்று தீர்மானித்து, "கலாவதி, மணிவாசகன் வீட்டிலிருக்கிறான் நீ தேடுவானேன்?" என்றார்.

"என் மணிவாசகரா?"
"ஆம்" என்றார் அன்பானந்தர்.

"ஆனால், இதோ வருகிறேன். கொஞ்சம் இருங்கள். நான் என்னை அலங்கரித்துக்கொண்டு, என் நாயகனுக்கும் பூக்கொய்து வருகிறேன்" என்று கூறிக் கலாவதி அன்பானந்தரை விட்டு ஓடி, செடிகளில் பூத்திருந்த மலர்களையும், தழைத்திருந்த தழைகளையும் பறித்துத் தன் கூந்தலில், நிறையச் சூடிக்கொண்டு, மிகுந்தவற்றை மடியிற் கட்டிக்கொண்டு வந்து அன்பான[illegible]ரை நோக்கி, "வாருங்கள், போகலாம். என் மணிவாசகர் பார்[illegible]" என்றாள்.

அன்பானந்தர் அவள் கோலத்தைக் கண்டு உடல் நடுங்கினார். ஆயினும், வீட்டுக்கு வருவதற் கிசைந்தாளே, அதுவே போதும் என்று எண்ணி அவளை அழைத்துக்கொண்டு சென்றார்.

வீட்டை அடைந்ததும் அன்னை மகளைக் கண்டு, "எங்கம்மா போயிருந்தாய்?" என்று கேட்டாள்.

"என் மணிவாசகர் எங்கே ?" என்றாள் கலாவதி.

அப்பொழுதுதான் அவள் அன்னை தன் மகளிடத்து உண்டாயிருக்கும் மாறுதலைக் கவனித்தாள்; அவள் நூதனக் கோலத்தையும் கண்டாள்; அன்பானந்தர் முகத்தை நோக்கினாள்; அவர் முகவாட்டத்தையும் அவர் செய்த குறிப்பையும் கொண்டு ஏதோவிபரீதம் நேர்ந்திருக்கிறதென்று உணர்ந்தாள்: 'ஒருகால் நம் மகளுக்குப் பைத்தியம் பிடித்திருக்குமோ' என்ற சந்தேகமும் அவளுக்கு உண்டாயிற்று. ஆதலால், கலாவதி கேள்விக்கு ஒன்றும் விடை சொல்லாது நின்றாள்.

கலாவதி அன்பானந்தரை நோக்கி, "என் மணிவாசகர் எங்கே?" என்று மீட்டுங் கேட்டாள்.

"இதோ வருவார். கொஞ்சம் பொறு" என்றார் அன்பானந்தர்.

அன்னை மகளை நோக்கி, "அம்மா, மத்தியானம் சாப்பிட்டதோடு இருக்கிறாயே. வயிற்றைப் பசிக்கும் கொஞ்சம் சாப்பிடு, வா" என்றாள்.

"சாப்பிடவா ! என் நாயகர் வருவதற்கு முன்னா? நான் மாட்டேன்" என்றாள் கலாவதி.

அன்பானந்தர் கலாவதியை நோக்கி, "நீ சொல்வது சரிதான். நாயகர் வருவதற்கு முன் சாப்பிடலாமா ? நீ உன் படுக்கையறைக்குச் சென்று சற்றுப் படுத்திரு. இன்னும் சற்றுநேரத்திற்கெல்லாம் உன் நாயகர் வருவார். வந்ததும் நான் உன்னைக் கூப்பிடுகிறேன்" என்றார்.

"சரி, அப்படியே போய்ப்[illegible]துக்கொள்கிறேன். அவர் வந்தவுடன் எனக்குத் தெரிவிக்கிறீர்க[illegible]?" என்று கேட்டாள் கலாவதி.

"ஓ, உடனே தெரிவிக்கிறேன்" என்றார் அன்பானந்தர்.

'நல்லது' என்று கலாவதி தன் படுக்கையறையிற் சென்று படுத்துவிட்டாள். மணிவாசகன் பிரிவால் அறிவு சிதறுவதற்கு முன், அவள் கொடிய மனவேதனைக்கு ஆளாயிருந்தபடியால் மிகவும் களைப்புற்றிருந்

தாள். ஆயினும், அறிவு நிலைகலங்கியதால், அக்களைப்பை இதுகாறும் உணராதிருந்தாள். இப்பொழுது அன்பானந்தரால் படுக்கையைப் பற்றி நினைப்பூட்டப் பட்டவுடன், அவள் மறந்திருந்த களைப்பு சிறிது அவளுக்குத் தோற்றியது. அதனால்தான் அன்பானந்தர் கூறிய ஆலோசனைக்கு இணங்கி அவள் தன் படுக்கைக்குச் சென்றாள்.

அவள் அங்ஙனம் சென்றபிறகு, அன்பானந்தர் மிகவும் துயரத்துடன் கலாவதியின் அன்னையை நோக்கி, "அம்மா, நான் மிகவும் துர்ப்பாக்கியன். என் காலத்தையெல்லாம், பொருள் தேடுவதிலேயே செலவழித்து வீணாக்கிவிட்டேன். ஏதோ, கடவுள் கிருபையால் முடிவுகாலத்தில் கொஞ்சம் நல்லறிவுபிறந்து, உண்மை அன்பு என்ற அந்த அழியாப்பொருளைத் தேடிப் புறப்பட்டேன். புண்ணியவசத்தால் கலாவதியைக் கண்டேன். அவள் என்னிடத்திற் பூரண அன்பு காட்டிவந்தாள். தேடியடைதற்கரிய அந்த அன்பு என்னும் அழியாச் செல்வத்தை அவளிடம் பெற்று மகிழ்ந்திருந்தேன். ஆனால், என் மகிழ்ச்சி தெய்வத்துக்குப் பொறுக்கவில்லைபோலிருக்கிறது. என்றும் ஒரே நிலைமையுடையவராகிய கடவுள் தம் ஒருவரிடத்துக் காட்டும் அன்புதான் நிலையுடையதென்று காட்டுவதற்காகவே, ஒருசமயம் என்னை இக்கஷ்டத்திற் குள்ளாக்கியிருக்கிறாரோ, என்னமோ அறியேன். கலாவதியின் அறிவு ஸ்திரப்படும்வரையில் நான் எவ்வாறு காலத்தைக் கடத்தப்போகிறேன்" என்றார்.

"ஐயோ! ஆனால் நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? கலாவதிக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதென்றா நினைக்கிறீர்கள்?" என்று கேட்டாள் கலாவதியின் அன்னை.

அன்பானந்தர் மிகவும் விசனத்துடன், "அதில் சந்தேகமா? அவள் அறிவு கலங்கிவிட்டது [illegible]யத் தெரியவில்லையா? எந்நேரத்தில் மணிவாசகனை அவள் கண்டாளோ! அவனால் இன்பமுடையதாகும் என்று நான் நினைத்திருந்த அவள்வாழ்க்கை அவனாலேயே சிதறுண்டு போயிற்றே! அந்தோ! பாவி, நானன்றோ எல்லாவற்றுக்கும் காரணமாயிருந்தேன்!" என்று கூறிப் பெருமூச் செறிந்தார்.

கலாவதியின் அன்னை ஒன்றும் சொல்லத் தோற்றாதவளாய் கண்ணீர் வடித்து மௌனமாயிருந்தாள்.

சிறிதுநேரம் சென்றபிறகு அன்பானந்தர் அவளைநோக்கி, "நாம் மனம் வருந்திப் பயனென்ன? 'அன்று எழுதியவன் அழித்தெழுதப் போகிறதில்லை' ஏதோ நம்மாலானவரையில் முயல்வோம். பிறகு நடக்கிறபடி நடக்கிறது' கலாவதி தூங்கினால் நல்லதுதான். நீங்கள் அறை வாயிலருகாகவே இருங்கள். அவளை வெளியிற்போகமட்டும் விட்டு விடாதீர்கள். நான் சென்னைக்குத் தந்தி கொடுத்து, தக்க வைத்தியர் ஒருவரை வரவழைக்கிறேன்" என்றார்

"என்னமோ, கடவுள்தான் கண்பார்க்கவேண்டும்" என்று கூறிவிட்டுக் கலாவதியின் அன்னை, அன்பானந்தர் கூறியபடி கலாவதியின் படுக்கையறையின் வாயிலருகே சென்று விட்டாள்.

அன்பானந்தர், சித்தப் பிரமைக்குச் சிகிச்சைசெய்வதிற் சிறந்த ஆங்கில வைத்தியர் ஒருவரை உடனழைத்துக்கொண்டு உடனே புறப்பட்டுப் பெருந்துறைக்கு வரும்படி வக்கீல் சிவஞானத்துக்கு ஒரு தந்தி கொடுத்தார்.

*   *   *   *

மணிவாசகன் எவ்வாறுளான்? கலாவதியைப் பற்றிய சிந்தனை இன்னும் அவனுக்கு இருக்கிறதா? தன் செயல் நியாயமென்று அவன் நினைக்கிறானா? என்று நாம் சற்று விசாரிப்போம்.

அன்று—உடம்பும் உயிரும் போல ஒருவரையொருவர் நேசித்து வந்த காதலர்கள் இருவரும் ஒருவரைவிட்டு ஒருவர் பிரிவதற்கு ஏற்பட்ட மிகக் கொடிய நாளாகிய அன்று—இரவெல்லாம் மணிவாசகன் உறங்கவில்லை. அவன் ம[illegible]ாத பாடும் பட்டது. தான் செய்த காரியம் நியாயமானதா[illegible]று நெடுநேரம் சிந்தித்தான். அன்பானந்தருடைய உத்தம குணங்களையெல்லாம் அவன் நினைத்தான். கலாவதியின் மாசு மறுவற்ற உத்தம ஒழுக்கங்களை யெல்லாம் எண்ணினான். இருவரில் எவர்மீதும் குற்றம்காண அவனுக்கு இடமில்லை. தன் அன்பிற்கோர் அறிகுறியாக, தமது திரண்ட செல்வத்தை அன்பானந்தர் கலாவதிக்குக் கொடுத்தது அவருடைய பெருமையைக் காட்டுகிறதே யொழிய, அவரிடத்துக் குற்றங் கூறுவதற்கு இடமி

ல்லை, அன்போடு அவர் கொடுத்ததைக் கலாவதி பெற்றுக்கொள்ள மறுத்திருந்தால், அது அவளுக்கு மேன்மையாகுமா? பொருளைக் கருதி அவள் அதை ஏற்றுக்கொண்டிருந்தால், அது அவள் மேன்மைக்குக் குறைவாகலாம். கலாவதி அங்ஙனம் பொருளை இச்சிப்பவளல்லள். அப்படி இச்சிப்பவளாயிருந்தால், அந்தப் பொருளை விட வேறெதை யும், வேறெவரையும் பெரிதாகக் கருதமாட்டாள். ஆனால், அவள் தான் பெற்ற செல்வமெல்லாம் தன் காதலன்பொருட்டே என்று தெளி வாய்க் கூறியிருக்கிறாள். மேலும், அவ்வளவு திரண்ட செல்வத்துக் குத் தான் உரியவளான பிறகு கூட, தன் காதலனிடத்து எப்பொழு தும் போல—அல்லது இன்னும் அதிகமாய்— அன்பும் பட்சமும் காட்டி, அவன் பிரிவிற்குப் பெரிதும் வருந்தி யிருக்கிறாள்.

அவ்வாறாக, அவர்கள் இருவர்மீதும் ஒரு சிறுகுற்றமும் கண்டு பிடிப்பதற்கு மணிவாசகனால் கூடவில்லை. சிறிது யோசித்துப் பார்த் தால் குற்றம் தன் மீதே காணப்படும் என்பதையும் அவன் உணர்ந்தான். உண்மைக் காதலர்களுக்குள் வேறுபாடு இருக்கலாமா? உயர்வு தாழ்வு என்ற விகற்ப உணர்ச்சி உண்டாகலாமா? தானும் அவளும் உடம்பால் இருவரானாலும் உயிரால் ஒருவரே என்று ஏற்பட்டபிறகு யார் செல்வ ரா யிருந்தாலென்ன? யார் ஏழையாயிருந்தாலென்ன? ஒரு ஸ்திரீயிடம் பொருள்பெற்று ஜீவிப்பது அவமானமென்று அவன் கருதினான். அது நியாயமா? உண்மைக்காதல் அவ்வகையான உணர்ச்சிக்கு இடந்தருமா? இவைகளையெல்லாம் நினைக்க நினைக்க, 'நாம் செய்ததுதான் தவறு' என்ற எண்ணம் அவனுக்கு உண்டாயிற்று. ஆயினும் அத் தவற்றை ஒப்புக்கொண்டு தான் செய்த தீங்குகளைச் செம்மைப் படுத்த அவன் முன்வந்தானில்லை. என்? த[illegible]றுமையால்!

அன்று இரவு கழிந்தது. விடியற் காலையில் மணிவாசகனுக்கு அயர்ந்த நித்திரை வந்தது. உறங்கி விட்டான். சூரியன் உச்சிக்கு வந்த பிறகே அவன் உறக்கத்தினின்றும் எழுந்தான். அதன்மேல் ஸ்நானம் செய்துவிட்டு சாப்பிடச் சென்றான். உணவு செல்லவில்லை. சிறிது சாப்பிட்டதோடு எழுந்து விட்டான். கலாவதியின் உருவம் அவன் கண்முன்னேயே இருந்தது. அவளை வேண்டாமென்று ஒதுக்கிவிட்டு

வந்தது, 'வலிய வந்த ஸ்ரீதேவியைக் காலால் உதைத்துத் தள்ளியது' போலாகும் என்பதை எண்ணி வருந்தினான்.

இங்ஙனம் அவன் பலபலநினைத்து வருந்தியிருக்க, ஒன்றையும் பொருட்படுத்தாத 'காலம்' மெல்லமெல்லச் சென்று கொண்டேயிருந்தது. மணி மூன்றாயிற்று. நான்கும் ஆயிற்று. மணிவாசகன் மனத்தில் மற்றொரு எண்ணம் உதித்தது. 'நேற்று கலாவதி வருந்துவதைப் பார்த்திருந்தும் நாம் அவளை நீங்கி வந்தோம். வந்த பிறகு, நாம் செய்தது சரியா அல்லவா என்ற அந்த யோசனையே நமக்குப் பெரிதாயிருந்ததே யொழிய, அவள் எவ்வாறு நம் பிரிவுக்காற்றாது வருந்துகிறாளோ என்ற சிந்தனை சிறிதுகூட இல்லையே. இது தானா உண்மைக் காதல்?' என்று அவன் மனம் அவனையே நிந்தித்தது. அந்த நிந்தனையைப் பொறுக்க மாட்டாமல், அவன் உடனே சென்று கலாவதியைப் பார்த்துவிட்டு வருவதாகத் தீர்மானித்தான். அங்ஙனமே, சத்திரத்தைவிட்டு நீங்கிப் பெருந்துறையை நாடிச் சென்றான்.

கலாவதியின் வீட்டுக்குச் செல்லும் வழியில் கோயில் தெப்பக் குளம் ஒன்றுள்ளது. மணிவாசகன் அக்குளத்தருகே சென்று விட்டான். அப்பொழுது குளத்தின் அக்கரையின் ஓரமாக ஒரு ஸ்திரீ சென்று கொண்டிருப்பதை அவன் கண்டான். அவளை உற்று நோக்கினான். அவள் கலாவதியாகவே காணப்பட்டாள். ஆனால், அவள் தன் தலை நிறையப் பலவகைப் பூக்களையும் தழைகளையும் செருகியிருந்தாள். வலக்கையில் பூவும் தழையும் நிறைந்த நீண்ட மரக்கிளை ஒன்றை வைத்து வீசிக்கொண்டு சென்றாள். தன்னுடைய கலாவதி இவ்விதமான கோலத்தோடு செல்லக் காரணம் என்னவென்று ஐயமும் ஆச்சரியமுங் கொண்டவனாய், அவன் கையைத்தட்டி, "கலாவதி! கலாவதி!" என்று இரண்டு மூன்று [illegible] கூப்பிட்டான். அந்தச் சத்தத்தைக்கேட்டு அவள் நின்று திரும்ப[illegible]த்தாள். மணிவாசகன் அவளை உற்றுப் பார்த்தான். கலாவதிதான்! அந்த சுந்தரமுகம் கலாவதியின் முகந்தான்! அதில் தடையில்லை. மற்றொரு முறை உரத்து, 'கலாவதி! நீ தானா நிற்கிறது?', என்றான் மணிவாசகன்.

"ஆம், நான் தான். இதோ வந்து விட்டேன். காதலா!" என்று கூறி, ஆனந்தத்தோடு கலாவதி, மணிவாசகன் இருக்கு மிடத்தை

விரைவிலடைய எண்ணி, குளத்தைத் தாண்டினாள்! அந்தோ! குளத்தைத் தாண்டி அக்கரை சேர முடியுமோ? கலாவதி தடாகத்தில் விழுந்து விட்டாள்!

அதைக் கண்ட மணிவாசகன் திடுக்கிட்டு நெஞ்சம் நடுங்கி, தானும் குளத்தில் குதித்து அவளை எடுக்கச் சென்றான். கலாவதி நீரில் அமிழ்ந்து விட்டாள் மணிவாசகன் நீந்திச் சென்று அவள் விழுந்த இடத்தில் மூழ்கித் தேடினான். கலாவதியின் கூந்தல் அவன் கையிற் சிக்கியது. உடனே அவளைத் தூக்கிக் கொண்டு வெளிவந்து நீந்திக் கரை சேர்ந்தான். கலாவதி உடம்பு கனத்திருந்தது. சுவாசம் வரவில்லை. எல்லாவற்றிற்கும் அவளை வீட்டுக்குக் கொண்டுபோய் விடுவோமென்று மணிவாசகன் தீர்மானித்து அவ்விதமே கொண்டு சென்றான்.

அன்பானந்தர், கலாவதி வீட்டுக் கூடத்தில் ஒரு தூணில் சாய்ந்து கொண்டு மிகவும் கவலையுடன் உட்கார்ந்திருந்தார். சென்ற ஒரு நாளில் அவர் உடம்பு அரை உடம்பாய் இளைத்து விட்டது. மணிவாசகன் கலாவதியைத் தூக்கிக் கொண்டு வருவதைக்கண்ட அவர் ஒன்றும்விளங்காமல் திகிலடைந்து 'என்ன! என்ன!' என்று எழுந்தார். மணிவாசகன், கட்டிலின்மீது கலாவதியைக் கிடத்திவிட்டு, "கலாவதி குளத்தில் விழுந்து விட்டாள். நான் கண்டு எடுத்து வந்தேன்" என்றான்.

அன்பானந்தர் பரபரப்புடன் சென்று அவள் நாசியிற் கை வைத்துப் பார்த்தார். சுவாசமில்லை. உடனே அவர் மணிவாசகனை நோக்கி "ஆ, பாவி! என் பொக்கிஷத்தைக் கொள்ளை கொண்டாயே?" என்று கூறி மூர்ச்சித்து விழுந்து விட்டார்.

அதே சமயத்தில் வீட்டெதிரில் ஒரு மோட்டார் வண்டி வந்து நின்றது. அதிலிருந்து சிவ[illegible] ஒரு 'டாக்டரும்' இறங்கினார்கள். மணிவாசகன் அவர்களை உள்ளழைத்துச் சென்றான். அன்பானந்தர் மூர்ச்சித்துக் கிடப்பதையும், கலாவதி கட்டிலின் மேற் கிடத்தப்பட்டிருப்பதையும் கண்ட சிவஞானம், 'என்ன இது?' என்றார். மணிவாசகன் நடந்தவிஷயத்தைச் சுருக்கமாகக் கூறினான். உடனே டாக்டர் கலாவதியின் கையைத் தொட்டுப் பார்த்துவிட்டு, "ஒன்றும் ஆபத்தில்லை. பயப்படவேண்டாம்" என்று கூறித் தம் சட்டைப் பை

யிலிருந்து ஒரு சிறு சீசாவை எடுத்துத் திறந்து அதை கலாவதியின் நாசியிற் காட்டினர். உடனே கலாவதி கண் திறந்து பார்த்தாள். மணி வாசகன் அருகே நிற்பதைக் கண்டாள். அவள் களைப்பு, நோய், யாவும் பறந்தோடிவிட்டன. சுகசரீரிபோல் விரைந்தெழுந்து, "ஆ, என் காதலா!" என்று மணிவாசகனை ஆவலோடு கட்டிக்கொண்டாள்.

டாக்டர் அன்பானந்தர் கையைப் பார்த்தார். அவர் மிகவும் பலவீனப்பட்டிருப்பதாகவும், மருந்து கொடுத்தால் தாங்கக்கூடியவரல்லரென்றும் தெரிவித்தார். அதன் மேல் கலாவதியும் மணிவாசகனும் அன்பானந்தரண்டை வந்தார்கள். "ஐயா!" என்று கூப்பிட்டாள் கலாவதி. அவள் குரலைக் கேட்டு அன்பானந்தர் மெல்லக் கண்விழித்துப் பார்த்தார்; கலாவதியும் மணிவாசகனும் சேர்ந்து நிற்பதைக்கண்டு அவர்கள் இருவர் கரத்தையும் பற்றி ஒன்று சேர்த்து, 'கடவுள் உங்களை ஆசீர்வதிப்பாராக' என்று வாழ்த்துவது போல மேல் நோக்கினர். அப்பால் அவர் பார்வை கீழ் நோக்கவில்லை !

* * * * *

குளத்தில் விழுந்த அதிர்ச்சியாலும், மணிவாசகனைக் கண்ட ஆனந்தத்தினாலும், கலாவதி சித்தப்பிரமை நீங்கப் பெற்றாள். ஆனால் அன்பானந்தர் மரணம், மீண்டும் அவள் மனோநிலையைக் குலைத்து விடத் தக்கதாக அவ்வளவு துக்கத்தை உண்டாக்கிவிட்டது. மணிவாசகன் முதலிய மற்றையோரும் மிகவும் துக்கித்தார்கள். யார் துக்கித்து என்ன செய்வது ? கல்வி, ஞானம், பொருள் யாவற்றிலும் செல்வராய், அருளே உருவெடுத்து உலவிவந்ததுபோல நம்மோடு இதுகாறும் உலவிவந்த உத்தமர் இறந்துவிட்ட[illegible] கொடிய உண்மையினின்று தப்பவழியில்லை. அவர் விழைந்[illegible] செல்வம் கிடைத்தும் அதன் இன்பத்தை அனுபவிக்கப் போது[illegible] காலம் இல்லாமற்போனது கொடிது, கொடிது ! கலாவதியின் வேண்டுகோளின்மேல், அவர் உடலம் தகனம் செய்யப்படாமல் சமாதி வைக்கப்பட்டது. முத்தையன் கொடுத்த அரை ரூபா பணமும் அவர் கையிலேயே வைத்து சமாதியில்வைக்கப்பட்டது- அவர் இறந்த மறுநாள் சூரன் இறந்து விட்டது. அதை அவர் சமாதிக்கருகேயே புதைத்துவிட்டார்கள்.

* * * * *

கலாவதியை விவாகம் செய்து கொள்வதற்கு மணிவாசகன் இசைந்தான் என்பதை நாம் சொல்ல வேண்டியதில்லை. முதலிலேயே இசைந்திருப்பானானால் அன்பானந்தர் ஆயுள் இன்னும் சிறிது காலம் நீடித்திருக்கலாம். ஆனால், அப்பொழுது, மணிவாசகனும் கலாவதியும் ஒருவருக்கொருவர் இப்பொழுது உள்ளதுபோல அவ்வளவு அத்யந்த நேசமுடையவர்களாயிருப்பார்களா என்பது சந்தேகம் சுபம்!



PRINTED BY S. MURTHY AND CO., AT THE "KAPALEE" PRESS MADRAS.